319

உ

கணபதி துணை.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.



# பெரியபுராணக் கீர்த்தனை.

முதற்பாகம்.

இஃது

இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கை ஸமஸ்தானத்தைச் சேர்ந்த
புவனேக வீரபாண்டியபுரமென்ற பிறி நாமம் வகித்த
மழவாபுரியில்

மகா-ா-ா-ஸ்ரீ

சிதம்பர பாரதிகளென்ற சின்னஸாமி பாரதிகளாலும்

ஷையாரின் குமாரர்களான

(1) அஷ்டாவதானம் சுந்தரமய்யர்,

(2) சுப்பராமய்யரென்ற இராமசாமி அய்யராலும்

இயற்றப்பெற்று

ஷை சுப்பராமய்யரென்ற இராமஸ்வாமி அய்யரால்

காரைக்குடி :
ஊழியன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப் பெற்றது.

1929.

இதன் விலை ரூ. 2-0-0.





உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

ஸ்ரீமதகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்த, நிராகார, நிர்க்குண நிராமய நிருபம ஜோதிர்மய ரூபமுள்ள, ஸுந்தரேசப் பெருமான் மீனாட்சி ஸமேதராக ராஜ்ய பரிபாலனத்தைச் செய்துவரும் பாண்ட்ய மகாதேசத்தின் ராஜதானியாக விளங்கும், துவாத சாந்த க்ஷேத்திரமென்னும் மதுரைமாநகருக்குக் கீழ்புரம் 12-மைல் தூரத்திலுள்ள புஷ்பவன காசியென்றும் விளங்கும் திருப்பூவணத்திற்குத் தென்கிழக்காக வுள்ளதும், சிவகங்கைச் சீர்மையைச் சார்ந்ததுமான, புவனேகவீர பாண்ட்யபுரமென்றும், மழவாபுரியென்றும் பன்னாமங்களால் விளங்கப்பெற்றதும், தக்ஷிணவாகினியாகச் செல்லும் வைகைமாநதிக்கு மேல்கரையில் உள்ளதுமான, மழவராயனேந்தல் என்ற ஓர் நகர், தமிழ் ஸமஸ்கிருத ஸங்கீத ஸாஹித்யம் நிறைந்த கல்விகளால் தொன்றுதொட்டுச் சிறந்து விளங்கும் கல்விமான்கள் நிறைந்துவரும் க்யாதியோடு கூடியுள்ளது. ஷை நகரில், மறையவர் குலத்தில், ராஜகெம்பீர பிரகஜ் ஜனர்களுக்குள், வாதூல கோத்ரோத்பவரான ஸுப்ரமண்ய தீட்சதர் என்ற ஒரு மகானுடைய உதரத்தில் ஜனித்தவர்கள் நான்கு குமாரர்கள். அவர்களுக்குள் ஜேஷ்டகுமாரர் சுப்பராமைய ரென்ற திருநாமம் வகித்தவர். அவர் தமிழ்க்கல்வி முற்றும் கற்றுணர்ந்தவராக, ஸஹஸ்ராவதானமும் நிரூடியாகச்செய்து வந்தனர். அம்மகான் புதுக்கோட்டை H. H. மகாராஜா இராமச்சந்த்ரத் தொண்டமான் பகதூர் அவர்கள் முன்பாக ஷை ஸஹஸ்ராவதானத்தையும் செய்து, அவ்வரசரால் அளிக்கப்பெற்ற தோடா, வீரசங்கிலி, சால்வை, பல்லக்கு முதலிய பரிசுகளடைந்தவராகமிருந்த க்யாதியற்று விளங்கினர். அவர்க்கநுஜரான சிதம்பர பாரதிகளென்ற சின்னஸாமி பாரதிகள் என்னைப்பெற்ற தந்தையாவர். அவர் தமிழ்க்கல்வியில் இயலிசை நாடகமென்னும் முத்தமிழ்களையும் இலக்கண விலக்கியங்களுடன் கற்றுணர்ந்து, ஸங்கீத ஸாஹித்யங்களிற் சிறந்தவராகவும், இசைத்தமிழில் மிக்க விருப்பமுற்றவராகவுமிருந்து அடியில் கண்டிருக்கும் அநேக க்ரந்தங்களை வரைந்திருக்கின்றனர். ஷை கல்வித்திறமையால் சிவகங்கை, இராமநாதபுரம் புதுக்கோட்டை ஸமஸ்தானங்களுக்கும், மற்றுமிடங்களுக்கும் சென்று தக்க ஸம்மானங்களையும் பெற்றுவந்தனர். அவர் இல்லறவாழ்க்கையைச் சிறப்புற நடாத்தி, ஆத்மார்த்தமான மார்க்கத்தை விரும்பினவராகப், பெரிய புராணத்தையும், (உருக்மணி கல்யாணம், துருவ சரித்திரம், குசேலசரித்திரம், அம்பரீஷ) சரித்திரங்களென்னும், விஷ்ணு சரித்திரங்களையும், சதாகால க்ஷேமங்களுக்குரிய, ஸாகீ, தெண்டீ, ஆர்யா, அபங்கு, கேகாவளி முதலிய, மகாராஷ்ட்ர தாடிகளடங்கிய, வர்ணமெட்டு

களும் புராதனக் கீர்த்தனங்கள் போன்ற கீர்த்தனங்களும் வெண்பா கலித்துறை விருத்த முதலான பாக்களுடனடங்கப் பெற்றுவரும் சரித்திரங்களாகத் தமிழ்ப் பாஷையில் செய்திருக்கின்றனர். அப்பனுவல்களில் திரிபு, எமகம், சிலேடை, சந்தம், விசேஷக் கற்பனைகளும் தோன்றுவன. ஷை பெரிய புராணத்தில் முக்யமாக வேண்டிய சில சரித்திரங்களைப் பொறுக்கியெடுத்து சுமார் அரைவாசிக்குமேல் பூர்த்திசெய்து, ஆபத் ஸந்நியாஸம் பெற்றவராக, ஹேவிளம்பிவருஷம் ஆடிமாதம் கிருஷ்ணபட்சம்பஞ்சமியில் ஸித்தியடைந்தனர். அவருக்கு ஜனித்தவர்களான நான்கு குமாரர்களுக்குள், ஜேஷ்ட குமாரரான சுப்ரமண்யய்ய ரென்ற சுப்பய்யர், தமிழ் ஸங்கீத ஸாஹித்ய வித்தைகளில் சிறந்தவராக நல்லிசையுடன் கூடின கானத்தோடு, ஷையாருக்கு அநுஜராகும் தமிழ் சங்கீத சாஹித்ய அஷ்டாவதான வித்தைகளிலும் சிறந்த அஷ்டாவதான ஸுந்தரமய்யருடைய பிரஸங்கத்துடன் ஷை சரித்திரங்களை கதா ரூபமாகப் பிரசுரம் செய்துவந்தார். அதற்கப்பால் யானும் மேற்கண்ட விதம் நல்ல ஜமாக்களுடன் அவ்விதமே பிரசுரமும் செய்து வருகிறேன். ஷை பெரிய புராணம் பூர்த்தியாகாமல் அறைகுறையாக முடிந்திருந்தமையால் எனக்கு ஜேஷ்ட சகோதரரான அஷ்டாவதான ஸுந்தரமய்யரும் அவர்க்கநுஜனை யானும் ஷை புராணத்தில் மீதமாக நின்ற சரித்திரங்களை எங்கள் பிதா அவர்களின் மார்க்கத்தை யநுசரித்து ஸாஹித்யஞ் செய்து புராணத்தைப் பூர்த்தியும் செய்திருக்கிறோம். ஷை சரித்திரங்களில் இன்ன யின்ன சரித்திரங்கள் இன்ன யின்னவரால் பாடப்பெற்ற தென்பதைக் காட்டக்கூடிய சில அடையாளங்களை அடியில் வரைந்திருக்கிறேன். அதுமூலம் தெரிந்துகொள்ள வேண்டியது. ஷை பெரிய புராணத்தை அச்சியற்றி வெளியில் பிரஸித்தி செய்யும் விருப்புற்றவனாகச் சில கனவான்களின் உதவிகளால் காரைக்காலம்மை சரித்திரம் வரையில் அச்சிட்டிருக்கிறேன். முற்றிலும் அச்சிடத் தற்காலம் பொருளுதவி யில்லாமையால், அதுவரையிலுள்ளதை முதற் பாகமாகக் கண்டிருக்கிறேன். மற்றவைகளை யிரண்டாம் பாகமாகவும் அச்சிட்டு வெளியேற்றவும் முயற்சி செய்கிறேன். அதற்கும் ஆநந்த நடராஜன் க்ருபை செய்வாராக. ஷை விஷ்ணு சரித்ரங்கள் நான்கும் அடங்கப்பெற்ற ஒரு புஸ்தகமாக அச்சிட்டாகிவிட்டது. ஷை யென் பிதா அவர்களால் இயற்றப்பெற்ற கிரந்தங்களாவன. (1) பெரியபுராணக் கீர்த்தனம், (2) மேலே கூறப்பெற்ற விஷ்ணு சரித்திரங்கள், (3) ஞானாநந்தப் பேரின்பக் கீர்த்தனம் (4) மதுரை மீனாட்சியம்மையின் மீது பலசந்தக்கும்மி (5) திருக்கோகர்ணம் பிரதம்பாள்மீது பலசந்தக்கும்மி (6) குன்றக்குடி ஷண்முகநாதன் மீது மயூரகிரிநாதர் வண்ணம் இவைகளச்சிடப் பெற்றிருக்கின்றன.

(1) * என் பிதா அவர்களின் ஸாஹித்யத்தைக் காட்டக்கூடிய அடையாளம்.

(2) ‡ என் ஜேஷ்டப் பிராதா அஷ்டாவதானம் ஸுந்தரமய்யரின் ஸாஹித்ய அடையாளம்.

(3) † என்னுடைய ஸாஹித்யத்தின் அடையாளம்.

இங்ஙனம்,
சுப்பராமய்யரென்ற
**இராமசுவாமி அய்யர்.**

கணபதி துணை.
சிவமயம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 1 | 10 | யி | வி |
| 8 | 1 | ணம் | ணை |
| 12 | 4 | பென்ன | பல்ல |
| ௸ | 5 | கென்ன | கல்ல |
| ௸ | 7 | பகலினேரமென | பகலில் காண்பதற்கு |
| 17 | 1 | | † |
| 26 | 10 | மல | லம் |
| 28 | 7 | குமி | கி |
| ௸ | 27 | குமாஞற் | குமா-ஞற் |
| 33 | 6 | ஸிர்ய | ஸியர் |
| ௸ | 7 | ரில | ரில் |
| 36 | 21 | பெறும | பெறும் |
| 62 | 23 | சாப்பு | மிசிரசாப்பு |
| 66 | 15 | கினிடை | கிடை |
| 76 | 15 | பொருக்காற் | பொருக்கார் |
| ௸ | 24 | வன்ன | வண்ண |
| 77 | 14 | மனக் | மனக்கம் |
| ௸ | ௸ | கிறை | கிரை |
| ௸ | 15 | மனக் | மனக்கம் |
| 86 | 12 | கைந் | கைநந் |
| 89 | 11 | கிரு | க்ரு |
| 90 | 11 | நிர்ம்ப | நிர்ப்ப |
| ௸ | 16 | கற்பன் | கற்பின் |
| 92 | 21 | பற்பு | வற்பு |
| 94 | 10 | வோடு | லோடு |
| 95 | 16 | நாம | நாடி |
| 96 | 18 | மெப்ய | பெய்ய |
| 97 | 2 | ——— | கணபதி துணை |
| 103 | 4 | யுனம் | யுளம் |
| ௸ | 7 | செய்சீ | செய்தீ |
| 111 | 5 | ரூபப | ரூபவ |
| ௸ | 7 | உள்ள | உள்ளு |
| 112 | 2 | ——— | கணபதி துணை |
| 114 | 10 | தனம் | தனப் |
| 116 | 8 | லத்தானே | லந்தானே |
| ௸ | 10 | சால | சாவி |

| | | | |
|---|---|---|---|
| 118 | 6 | வரு | வறு |
| 120 | 18 | சரித்திரங்கள் | சரித்திரங்கள் 5-க்கு |
| 121 | 1 | ——— | கணபதி துணை |
| 123 | 15 | சுடல் | அடல் |
| ௸ | 24 | தலை | தனை |
| 126 | 11 | கவி | கலி |
| 131 | 14 | சோர் | சேரர் |
| 134 | 7 | பொன்ளி | பொன்னி |
| 146 | 15 | ——— | 2-வது நில்லைவாழந் தணர் சருக்கம் முற்றுப் பெற்றது. |
| ௸ | 19 | ——— | 3-வது இலைமலிந்த சருக்கம் |
| 147 | 13 | ஞம்பி | ஞமபி |
| 151 | 16 | தரித | கதெ |
| 201 | 21 | ருர | ரரு |
| 265 | 13 | சில | சிவ |
| 282 | 23 | யெழி | யெழு |
| 284 | 11 | ——— | 3-வது இலைமலிந்த சருக்கம் முற்றுப் பெற்றது |
| ௸ | 15 | ——— | 4-வது திருநின்ற சருக்கம் |
| 286 | 19 | யாருககு | யாருக்கு |
| 288 | 14 | மேயயா | மையோ |
| 290 | 2 | ——— | (3) |
| 293 | 14 | தாங்கூ | தாங்கு |
| 296 | 2 | நமடி | நமதடி |
| ௸ | 6 | கெள்ளை | கெளளை |
| 298 | 16 | முரிக | முரிக் |
| 337 | 15 | மும | மும் |
| 339 | 17 | பாவு | பாவு |
| 340 | 4 | கன் | கண் |
| ௸ | 11 | மா | மர |
| 341 | 27 | செனறு | சென்று |
| ௸ | 33 | தவ | தவர் |
| 343 | 11 | மாற்ற | மாற்றப் |
| 344 | 6 | நாடி | நாடு |



உ

கணபதி துணை

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராணக் கீர்த்தனை.

## கடவுள் வாழ்த்து.

### விநாயகர் துதி.

காப்பு.

(வெண்பா)

ஓங்குதிருத் தொண்டர்க் குரியபுரா ணத்தையிசை
தேங்கயிவண் கீர்த்தனமாச் செப்புதற்குப்—பாங்கினுற
வந்தருளுஞ் சங்கரியின் மைந்தனெனு மைங்கரனுந்
தந்திமுகன் றண்கமலத் தாள்.

### பெரியபுராணத் திருவிருத்தம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

### விநாயகர் துதி.

இராகம்—தனசரி. தாளம்—ஆதி.

**கண்ணிகள்.**

க. கஜவதன கருணாகர மூர்த்தே நிஜவர பக்தஸம் ரட்சண [கீர்த்தே

உ. பாசாங்குசதர பங்கஜ ஹஸ்த ஈசாத்மஜஜக தீசப்பிர ஸித்த

ங. ஸோமகலாதர ஸுந்தர வர்ண ஸாமகா னப்ரிய சாமர கர்ண
ச. சிவகதாஸுமதிம் மேருகுரு சீல கவிநுத ஜகதா சிருதபரி பால

## சுப்ரமண்யர் துதி.

### கலித்துறை.

சுத்தியில் வெள்ளியும் ரஜ்ஜுவிற் சர்ப்பமுந் தோன்றுதலை
மித்தையென் றெண்ணி நிஜந்தேர்ந்தின் பப்பெரு வெள்ளமதிற்
பத்தியின் மூழ்கிய தொண்டர் விலாஸம் பகரவருள்
சத்தி தாரகரு ணாகர ஸர்வ தயாபரனே.

பதம். இராகம்—சென்ஸ்ஜுருட்டி. தாளம்—ஆதி.

### பல்லவி.

கிருபை செய்குவாய் குகனே (கிருபை)

### அநுபல்லவி.

பிரபல பக்த சரி தஞ்சொல நீயே—கிருபை

### சரணங்கள்.

க. சுந்தரம் உன்தனை வந்தனை செய்யுமெ
னந்த ரங்க மதில் வந்திருந் தினிய (கிருபை)

உ. நித்யஸு மித்ரப வித்ர பக்தச
ரித்ரவி சித்ரம கத்வமு ரைத்திடக் (கிருபை)

ங. மதனஜ னகன்மகிழ் மருக முருக சர
வணபவ ஸுந் தரவர மிக வுதவிக் (கிருபை)

ச. சுராதி பர்கள்பணி வரா ஸுமுகஸுந்
தரா கமல கரா சிரகு ருபரா (கிருபை).

## ஸாம்பசிவ ஸ்துதி.

பதம். இராகம்—கல்யாணி. தாளம்—ரூபகம்.

### பல்லவி.

ஸாம்பசிவ கைலாஸவாஸ சங்கராமாம் பாஹிபாஹி (ஸாம்ப)

அநுபல்லவி.

ஜாம்பூநத சிகர மேரு தநுகர சுபகர மிருகதர (ஸாம்ப)

சரணங்கள்.

௧. பஞ்சவதன பாப பஞ்சன பக்தஜனாஜன மனோ ரஞ்சன
[மஞ்சுளநட னம்புரிந்திடும்
வனஜசரண அருணகிரண மகுடபரண உரகதரண (ஸாம்ப)

௨. காமிதார்த்த பலதாயக ஸ்வாமின் முரஹரி ஸாயக கோமள
[பார்வதீநாயக
குஞ்சரனைக் குருபரனைக் கொஞ்சியணைக்குங்கருணை (ஸாம்ப)

௩. முநிமாநஸ ராஜ ஹம்ஸ முகுர ஹிருதய பரம ஹம்ஸ
[விருத புஷ்ப பாண ஹிம்ஸ
விநோத ரஸ நடனப்ரிய மநோஹரவ லயவிக்ரய (ஸாம்ப)

## ஸரஸ்வதி ஸ்துதி.

பதம். இராகம்—முகாரி. தாளம்—ஆதி.

பல்லவி.

நாவில்வந் தருள் செய்குவாய் கமல வாணி (நாவில்)

அநுபல்லவி.

பாவிலுயர்ந்தசிவ பரகதையைச் செய்வதற்
காவலுடனே பணிந்தேன் மிகத் துணிந்தேன் (நாவில்).

சரணம்.

௧. பங்கஜன் மகிழ் மின்னே பாரோர்து திக்கும் பொன்னே
நின்கரு ணையினாற்சொன்னேன் கலையை யின்னே (நாவில்).

## நடராஜ ஸ்துதி.

பதம், இராகம்—கானடா. தாளம்—ஆதி.

பல்லவி.

சிதம்பர நடேச சிவகாமி நேச (சிதம்பர).

அநுபல்லவி.

முதம் பெருகும் தொண்டர் சரிதந் தனைப்புகல
முதல்வனே இதமொடுந் ததியிதி லருள்வாய் (சிதம்)

சரணங்கள்.

க: அன்பர்கள் கொண்டாட அண்டர்களும் நாடத்
தும்புரு நாரதர் துதித்துக் கீதம்பாட
அம்புஜ மலரடி யணிகொள் நடன மாட இலங்கும் (சிதம்)

உ. ஸாம கான லோல ஸர்து ஜன பால
காமத கனகர திருதவர மிருகசூல கால கால
கரு ணுநய னவிசால (சிதம்)

சிவகாமசுந்தரி ஸ்துதி.

பதம். இராகம்—சங்கராபரணம். தாளம்—ரூபகம்.

பல்லவி.

கருணைபு ரிந்து ரட்சி யம்மா சிவ காமஸுந் தரியபி
ராமநி ரந்தரி (கருணை)

அநுபல்லவி.

தருண மிதுதொண் டர்கள் சரிதந் தனைப்பகரத்
தாயே யருள்புரி குவாயே திருஜகன் மாயே (கருணை)

சரணங்கள்.

அம்பலத் தினில்நட னம்புரிந் திடும்பாதர்
அகமகிழும்சர்வாணி அன்பர்கட் கின்ப மளிக்கும பயபாணி
வம்பவிழ் மலர் செறிந் தும்பிரவை யுறும் வேணி
வரதே நித்ய கல்யாணி வந்தருள் செய்புராணி (கருணை)

ஸாம கான ப்ரியே சதுரே திரிபுரே வரே
ஸகல ஜகதா தாரி எனக்கு வரந் தந்தருள் கிருபாவாரி
ஸோமவ தனே தொழுந் தொண்டர்கட் குபகாரி
சுத்தநிர் மலமான ஜோதி ஹார சிருங்காரி (கருணை)

## குரு வணக்கம். சங்கராசாரியர் துதி.

பதம். இராகம்—பியாகு. தாளம்—ரூபகம்.

பல்லவி.

லோக குருவே சங்கர நாமதருவே

அநுபல்லவி.

அநேக ப்ரபஞ்ச வுயிர்க் கருவே பவ ஸாகர
தரண மெய்யுருவே உரு அருவே ஞானத் திருவே (லோக)

சரணங்கள்.

க. ஸச்சிதா னந்தவி க்ரகமே சதுஷ்
ஷஷ்டிக லைநிறைந்த கிரகமே விஷயநி க்ரகமே
ஸர்வஸங் கிரகமே (லோக)

உ. ஷண் மதஸ் தாபன பதியே பக்த ஸம்ரக்ஷணகருணாநிதியே
போத மதியே நீயே கதியே (லோக)

ந. பக்த சரிதஞ்சொலி வணமே யெனப்
பசுரவந் தருள்வாய்ஸத் குணமே மறைமலர் மணமே
ஒளியின் குணமே (லோக)

## நால்வர் துதி.

விருத்தம்.

சீருலவு தோணிநகர் தனிலுற்ற வமையுமை
திருமுலைப் பாலயின்ற
செல்வமலி சம்பந்த ரமணர்தூர்ச் செய்கையிற்
றீயவிட முண்டு பின்பு
காருலவு கடலிடைக் கற்றோணி மீதில்வரு
கருணையாளர் தொண்ட ரப்பர்
கண்ணியம் பொலிதிருத் தொண்டத்தொகைக்குமுற்
காரண ரெனச் சிறந்த

பேருலவு மாலால ஸுந்தரர் பெருந்துறைப்
பிஞ்ஞகற் கடிமை யுற்றுப்
பிட்டுக்கு மண்சுமந் திடவரனையுஞ்செய்
பிரஸித்த மணி வாசகருமாம்
நேருலவு மித்தொண்டர் கருணையுற் றிடுமிவ
ணிகழ்த்திடத் தொண்டர் சரிதம்
நிறையு மிசை பரவயிசை யமரவுயர் கீதங்கள்
நீணிலத் திலக மாதோ.

## மற்றத் தொண்டர்கள் துதி.

### விருத்தம்.

ஆரனடி மலரின் பக்தி யன்புயர் குருவின் பக்தி
உரியதொண் டர்களின் பக்தி யுண்மையிற் செய்ததொண்டர்
அரியதாஞ் சரிதந் தன்னை யமையுங்கீர்த் தனங்க ளாகப்
பரவிடச் சங்க ரன்றண் பதமல ரருள்க மாதோ.

## புராணப் பயன்.

பதம். இராகம்—ஆரபி. தாளம்—ஆதி.

### பல்லவி.

தொண்டர்ச ரித்திர மிது பெரிதே யதன்மகிமை
சொல்ல யெவர்க்கு மரிதே. (தொண்டர்)

### அநுபல்லவி.

அண்டர் புகழும் நீல கண்ட ரடி யிணையை
யநு தினம் பரவிடு மனமுய ரினியநற் (றொண்டர்)

### சரணங்கள்

க. படிப்ப வருக்கு மிதைப் படித்துக் கேட்ப வர்க்கும்
பலன்கள் மிகவே சேரும்—இந்தப்
படிக்கு ளிகத்திற் புத்திர மித்ர களத்திரங் களும்
பலிக்கச் செல்வங்க ளாரும்

அடுத்தடுத் துமனோபீஷ் டங்களும் நிறைவேறு
மனவர தமுமன தன்புமி குந்துகூறும் (தொண்டர்)

உ. பக்திவ ழியில்மனம் பதிந்தா னைப்பணிந்து
பரவநல் வழி காட்டும்—வெகு
மித்தை யுலகிற் கெட்ட வழியில் திரிபவர்துர்
வினைகளி னையே யோட்டும்
எத்தினங் களுந்துன்ப மிணையும் நெறியில் வாட்டு
மிகழும்ப வம்விலக்கி யினியமுக் தியில்நாட்டும் (தொண்)

## புராணக் கீர்த்தன வரலாறு.

### விருத்தம்.

சுந்தரர்செய் திருத்தொண்டத் தொகையைக் கொண்டு
தம்பிமுகன் றொண்டர்நம்பி யாண்டார் நம்பி
யுந்தரமா யுரைத்தவந்தா தியினைப்போல
வுலகமகிழ் சேக்கிழா ரரிதிற் செய்த
சுந்தரமாம் பெரியபுரா ணத்தைக் கொண்டு
சுதியிசையை முன்னிடுங்கீர்த் தனங்களாக
இந்துதரன் கருணையொடு மியம்பப் பெற்ற
விச்சரிதந் தனக்கரன்முன் னிருக்க மாதோ.

## அவையடக்கம்.

ஸவாய். இராகம்—குறிஞ்சி. தாளம்—அடதாளச்சாப்பு.

### கண்ணிகள்.

க. பக்தச ரித்ரவி சித்ரமகத்துவ முரைத்திடு முத்தம ஸத்
[குணர் நீரே
நித்திய ஸுகப்பெரு மைப்பொருள் பெற்றவர் புத்தியி லெற்
[கொரு புத்திசொல் வீரே
உ. ஈசரி சைசொல்ல வாசைகொண் டேன்பரி காசமென்
[றெண்ணும லேசிறி யேனே

வாஸ மிகுமுங்கள் நேசப லத்தினு லேசொல்கி றே
[னிரண் டிங்குறி யேனே.

ரு. தங்கள்செ விக்கிந்தப் புன்கவி மெல்லத் தழுவில துவும்பெ
[ருங்கவி யாமே
பங்கமு றுஞ்ஜல தாரைத்தூர் நீரும்செ லுங்கதி யாலது
[வும்நதி யாமே.

சு. அண்டர்பு கழ்நீல கண்டர்தம் நாமமாங் கண்டசே ரித்திரத்தி
[லுண்டதும் நீரே
தண்டில த்தாலுமி நன்றென வுங்கொள்வ துண்டது
[போலென் சொற் கொண்டருள் வீரே.

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

| | |
|---|---|
| வெண்பா க. | விருத்தங்கள் ச. |
| கண்ணிகள் க. | கலித்துறை க. |
| பதம் எ. | ஸவாய் க. |

ஆக கரு.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# திரு நாட்டுச் சிறப்பு.

## ஸாகீ.

க. பாட்டியற் றமிழுரை பயின்ற வெல்லையுட்
கோட்டுப் பனிவரைக் குன்றின்மேலே
சூட்டிய வளர்புலிச் சோழர் பொன்னி
நாடென் றுந் துலங்குமுயர்வி னாலே.

உ. குறுமுனி தருநீர் கமண்டலத் தினிற்பொழி
கோலக் காவிரியி னாலே
திருவுயர் புவிமடந் தையின்மார் பினில்நித்
திலத்தா மமென் பாரே.

௩. சைய மால்வரை தோன்றித் தரணிமகள்
தனக்குச் செவிலியென வாரும்
வையகம் பல்லுயிர் வளர்த்துநா டொறுமுய்ய
மகிழ்ந்தளித் தூட்டுநீர் சேரும்.

௪. * மாலி னுந்திச்சுழி மலர்தன் மேல்வரும்
வகையிற் பல்லுயிர் தரலாலே
கோலநற் குண்டிகை தாங்கலான் முகனெனக்
குலவும் பொன்னிநதி மேன்மேலே.

* பிரமனுக்கும் காவிரிக்கும் சிலேடை:—பிரமனைக் குறிக்குங்கால், திருமாலினது உந்திச் சுழிமலர்மேல், தோன்றி வருகின்ற தன்மையாலும், பலவுயிர்களையும்படைத்தலாலும், அழகிய கமண்டலத்தைத்தாங்குதலாலும் என்றும்; காவிரியைக் குறிக்குங்கால், பெருமையால் அகில் பொன் மணி முதலியவற்றை வீசி யெறிந்து, நீர்ச்சுழிகளும் மலர்களும் தன்மேல் பரவிவருகிறதன்மையாலும், நீர்வாழ்கின்ற வுயிர்களைக்கொடுத்தலாலும், அகத்தியரது கமண்டலத்தால் தாங்கப்படுதலாலும், என்றும் பொருள்கொள்க.

௫. திங்கள் சூடிய முடிச்சிகரத் துச்சியிற்
செழிக்கும் வெண்டலை நுரையேய
எங்கெணும் செலும் பொனிநதி யான்முடி
யிழியுங் கங்கையென வேபாய.

௬. வண்ண நீள்வரை தரப்பே ரறங்களை
வளர்த்திடு மிகையி னாலே
அண்ணல் பாகத்துடை யம்பிகை கருணைபோ
லமர்ந்தது மேன்மேலே.

விருத்தம்.

‡ வம்புலா மலர்கள் தாங்கி வழிபடு நீராற் றுய்ய
செம்பொன் வார் கரையி லெண்ணிற் சிவாலயத் தெம்பி ரானை
யின்பமா யரா இத்து யிலங்கிடப் பொன்னி யாறு
உம்பர்நா யகர்பா லன்பை யுற்றவர் போன்ற தம்மா.

காவடிச்சிந்து செந்தில் மாநக-ரந்தனை மேவிய என்பது போல.

கண்ணிகள்.

௧. வாசநீர் குடை மங்கையர் கொங்கையில்
மன்னிடுங் குங்குமச் சேறும்சாந்த
மும்நறுந் தோயத்தி லாரும்-நீர்
தேசுடைத் தெளினு மது மிக்க
தெளிவில்லை தென்றசொற் சாரும்.

௨. மாவிரைத் தெழுந் தார்ப்ப வரைதரு
மாமலர் மாமதுப் பொங்கும்வாவி
தாம்நிறை நாடு விளங்கும்-படி
மன்னுங் கால்வழிக் காவிரிநீரு மருவிச்
சருவி யிணங்கும்.

௩. ஒண்டுறைத் தலை மாமத கின்வழி
யுற்றிடும் நீர்வய லாரும்—மெதி

‡ காவிரிக்கும் ஈசான்பருக்கும் சிலேடை.

ருற்றம ளர்குரைத் தேறச்—செய்யு
மோசை யண்டர்க ளொத்திடும் வானத்தி
லுள்ளவர் காதினிற் சேரும்.

௪. மாதர் நாற்றுப்ப றிப்பவர் மாட்சியும்
மஞ்சுள மாமுடி யாவும்—சேர்க்கு
மாட்சிமை யுமங்கு கூவும்-உழு
மாந்தர்கூட்டத் தொழுக்கமு ஞ்சேர்ந்து
மலிந்தன வின்பமு மேவும்.

௫. உழுத சான்மிக வூறித்தெ ளிந்தசே
றுற்றுவ ளமிகும்பாங்கி—லும்பணை
யும்பாா சினிற் காங்கு-பூசை
யோடுநாறு நடுவர் தொகுதி யுடன்
பொன்னி நாடெங்கு மோங்கும்.

இராகம் மாஞ்சி தாளம் ரூபகம்.

**கண்ணிகள்.**

௧. பழனங்க ளினிற்சாலிப் பயிர்ச்சுருள் விரிய
பதங்கண் டுழவரவை கடைச்சியர்க் கறிய
விழைவுடன் செயக்களை மிகவெடுத் தெறிவார்
மினுமுத்தஞ் சொரிசங்கத் திடறியே வருவார்.

௨. அத்ததி யிடைதளர்ந்தங் கசைந்தங்க மருவார்
அளிகுழ லலைந்திட வரம்பணைந் துறுவார்
கொத்தும லர்க்குழற்செங் குவளையு மணிவார்
குழன்மேற் சிறைவண்டைக்கை கொண்டுகைத்
[திணைவார்.

௩. கைம்மலர் களாலயற் கருவண்டு மழைப்பார்
கமலம துவாயுறக் களித்தவர் தழைப்பார்
செய்முறு வலிற்றள வரும்பவுந் தெரிவார்
திங்கணு தல்வெயர் வரும்பவுந் திரிவார்.

காவடிச்சிந்து இராகம் நாதநாமகிரியை தாளம் ஆதி.

**கண்ணிகள்.**

க. கரும்பென்னச் செந்நெல்வளர்ந் தோங்கும் வளர்
கமுகென்னக் கரும்புகளும் நெருங்கிவரும் பாங்கும்
சுரும்பல்லி குடைநீலத் தாது அல்ல
சொலும்பகலி னோரமெனத் துலங்கிடுமெப் போதும்.

உ. அரும்பல்ல முலையென்ன மருவும் திநிக்கு
மமுதல்ல மொழியென்ன வாருமின்பஞ் சருவும்
வரும்பல்லா யிரங்கடைசி மாளுர் நிறைந்து
வயலெல்லாம் பரவியுயர்ந் திடுவரின்ப மானுர்.

**விருத்தம்.**

எண்ணமிலாக் கயல்பாயும் தடநந்தூன் கழிந்து
திகழ்ந் திடு மடாக்க
ளுண்ணிறைய வகன்றவெண்வ ளைத்தரள
மலர்வேரி யுலைப்பெய் தங்கு
மண்ணுமய லாமையடுப் பேற்றியரக்
காம்பல்நெருப் பதனை யூதும்
வண்ணமுறும் வயல்மாதர் சிறுமகளிர்
விளையாட்டு வரப்பி லெல்லாம்.

**சேக்கிழார் திருவிருத்தம்.**

கும்மிப் பாட்டுப்போல இராகம் ஆநந்தபைரவி. தாளம் ஆதி.

க. காடெல்லாங் கழைக்கரும்பு
காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை
வயலெல்லாம் நெருங்கு வளை
கோடெல்லா மடவன்னம
குளமெல்லாங் கட லன்ன

நாடெல்லாம் நீர்நாடு
தனையொவ்வா நலமெல்லாம்.

இதுவும் கும்மிப்பாட்டுப்போலப் பாடத்தக்கது. சந்தம் வேறு.
இராகம் ஆனந்தபைரவி தாளம் ஆதி.

க. ஆலை பாய்பவ ரார்ப்புறு மோலம்
அலர்மலர்ச் சோலையின் வண்டிரையும்
ஓல நான்மறை யோதையும் வேலையி
னோசையின் மிக்க வுயர்ந் தறையும்.

உ. அன்ன மாடு மகன்றுறைப் பொய்கையி
லார்ந்துறு மேதி துதைந்து வரும்
கன்னி வாளை கமுகினிற் பாய்வன
கனக வில்லினை யொத்தி வரும்.

ங. காவி னிற்பயில் வண்டினம் வாவி
கதிக்கு மலர்மது வுண்டு யரும்
மேவி யத்தட மீதெழப் பாய்கயல்
மின்பொழி லின்கனி யுண்டிவரும்.

நொண்டிச்சிந்து நந்தனார் சரித்திரத்தில் ஐயேவொரு சேதிகேளு
மென்பது போல.

கண்ணிகள்.

க. பண்ணைக ளிளிற்சாலி யோங்கிப் படர்ந்து
கருவமர்ந்* திவரும்; † சூலி
யண்ண லன்பரின் மனமே போல
வளர்ந்து வந்தன கதிர் களி னினமே.

உ. சங்கரரின் தொண்டர் கணம் அவர்
தலைவணங் குதலெனச் சாலி யவணம்
எங்குமுதிர் தலைவணங்கிச் சாலி யியங்கும்
வித்தக ரெனவிளைந்து மிணங்கி.

---

* செறியும். † சூலியண்ணல் சூலத்தைத் தாங்கும் அண்ணல் அதாவது பரமசிவன்.

௩. அரிதரு செந்நெற் சூட்டி னுழவ
ரடுக்கிய வடுக்கல மைத்து நாட்டிப்
பரிவுறத் தடிந்த மீனத் தொகுதி
படர்நெடுங் குன்றெனப் பணித் துயர்வான.

௪. வளைசொரிந் திடுமுத்தின் சுடர் வரைசில
விடங்கள மர்த்தி யுயர்த்திக்
களைமலர்க் கற்றைவேரி பொழிந்திழி கதிக்கும்
வெற்பமைத் திடக் காண்பர் நேரில்.

ஆசிரிய விருத்தம்.

சாலியின் றொகுதிதட வரைமுகடு சாய்த்தங்கு
சார்ந்திடும் பகடு போக்கும்
தகைமைபெரு குப்பாண்டி லீட்டமா லார்முகில்
‡ தண்வரைச் சிமய மோங்கும்
மேலுறுஞ் சாரல்மேல் வலமுற்றி டச்சூழும்
மிக்கவுயர் காட்சி யொருபால்
விளைமள்ளர் வைக்கோல் விலக்கி மழை
பெய்வதென விரைவில்நெல் தூற்றிட வரும்
சாலவுயர் பொற் குன்று வெருமணிக்குன்று தாமென்ன வொன் காக்கத்
தக்கநெற் குன்றினல் மருதங் குறிச்சிபோற்
சருவியுயர் காட்சி யொருபால்
கோலமுறு பதிகளினி லரசுகொள் கடன்களைக்
குறைவறவு மாற்றி மிகுதி
கொண்டறம் பேணிடக் கடவுளைப் போற்றிடக்
குணமொடுத ழைப்பர் மாதோ.

---

‡ சிமயமோங்கும் தண்வரை யென்றும் வரையின் மேலுற்ற சாரலென்றும் மாற்றிப் பொருள்கொள்க.

வெண்பா.

ஓங்குங் குறவ ருயருங் கிளைவிருந்து
தாங்குங் குடிகள் தழைத்துவரும்—பாங்கின்
வரைபுரை மாடங்கள் நீடி மலர்ந்தி
வரும்பதிக ளோங்குமுயர் வாய்.

இராகம் மோகனம். தாளம் ஜம்பை.

கண்ணிகள்.

க. அழுதின்கரும் படுங்களமா ராலைதரும் புகையோ
அணிமாத ரகிலாவிட் டமர் தூப மிகையோ

உ. அமைவேள்விச் சாலைதொறு மார்புகையோ வானோர்
அருமுகிலோ சூழ்வமா டங்காவுந் தானே.

பதம் இராகம் நாதநாமகிரியை. தாளம் ஆதி.

பல்லவி.

நாட்டின் வளங்கள் சொல்லப்
போமோ யினுஞ் செம்பொனின் (நாட்டின்)

அநு-பல்லவி.

தாட்டிகன் குறுமுநி தனிக்கர மின்னித்
தரையிற் கவிழ்க்கவரும் நிறையிற் பெருகும் பொன்னி
(நாட்டின்)

சரணங்கள்.

க. நாளிகேரம் நயமான செருந்தி நறுமலர்
நரந்த மங்கு பொருந்திக்

கோளி சால முயர் வானத பாலம்
குளிர்மரக் குரவ மெங்கும்பி சாலம்

தாளிரும் போந்து தாமுயர் சந்து
தண்மலர் நாகங் களொடு முசந்து.

நீளிலை வாஞ்சி கஞ்சியு முலாவும்
நிறைமலர் கோங்கம ரங்களு மேவும் (நாட்டின்)

உ. சூத பாடலம் வாழைகளு மெங்கும்
சூழும் ஞாழலின் மரங்களி லங்கும்
சாதி மாலதிகள் வானுற வாவும்
தண்டளிர் நரவமு மங்கு மளாவும்
மாதவி சரளம ரங்களின் வகையும்
வகுள சண்பகங் களிலுறு மிகையும்
போதவிழ் கைதையின் வகைபல சேரும்.
பூகபுன் னாகந் தொகுதியு மாரும். (நாட்டின்)

௩. வாகை முல்லைமல் லிகையொடு சண்பை
வகுளா ஜாதிமலர் மணியுபர் தும்பை
கோகனத பாரி ஜாதப னீரும்
குலவு கேதனம னந்தமும் நேரும்
மட்டியர் ஜவந்தி மலருமந் தாரம்
வாஸமு றுங்குமு தங்களா பாரம்
மட்டி லாதரோ ஜாயிரு வாட்சி
மகிழ மலர்புன்னை மருவிடுங் காட்சி
அநிச்ச மாமல ராதிகூ விளம்
ஆத்தி கொன்றை யொடு மல்லிகை மாவளம்
இனித்த மதுதரு மாதுளை வாஸ
மிலங்கு நந்தன வனமுயர் பிரகாசம். (நாட்டின்)

ச. வாழையின் கனிகள் வகைபல மாவும்
மதுமிக் கொழுகிவி ளங்குப லாவும்
சூழு மாதுளங் கனிகள் கொய்யாவும்
தோன்று முந்திரி கொழுஞ்சியு மேவும்
பருக வமுதொழுகு பப்பளி மாசு
பலவகை யாக வருந்துமந ரூசு
நிறமுயர் விருசக பித்தமற் றும் நறு
நிறையமு தொழுகிடு கனிகள் மற்றுமுறும். (நா)

நோட்டுப்போலே பாடுக. இராகம் சங்கராபரணம். தாளம் ஆதி.

**கண்ணிகள்.**

க. மங்கல வினையின * யங்களுமே
மாமண மேவெச † யியங்களுமே
பங்கஜ வதனமு றுந்தலமே
பண்களின் மழலைக ளின்குலமே

உ. பொங்கிவி ளங்கிடு பொன்னணியே
போது பந்தர்களின் மின்னணியே
செங்கய லார்பழ னங்களுமே
திருமக ளெங்கெணும் நிறைகொளுமே.

ஙு. மேகநாகமு மொருங்குறுமே
வேதங் ‡ கிடையிலு றுந்தரமே
யாகஞ் சடங்கி லங்கிடுமே
இன்பம் மகிழ்வு துலங்கிடுமே.

ச. யோகந் தவமுப ருந்தரமே வூசனுமறுகு மொருங்
குறுமே போகம் பொலிவு துளங்கிடுமே
புண்ணிய முனிவர்கள் விளங்கிடமே.

ரு. பண்டரு * விபஞ்சி யின்னிசையே ‡
பாதசெம் பஞ்சி யுறுமிசையே
வண்டறை குழல்கள்மின் னரிடமே
வளரிசைக் குழல்க ளின்றிடமே.

சா. தொண்டர்த o மிருக்கை யெங்கெணுமே
சொல்லுவ § திருக்கை யின்குணமே
தண்டலை || பலவுமு றுந்தடமே
தாதகி / பலவும மர்ந்திடுமே.

---

* நயங்கள். † வாத்தியங்கள். ‡ மறைபயிலிடம்.
* வீணை. ‡ செம்பஞ்சுக்கள். o இருக்குந் தன்மை.
§ வேதம். || பலவிதமான. / பலாமரங்கள்.

எ. மாடு ‡ போதகங் களினிறையே
வண்டு / போதகங்களின் முறையே
பாடு மம்மனைகள் தொறுமவரே
பயிலு மம்மனைகளு முறுவரே.

அ. நீடு § கேதனங் களினணியே
நிதி* நிகேதனங்களின் மணியே
தோடியர் மாலைநி றைந்திடுமே
துணைவர்கள் மாலையு றைந்திடுமே

பெரியபுராணத் திருவிருத்தங்கள்.

இராகம் எதுகுல காம்போதி—தாளம் திருபுடை.

க. வீதிகள் விழவி னார்ப்பும் விரும்பினர் விருந்தி னார்ப்பும்
சாதிக ணெறியிற் றப்பா தயரு மனையிற் றப்பா
நீதிய புள்ளு மாவும் நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய || வெழுத்தா மஞ்சு முறுபிணி வரத்தா o மஞ்சும்.

உ. நற்றமிழ் வரைப்பி னோங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவ னனபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ.

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

| | | | |
|---|---|---|---|
| லாவணி | க. | நொண்டிச்சிந்து | க. |
| விருத்தங்கள் | ங. | வெண்பா | க. |
| காவடிச்சிந்துகள் | உ. | பதம் | க. |
| கண்ணிகள் | ங | நோட்டு | க. |
| கும்மி | உ. | ஆ மொத்தம் | கரு. |

ஆ கடவுள் வாழ்த்து உள்பட ஙo.

‡ யானைகள். / புஷ்பங்களின் நடுவிடம்.
§ கொடிகள். * வீடுகள். || பஞ்சாக்ஷரம். o பயப்படும்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ச் சிறப்பு.

காவடிச்சிந்து சந்தவரை வந்தருகநாதா என்பது போல.

கண்ணிகள்.

க. பொன்னிநதி மின்னிவந்து பாயும் நாட்டிற்
பொருந்துந் தொரந் நகரென யேயும்—தினம்
பூமகள் மனமகிழ்ந் தேமரு விக்களித்துப் பொருந்து மின்
[ பந் திருந்தும்

உ. வன்னிநதி மாமதியின் சடையார் தொண்டர்
மகிழ வுதவு மருட் கொடையார்—நித்தம்
மருவிச் சுந்தரர்க் கின்பஞ் சருவவும் வரந்தரு வாரூர்
[ திருவாரூர்

ந. மறைகளி னோசை வீணை யோசை ஜோதி
வானவர் தினந் தினமு மேசெய்—ஓசை
மாதராடன் மணி யோது மாமுழ வின் மருவும் ஒலியுஞ்
[ சருவும்

ச. நிறை யுயர் பல்லியங்க ளார்க்கும் வீதி
நெடுகலுந் தேரொலியு மேற்கும்—மிக
நெருங்கிக் களிற்றின் ஒலி உரங்கொரு மாவொலி நேரும்
[ பதியென் றுரும்.

பதம். இராகம் பூரிகல்யாணி. தாளம் சாப்பு.

பல்லவி.

ஆரூர் மகிமையி னுமளவிறந்த தாமென்று
லறைய லாகுமோ நேரோ அன்பி னமர் பெரியோரே. (ஆரூர்)

அநுபல்லவி.

நேரூர் மாடமா ளிகை சூளிகை மண் டபம் பின்னும்
நெருங்குஞ் சாலைகள் கோபு ரங்கள் தெற்றிகள் மன்னும் (ஆரூர்)

சரணங்கள்.

க. நீடு சாளரம் நீடரங் கெங்கெணும்
ஆடன் மாத ரணிசிலம் பொலிகணும்
மாட மாவரை விலியை மனத்து ளெணும்
நாடும் ஸாகரி கையின் மாளிகை யுமணும். (ஆரூர்)

உ. அன்ன மேனமுந் தேடற் கரும்பொருள்
பின்னும் நம்பி விளங்க மகிழ்ந்துறும்
தன்னி கரினிற் றாது சென்றே நறுந்
தாண்மலர் மணக் குந்தனி யாந்தெரு. (ஆரூர்)

௩. செங்கண் மாதர் தெருவிற் றெளித்திடும்
குங்கு மத்தின் குழம்பைக் குழற்படும்
பொங்கு மாலையிற் பூந்துகள் வீழ்ந் துடன்
அங்கண் மேவி யளறு புலர்த்திடும். (ஆரூர்)

௪. உள்ளமா ருருகாதவ ரூர்விடை
வள்ளலார் திருவாரூர் மருங்கிடை
தெள்ளு மோசைத் திருப்பதிகத் தொடை
கிள்ளைபாடிடக் கேட்கும் பூவைப்படை. (ஆரூர்)

விருத்தம்.

* விளக்கமிகு கலன்க ளெங்கும் விரவிடப்பே
ரொலிபரவ மினும் பண்டங்கள்
கொளக்கிடைக்குந் தன்மையினாற் பலவகையா
மணிக ளெங்குங் குலவப் பெற்று
வளத்தையுறு மாறமரு முதலையனே
கங்களென வளர்த்தல் செய்யும்
அளக்கரெனத் தோன்றிடுமா வணவீதி
யலங்கிருதவா ரூரின் மாதோ.

* கடைவீதிக்கும் சமுத்திரத்திற்கும் சிலேடை.

ஸாகீ.

க. ஆரணங் களே யல்ல மறுகி னிடை
யமர்வா ரண மார்க்கும்
ஆரு மமர்க ளல்ல தோ ரணங்களில்
அணிதா மழு மேற்கும்

உ. தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
தனிமுனி மறை யோரும்
வீழ்ந்த யின்பத் துறை விரவுவரங்நகர்
விளங்கிடு மிடஞ் சேரும்

ங. நிலமகட் கழகார் திருநீ ணுதற்றிலக
நேர்வது செம்பியர் பதியே
மலர்மகட்கு வண்டா மரைபோல் மலர்ந்தலகில்
வளம்பெறு மாரூர்ப் பதியே.

வெண்பா.

அந்நகரிற் செங்கதிரோ ணொரு மாபுதித்த
மன்னனன பாயன் மாபினிலே—துன்னிவரும்
வேந்தா மநுவிமலன் மேதினியில் நீதியின்ப
மார்ந்து புவியளித்த னன்.

பதம். இராகம்—பியாக். தாளம்—ஆதி.

பல்லவி.

செங்கோல் செலுத்தி வந்தான் மநு வேந்தன்
திக்கெங்கெ ணுமிசைவி ளக்கப்பு வியின்மிசை (செங்)

அநுபல்லவி.

அங்கண மார்திரு வாரூரி லிருந்தும்
எங்கு மொற்றைக் குடைக்கீ ழிலங்கிடப் பொருந்தும் (செங்)

சரணங்கள்.

க. மண்ணினில் வாழ்தரு மன்னுயிர்க் காவி
கண்ணுமாம் பெருங்காவ லானென மேவி
விண்ணுள வர்மகிழ்வெய் திட வேள்வி தாவில்
எண்ணிலா தன மாண வியற்றி மேதாவி (செங்)

உ. கொற்ற வாழிகுவ லயஞ்சூழ்ந் திடப்பற்றும்
சுற்று மன்னர்திறைக் கடைசூழ்ந் திடமுற்றும்
செற்றம் நீக்கிய செம்மையில்மநு வியற்றும்
பெற்ற நீதியுந் தன் பெயராக் கிடவுற்றும் (செங்)

ங. அருமறைக் கரியபுற் றிடங்கொண் டவனிலும்
அகிலங்க ளாயிருந்தவன்வா னரன்முனு
உருகிநின் றாகம வுண்மை நூல் களிற்பனு
மோங்கும் பூசைவிதிகட் குரிய நிபந்த முனும் (செங்)

விருத்தம்.

செய்யவறம் பொருளின்ப மானவற நெறிவழுவாச்
செயவி லோங்கி

வையகத்தை யரசுபுரிந் திடுநாளி லவன் செய்தவ
மகிமை யாலே

தையலரிற் றகைமைபெறு மவன்றேவி திருவயிற்றிற்
றரணி யோங்கத்

துய்யமக வரிக்குருளை யெனவுதித்த தந்நகரம்
துலங்க மாதோ

ஸவாய்.

க. மெய்த்தவ மோங்கிடப் பெற்றதன் மைந்தன்
விளாந்துசி வத்தை விளக்கி டுமேலா
வொத்த கலைபல வோதிப்பு ரவி
யுறுமுங் கயந்தேர் படைத்தொழில் சால

கற்றுமை தன்பின் பலகலை தேர்ந்திடுங்
கண்ணியன் பாலக் கதிரினைப் போல
வுற்றவி ளவர சரமென மைந்தனு
மோங்கிடு நாளிலோர் நாளநு கூல

பதம். இராகம்—கல்யாணி. தாளம்—சாப்பு.

பல்லவி.

மைந்தன்ப வனிவந் தானே சதுரங்கமும்
முந்தம னமுவந் தானே—யிளவரச (மைந்தன்)

அநுபல்லவி.

சுந்தர மநு வேந்தன் றுங்க நற்குண சாந்த (மைந்தன்)

சரணங்கள்.

திங்கள் வெண் கவிகை சிறந்து வந்து நிழற்றத்
திருக்கோபி னின்றெ ழுந்து தினகர னொளி பெற்ற
சங்கந் திகழ் கண்ணன்றன் றன்னருளினை யுற்ற
தன்மைய மர்ந்தவனி தழைக்க வரசு பெற்ற (மைந்தன்)

சங்கமு ரசொடுபல் லியங்க ளத்ததி யுறத்
தாழ்ந்த கொங்கலர் மாலை தனிக் குங்குமம் தோள்பெறப்
பொங்கிய தானைசூழப் பொலியுந் தேர்மிசை வரப்
பொருந்து மங்குல்தோய் மாடப் புனித வீதி யமர (மைந்)

பரசு வந்தியர் சூதர் பலரு மாக்தர் நேரே
பணியுங் காவலர்களும் பக்கமுற் றமர் வாரே
விரைநறுங் குழலியர் வெள்வளை சிதறு வாரே
வெண்சாம ரைகள் பக்கம் வீசிட நின்று நேரே (மைந்)

விருத்தம்.

தானைமனன் மனத்தினைச்சோ தித்திடத்தா
னேதருமந் தையின் றித்தா
னேநிமிர்ந்த தெனநல்லான் புனிற்றிளங்கன் றெனத்துள்ளி
நிகழு மாந்தர்

தாநினைந்து பார்த்தும்வரு வழிதெரியா
விதம்வந்து தனித்தேர்க் காலின்
மேனிமிர்ந்த விசையினிற் சென்
றவ்விடத்தின் மேனுலகம் மேவிற் றன்றே

அபங்கு.

க. இந்தவி தங்கன்று மேவக் கண்ட
விளங்கன்றின் றாய்மன தாவ—லொடு
இந்துறுங் கணிநீர் வார—நின்று
தியங்கி மயங்கி மனஞ் சோர

உ. அலமந் தோடிவெம்பி வாடி—மிக
வலறிச் சேர்ந்து திகைத்து நாடித்
தலமதில் மெய்ந்நடுக்க மேவி—மனந்
தளர்ந்து விழுந்ததங்கு கூவி

வெண்பா.

மைந்தனது கண்டிடவும் வந்ததிங்க பாயமெனச்
சிந்தைமயங் கித்தியங்கித் திக்பிரமைகொண் —டெந்தவிதம்
செய்வதென வொன்றுந் தெரியா தறிவழிந்து
மெய்ம்மறந்து மேபுலம்ப வே.

பதம். இராகம்—செஞ்ஸுருட்டி தாளம்—ஆதி.

பல்லவி.

ஈசனே யென்செய்வே னெவ்விதம் நானுய்வேன் (ஜகதீச)

அநுபல்லவி.

மோசமாயான் கன்றும் போச்சே முற்பழிச்சொற்
கிட மாச்சே (ஈசனே)

சரணங்கள்.

க. நீதிதவ றாது நிகிலலோக மீது
ஆதாவுற் றுமிப்போது அழிக்கவந்த தேதீது. (ஈசனே)

உ. மன்னவனின் னேரம் வரையில் நீதி லாரம்
தன்னு டன்பு வியின் பாரம் சார்ந்தும் வந்த தப சாரம் ()

ந. எத்த னையோ ஜன்மத் தினிற்செய் திடுங் கன்மம்
ஒத்ததோ யிந்தவ தன்மத் துறுந் துறைக்கென் மேலென்
[ வன்மம் (ஈசனே)

விருத்தம்.

இந்தவிதம் புலம்பிடுமைந் தனுமிந்தப் பழிவிலக யிடமேதென்று
சிந்தையுற வந்தணர்கள் விதிக்குமுறை யறமென்றுற் றிகழு
மெந்தைக்
குந்தெரியு முனமியற்று வேனெனவு மொழிந்துமறைக் குலத்
தோர் முன்னம்
வந்துநின்று னக்கன்றின் றுயப்செயலை முற்றுமிங்கு வழுத்து
[ வேனே.

பஞ்ச சாமரம்.

க. ஆவின் கன்று மிறக்க வாவின்
அக்கன் றுக்கனை கண்டதே
பூவில் விழுந்து கதறிக் கண்ணீர்
புரண் டிடத் துன்பம் கொண்டதே

உ. மன்னு யிர்களைக் காக்குஞ் செங்கோல்
மறுவின் கோயிலைச் சேர்ந்திடும்
பொன்ன ணிமணி தன்னைக் கோட்டாற்
புடைத்துத் துன்பமுற் றூர்ந்திடும்.

இராகம் சங்கராபரணம். தாளம்—ஆதி.

கண்ணிகள்.

க. பழிப்பறை தனி னொலியோ ஆர்க்கும்
மாவத்தி னொலி வலியோ வேந்தன்
வழித்திரு மைந்தனி னுவி கொள்ளவரு
மறலியூர் தியின் கலியோர்

உ. கழுத்தணி மணித் தொனியோ வெனத்தன்
கடைமுன் கேட்டுத் தனியோர்மிகத்
தெழித்தெழு மோசை மனன்செவிப் புலமதிற்
சேர்ந்திடப் பய முனி *யோ.

விருத்தம்-

செகமெச்ச மரியணைதின் றெழுந்து வேந்தன்
திருவாயி னண்ணிடக்கா வலர்கள் போற்றி
தகையாரோர் பசுவந்திங் கெய்தி வாயில்
தனிமலரு மணியைக்கோட் டாலசைக்க
வகையொன்று தெரியோமென் றிறைஞ்சிச் சொன்ன
மாற்றமதை மநுவேந்தன் கேட்டுத் துக்க
மிகவெய்தி யாவைப்பார்த் திதற்கென் னுற்ற தெனவிளம்ப
வமைச்சரிந்த விதஞ்சொல் வாரே.

கலித்துறை.

வேந்தே நினது புதல்வ னிரதம் விடுத்திடமுன்
நேர்ந்தே பெரும்பல்லி யந்தானை சூழ நிருபர்தெருச்
சார்ந்தே வரயிர தக்கால் மிசையித் தலத்துறுமா
யீந்தேவருங் கன்று வீழ்ந்திறக் கக்கண் டிசைந்ததுவே.

வெண்பா.

இந்தவித மந்திரிசொ லேந்தலிரு காதிலுறத்
தந்தலையில் வெவ்விடமே சார்ந்ததெனச்-சிந்தையிலா
வுற்ற துயர முறநினைந்து வேதனையால்
மற்றவனு மேபுலம்பு வான்.

இராகம் காம்பொதி தாளம் ஆதி.

கண்ணிகள்.

க. ஈசனே யெனக்கிந்த விடுக்கண்வந் திடமுந்தை
யினிற்செயும் வினை தானோ

*ஓ = அசை.

தேசத்திற் குமெனக்குந் தீங்கிது வந்தி டிலென்
செய்குவே னிதுசகிப் பேனோ

௨. வீட்டிற்ற னியிருக்க வினைவந்து சூழ்ந்ததையோ
வெம்பழிக் காளாகி னேனே
நாட்டிலுள் ளோர்நகைக்க நட்டாற்றி லெனைவிட்டால்
நலமெவ்வி தத்திற் பெறுவேனே

௩. திண்ணையி லுள்ள வென்னைத் ‡ தெருவி விழுத்
தலைக்கத் தேசமெங்குஞ் சிரிக்க லாச்சே
பண்ணரினேர் மொழியுமை பங்கவென் செங்கோல் நீதிபஞ்சு
பஞ்சாய்ப் பறந்து போச்சே

௪. பொதுநீக்கி வையகம் புரந்த நெறிதன் னாயிப்
போது மெந்தவிதத்தி லாரு
மிதுவோ சோதனை யெந்தை யீசனே மயங்கினே
னெந்தவி தமிப்பழி தீரும்.

விருத்தம்.

இந்தவித மாசன்மயங் கித்தியங்கி யிரங்கிடப்பி
னேங்கித் || தேங்கிப்
பந்தவினை சூழ்ந்தென்செங் கோலுமின்று தாழ்ந்த
தெனப் பரிதவித்துச்
சொந்தமுறுங் கன்றிறந்த வாவுறுந்துன் பமுநினைந்து
துயரங் கொண்ட
அந்தமா மநுவேந்தை யமைச்சர்கண்டு வணங்கியிதைச்
சொற்றார் மன்னே.

‡ தெருவிலிழுத் தலைக்கவும் தேசமெங்கும் சிரிக்கவும் என்று சேர்த்துப்பொருள் கொள்க || அச்சமுற்று.

மகாராஷ்டிர பதம் இராகம் நாதநாமக்கிரியை. தாளம் ஆதி.

கண்ணிகள்.

க. சிந்தைத்த ளர்வ கற்றும் தீரும்வ ழியைப் பற்றும்
மைந்தனைக் கோவதைசெய் வார்க்கந்த ணரியற்றும்
எந்தவ ழியோவுற்று மிசைந்திடச் செய்து முற்றும்
இணங்குவ துநலமென்று ரரசனதற்கு மிணங்கில
[மெனப் புகன்றான்.

உ. வகையான வழக் கீது வழுத்தினீ ரிப்போது
தகையார்கன் றையிழந்த தாய்க்கு மருந்தோ வோதும்
*பகையரர்ம கவிழக்கும் படிவரு மென்றே தீது
பகர்ந்தீ ரதைநான் மருவி வந்திடி லறம் நகர்ந்தே
[விடுமென் றறிவீர்.

ந. சழக்குரைத் தாவிப் போதோர்—தரும்ந்தான் சலியாதோ
குழக்கன்றி ழந்தலறுங் கோவதை புவி மீதோ
கிழக்குமுத லெண்டிசைக் கேகின்று பரவாதோ
கேவலச் செயற் காளனென் நான் பெற்றுவந்த
[கெண்யமி ழந்து போனேன்.

இராகம்—நீலாம்பரி. தாளம்—ஆதி.

கண்ணிகள்.

க. மாநிலங் காக்கு மன்னன் மன்னுயிர் காக்குங் காலை
தான்தற் கிடை யூறு தன்னாலே
ஊனமி குபகையாற் பரிசனத் தாற்கள் வரா
லுயிர் தமாற் பய மைந்து முறின் பேலே

உ. தீர்த்தறங் காப்ப துவே செய்ய நெறியே யிது
தெரியாது நீருரைக்கிற் றீதா மே
சீர்த்தியா யென்கு மாரனுற் செய்யுமிப் பழிக் குநேர்
செய்தவத் தாலெனது மனம் நோமே.

---

* இப்போது பகையரகப் பொருந்திய.

இராகம் ஆனந்தபைரவி. தாளம்-ஆதி.

கண்ணிகள்.

௧. அன்னிய னோருயிர் கொன்றா லவனைக்கொல்வே
னேவே னென்ற றிந்து முன்பார்
தொன்மநு நூற்றொண்ட மநுவாற் றுடைப்புண் டது
தொல்லுல கினிலு மென்பார்.

௨. வார்த்தைக்கி டமா யுரைத்தீர் இதுநல்ல
வழக்காம் நீதியும் வெறுத்தீர்
பார்த்தவ ரெவர்களும் நகைக்கவி டங்கொண்டுரை
பகர்ந்தீ ரின்பத்தைக் கரைத்தீர்

௩. என்றும ரசன் கூற மதிமந்திரி
யெதிர்நின் றுரைப்பர் தேற
நின்ற நெறி யுலகின் கண்ணிது
போல்முனம் நிகழ்ந்த மநுகெம்பீர

௪. மரபொழித் திடும் வினையே யிலை மறைசொலும்
அறந் தனையே தழுவி
மருவித் தொன்றுதொடு வருதல் நெறியெனவே
வழுத்தும மைச்ச ரினையே

௫. பார்த்துச் சினந்து சிரித்து மரசன்
பகர்ந்தன னதை விரித்து
ஏற்ற விடரிற் பெற்றம் கதறி
மணியசைத் தெங்கு நிகழ்ந்த குறித்து

விருத்தம்.

அயன்முதலா னவர்போற்று மாரூரி
னரனறிய வாவின் கன்றைத்
தயவின்றிக் கொன்றவனே துணிவினனா
மவற்கொன்றாற் சரியாஞ் சிட்சை

துயருறுகன் றிழந்திடுமா பொறுக்காத
துயரமெனத் தோன்று மைந்த
னையுமிழந்த விடரெனினுந் தாங்குவதே
தருமமென நவின்றான் மன்னே

வெண்பா.

இந்த விதமரச னேற்ற மொழிடகா
மந்திரிகள் கேட்டு மனந்தளர — மந்திரியி
லுற்ற வொருவனைத்தே ரூர்ந்துமக னைக்கொலென
மற்றவனு மங்கிதுசெய் வான்

ஆர்யா.

௧. மந்திரி யிதுசெய நேரா மனமதை
யுறவது செயாது மனமார
வுந்த னுயிரதுவு மாப வுற்றன
னதுசெய லரசறி யவும் நேய

௨. மைந்தன் றனையவ னேரே மறுகிடை
கொணர்ந்து நடுங்கி டட்பாரே
தன்றே ரிற்கா லுறவே சருவச்
செய்வன் றரணியி லிசைபெறவே.

பதம், இராகம்—ஆகிரி. தாளம்—ரூபகம்.

பல்லவி.

தேர்க்கா லுறவும் விடுத்தான் மைந்தனைப் பழி
ஜகந்தெரி யவே கொடுத்தான் மநுவரசன் (தேர்க்)

அநுபல்லவி.

பார்க்கு மெவர்க்கு மனம் பதறவே யறமொன்றை
யேற்க விச் செயல்செய்வ தெவரெனக் கதறவே (தேர்க்)

சரணங்கள்.

௧. ஒருமைந்தன் குலத்துக்குள் ளானென வுமோரா
ஜுருந்தன்மத் தின்வழியி னுறுதலே மிகுநேரா
யருமைச்செ யலென்றவ னறிந்துமைந் தன்றன்சீரார்
மருமந்த னைத்தேரா ழி மருவச்செய் துமே பாரார் (தேர்க்)

௨. தண்ணளி யுறுப் வேந்தன் செயல்கண்டு தரியாது
தாணியு ளோர்கண்மழை சரிந்திடப் புவிமீது
விண்ணவர் மலர்மழை பொழியவி டையிலப் போது
வீதிவி டங்கப்பெரு மான்விளங் கிடச்சாது (தேர்க்)

பதம். இராகம்—பிலகரி. தாளம்—ஆதி.

பல்லவி.

விடைமீதெ ழுந்தருளி ஞர் தயை பொருந்தி
வீதிவி டங்கப்பெரு மான் பெரு மான்மநுமுன் (விடை)

அநுபல்லவி.

சடைமேவி வருங்கொன்றைத் தொடையம ரவும்நின்றவ் (விடை)

சரணங்கள்.

௧. கங்கைத திச்சடையார் கருணைவி ழிக்கடையார்
சங்கரி யுமையொரு பங்கர்ப ழுப்படையார் (விடை)

௨. வேந்தன்செ யலைமிக்க விமலன்கண் டுபிரமிக்கச்
சார்ந்தபூ தகணங்கள் தம்முட னெருமிக்க (விடை)

விருத்தம்.

வீதிவிடங் கப்பெருமான் மநுவேந்தன் முனம்வந்து
விடைமேல் தோன்றி
நீதிதவ றுநினது பேரன்பு கண்டுவந்தோம்
நிமல வென்ற

றுதிசொலி யரசன்மகன் மந்திரியு மான்கன்றும்
நகரோர் காண
வீதியினி லுயிர்பெற்று மெழுந்தருள்செய் திடங்கண்டு
வியந்தார் மன்றே.

கும்மிப் பாட்டுப்போல இராகம் ஆநந்தபைரவி. தாளம் சாப்பு.

சேக்கிழார் திருவிருத்தம்.

அந்நிலையே யுயிர்பிரிந்தவ் வான்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்று மந்திரியு முடனெழலும்
இன்னபரி சானனென் றறிந்திலன் வேந்தனும் யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ.

ஆர்யா.

இந்தவி தம்ஜக தீச னினிதா யருள்செய்
திடமநு மக ராஜன்
சந்தப் பணிவிடை யாரைத் தானே துதித்
தினிதா யவர்வ னேரே.

பதம் இராகம் மோகனம். தாளம் ஆதி.

பல்லவி.

எனையொரு பொருளென வெண்ணிக் கிருபை புரிந்த
தெந்தவி தமென் னையனே ஜக தீச்வரி யுறு மெய்யனே
(எனை)

அநுபல்லவி.

அனை யுமை யொடுந் திரு வாரூ ரதி லமரும்
அரனே யன்பர்க் கருளும் வரனே மனோ கரனே (எனை)

சரணங்கள்.

க. அன்பர்கள் செயுங் குற்ற மனைத்தும் பொறுத் தவரை
யாதரிப் பவனீயென் றோதும்

(உ) அக்கரை யாமணி யாரூர்க் கமல
[illegible]ணி யரைமதி யுயர் காரூர்
[illegible]க்கச் சடைமுடி யாரே வளர்கோ
[illegible]னைத் தெளிவுற வறிவீரே

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர்ச் சிறப்பு முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| [illegible]காவடிச்சிந்து | க | அபங்கு | க |
| [illegible]கம் | எ | பஞ்சசாமரம் | க |
| விருத்தம் | ௬ | கண்ணிகள் | ௫ |
| [illegible] | க | கலித்துறை | க |
| [illegible]ண்பா | ௫ | ஆர்யா | ௯ |
| [illegible]ய் | க | | |

ஆக உருப்படிகள் ௩௫



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# † திருக்கூட்டச் சிறப்பு.

வெண்பா.

புற்றிடங்கொண் டார்மருவும் பூங்கோயில் வாயின்மு
னுற்றமணிச் சோதி யுயர்ந்தபெரும்—நற்றவரார்
தேவா சிரியமண்ட பத்தின் சிறப்புமிக
மேவிவரு மின்பமுற வே.

ஸவாய்.

தொண்டர் திருமேனி மேவிடும் நீற்றொளி
தூய்மையி னுமஞ் சக்கரத் தாலே
மண்டு முழக்கத்தி னுமோ ராயிர
மாமணிப் பாற்கட லொத்தது மேலே.

ஆர்யா.

இத்தகை மேவுறு தேவா சிரியனெனு
மண்டபத்தி லினிது மேவும்
அத்த ரடியவர்கள் பெருமை யாவலொடு
முரைசெய் குவேன் மிகவு மருமை.

பதம் இராகம் கல்யாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

தொண்டர்ச ரித்திரத்தின் பெருமையினை யறிந்து
சொல்லவும் என்னு லாகுமோ (தொண்டர்)

அநுபல்லவி.

எண்டிசையுறும் ஜீவர்தமை யாட்கொண்ட பானர்
ஏகவத்துவென் றெண்ணி யேற்றியுயர் திறனர்(தொண்டர்)

சரணங்கள்.

மிக வொளிரு முருத்தி ராக்க மணிந்ததிரு
மேனி நீறுபோல் மனமொத்திடுவார்
திகழ்வுறுந் தமதுளந் தெளிவுற வுலகைத்துந்
தேசுறு வெள்ளைக்கி வைத்திடுவார்
வகையலா தைம் பூதங்களு மாறிக் கலங்கினாலும்
மங்கையோர் பாகமவைப்பார் மலரடியை மேன்மேலும்
மகிமை யொடுத்திக்கு வழியுறநிற் றெக்காலும்
மருவுங் குணக்குன் றனைய திகழ்பெருமையேனும் (தொ)

ஆக்கமுமா சமும் அல்லாத் திருவடைந்தும்
அளவற் செம்பொனை யோடோடு போலவே
நோக்கியும் குமபிட னைறிவிடும விரும்பா
நுண்ணறிவ் வாடுறுவர் சாலவே
வாய்க்கருங் கண்டிகையே மருவுமா ரமதாக
மன்னுங் கந்தையே யாடையாக யணிவேகர்
தீர்க்கமா யீசர்பணி சிறக்கும பாரமாய்க
சிந்தைய ராயவரை வேந்திவரும் யோகர் (தொண்)

வெண்பா.

சிற்றம் பலத்தரசைச் சேவித்திடுந்தமையர்
வெற்றிபெறுப வேடபெலாய் வேண்டியவா— றுற்றிடுவார்
விந்தையுறுந் தொண்டரிசை மேன்மையறி யாததொ
னெந்தவுத மிங்குசொல்லு வேன.

திருக்கூட்டச் சிறப்பு முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| வெண்பா | ௨ | பதம் | ௧ |
| ஸவாய் | ௧ | ஆர்யா | ௧ |

ஆக ரு

கடவுள் வாழ்த்து முதல் இதுவரையில் மொத்த
உருப்படிகள் ௭௦

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருமலைச் சிறப்பு.

## தடுத்தாட்கொண்ட புராணமாகிய

## ❀ சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரம்.

லாவணி—இராகம் இந்துஸ்தானி காபி. தாளம்-ஆதி

ஸ்லோகமாகவும் பாடலாம்.

க. திருவுயர் கயிலைமுவ் வுலகும்நான் மறைகளும்
(*) செயுந்தவத் திரள்போலும்
மருவுபல் தலங்கள்செந் தளிரென வுலகெனும்
வல்லிமென் மலர்போலும்

உ. (§) விளங்கும் வேதகீ தங்களுங் கந்தருவர்
வீணையி னிசைகளும்
துளங்கிய காரெதிர் (†) தானமாக் களொலியுந்
துயிலின்வி னோதங்களும்

ந. வணங்கிடு மமரர்கள் முடிகள்மா லைகள்மந்
தாரகன் மாலைகளும்
கணங்கொள்மு னிவர்களஞ் சலிமா லைகளும்பொற்
கற்பகச் சோலைகளும்

ச. புகழுந் தேவர்நிலை வேண்டிடி லைம்பெரும்
பூதங்க ளாயுநாட் டும்
நிகழுமம் மலைப்பெரும் (‡) பூதங்கள் பாடிவின்
ணிமிர்ந்துயர் சுதிகாட் டும்

---

* தவங்களாலாகிய புண்ணியத்திரள் § நாதங்களும், விநோதங்களும், மாலைகளும், சோலைகளும், அம்மலையின்கண் விளங்குமெனப் பொருள்கொள்க † மதம் பிடித்த யானைகள் ‡ பூதங்கள், நாட்டும், காட்டுமென்று முடித்துக்கொள்க

ரு. அரம்பைய ராடலு முழவுட னெதிரெதி
ரருவியின் முழக்கங்க ளும்
நிரந்தரம் பூமல ரேந்திச்சோ பானவழி
நிர்ஜரர் பழக்கங்க ளும்

௬. துலங்கிடும் நாரதர் தும்புரு வீணையிற்
றுண்ணெனும் நாதங்க ளும்
இலங்கிடு முரகர்கின் னரர்ஸித்தர் கேசரர்
ஏனைய மோதங்க ளும்

௭. கற்பகத் தருவால வாலங்கட் காயாயக
கங்கைய ருவிபா யும்
பற்பல விண்ணவர் மாதரு டலமதிற் (0)
படிந்துப டிந்தோ யும்

௮. வேதன்மு தலாயவிண் ணவர்முதற் கோபுரம்
வணங்குவா யிற்றடை யார்
ஆதி (||) யாயநந்தி தேவர்வேத் திரப்படை
யாரவர்க் கருட்கொடை யார்

௯. சாதியி லுயர்தேவ சாதியர் நந்திதேவர்
சாதிகண் டுவெருவு வார்
பாதிம திச்சடைமுக் கண்ணொரு நான்குபுயர்
பக்கங்க ளிலமருவு வார்

௧௦. வெள்ளிவ ரையிறைவர் மரகதக் கொடியென
வளங்குஞ்ச வமுஞ்சுவை யும்
ஒளிரய ரதநிலைப் பட்டத்துவி ருந்தருளா
லுதவியனை டங்கவெளவை யும்

௧௧. காக்குங் கருணைவிழி நோக்குமு நிவர
ரஹரவெனு மோசைக ளும்
ஆக்குநகை லைபலை யதன்மைபெ ருமைகொல
வரவர் வரசைகொ ளும்

0 அக்கங்கையில் || நந்தி தேவருள்ளார். என முடித்துக்கொள்க

## விருத்தம்.

இக்கயிலை மருங்கிருக்கு மிருடிகள்போற்
றிடுமுபமன் னியரிருக்க
மிக்கபதி னாயிரஞ்சூ ரியர்போலோர்
கதிர்தோன்ற விளங்குநம்பி
தெக்கிணதிக்கிற் புகுதலறிந் திறைஞ்சிமுநி
யத்திசைபார்த் தெழுதலேகி
( / ) யக்கரடி யலதுபணி யீரிடத்தன் னென்
றிடுமுனிவர்க் கறைகு வாரே

இராகம்—தோடி. தாளம்-சாப்பு பஞ்சசாமரமாகவும் பாடலாம்.

### கண்ணிகள்.

௧. எந்தையபலர்க் கன்புபொருந்தும் லாலசுந்தரர் செங்கின்
றூரென்றூர் சுந்தரக் கிந்த மகிமை
வந்த தெநதவிதமிங் கறைகென் றூர்

௨. வெள்ளி மலையில் ரத்னபீட மேவி
படரு மங்கைய ரொளிபடை வன்ன
மாலை யாக்கப் போந் சுந்தரர் ஆக்கினார்

௩. அலங்கல் புகழ்ச்சுந் தரரு போர்நா
ளொரு பொழுது மிலகும்
மலர்கள் கொய்யச் சென்ற போதில்
மன்னு மெந்த வுலகும்

௪. பெற்றருள் ஜக தம்பி கைக்கன்பு
பெருகி டுந்தொண்டி னாலே
நற்றவவநிக் திகைக மலினி நங்கை யருமுன் னாலே

௫. நந்த வனத்திற் புக்கு மலர்கள்
நயமொடு மவர் கொய்ய
சுந்தர ரந்த நங்கைய ரெதிரில் தோன்றி நோக்கினர் மைய

---

/ சிவபெருமான்.

௬. தென்றிசைமிகு பாக்கியம்பெறத்
  திருத்தொண்டத்தொகை பாட
அன்று ஸுந்தர மூர்த்தி யன்பரகமு மவர்பால் நாட

௭. அறிவு தடுக்க வவரு மப்படி யாகி
  யவர்முன் சார்ந்தனர்
நறுமலருடனரன்ஸந் நிதிமுன் நண்ணிச்
  சுந்தரர் சேர்ந்தனர்

௮. ஈசனறிந்தாலீலை போல யிலங்கும் ஸுந்தர மருளினால்
ஆசை மாகர் பால்விடுத்தனை யதனாற்
  றென்றிசைக் கருளினால்

௯. சென்று மாகரைத் தோய்ந்தின்பம்பெறு
  கிரெனவீசன் புகன்றிட
அன்று ஸுந்தரர் மயங்கி வணங்கி
  அரனே பவம்விட்டகன்றிடச்

௧0. செய்து தடுத்தாட்கொண்டருளெனச்
  செப்பவரனு மிணங்கியே
செய்கு வமந்த விதமெனவன்பர் சென்றனர்
  மிகவணங்கியே

**விருத்தம்.**

* திருக்கையிலை நிகர்த்தவர்பாற் செலவிடுக்கா
  வகத்தர்வசித் திருக்குந் தூய்ய
திருக்கையிலை யரனருளால் முனைப்பாடி
  நாட்டில்மிகத் திகழ்க் கும்மா
திருக்கையிலைச் சிறைக்கிளிசொற் றிருநாவ
  லூரிறைவன் செழுந்தாள் பூசித்
திருக்கையிலை யமிலாகி கைசுமறைக்
  குலக்கினில்வந் தாகிக்கா ரன்றே

* முதலடியின் திருக்கு அயிலை என்றும் 2வது அடியில் திருக்கையை என்றும் 3வது அடியில் ஆகிரிக்கை இலை யென்றும் 4வது அடியில் பூசித்திருக்கையில் ஐயமில் ஆகி யென்றும் பிரித்துக் கொள்க.

செய்ய வடியர் சிவபெ ருமான்றன்
றிருவரு ளென நாட—யாருஞ்
சிந்தை மகிழச் சந்த்ர பிம்பம்போல்
தேகப்பிரபை மிகவு மொளிர
மாகத் தவர் மனசு குளிரச் (சுந்தரர்)

ஸவாய். இராகம்—குறிஞ்சி. தாளம்— அடதாளசாப்பு.

க. வெம்புமப யிர்க்கொரு மேகம்பொ ழிந்தென
நம்புஞ்ச டையனார் துன்பத்தை மாற்றி
எம்பிரா னருளா லென்னவ ருஞ்சேய்க்கு
நம்பியா ரூரரா நாமமுஞ் சாற்றி

உ. நீடிய கற்சுட்டி நெற்றியி லாட
நிறைமணி சூழுபப ரைபெங்கும் நாட
ஆடிக்குள் தோன்றிய தென்னக்கு ழைகளொன்
னையாக போலப்ப ரைக்குள்நின் றாட

ங. ஐம்படை மார்பிற்ற தும்பிடச் செம்பொன்
னரைஞா ணிடையினை மிளிர்ந்திடப் பூட்டிச்
செம்பொற்ச தங்கைக லீரெனத் தாள்கள்
சிறந்திட மாட்டியின் சொற்கள்பா ராட்டி

ச. பூழிபெ றந்திரு மேனிதி கழ்சிறு
புத்ரர்க ளோடும றுகிடை யோடி
ஆழிபெ றுஞ்சிறு தேருருட் டிவிளை
யாடிக்கொண் டாடியந் நாளினிற் கூடி

இராகம். சென்ஸுருட்டி. தாளம்—ரூபகசாப்பு.

பஞ்ச சாமரமாகவும் பாடலாம்.

கண்ணிகள்.

க. நாளுயர்தநா டாளும் வேந்தரோர் நாள்புறத்தினிலே
யாளுஞ் சிறிய டவனீ வரும்போ தணித்தங் கருகிலே-விளை

௨. யாடும்பிள்ளைக ளோடு மையரங் கார்ந்த நிலைகண்டார்
தேடும் நிதியம் போலக் காதலாற் சிந்தை மிகக்கொண்டார்

௩. நரசிங்கமுனை யாரெ னுமந்த ராஜர் நாடினர்—அணிக்
கரசிங் கமர்ந்த தெனச்ச டையனர் அருகிற் கூடினர்-
மெத்த

௪. வேண்டி யிரந்து மதலை யைக்கொடு மிளிர்ம னைக்குட்
சென்றார்—அந்த
ஆண்ட கைகிடைத் தலின்பே ரின்பக்க டலின்மு ழுகிநின்
றார்—அர

௫. சுரிமைக் குமரர் போல வளர்க்கப் பெருமை சாலவே
அருமறையோர் குலத்திற் கொத்த வுரிமை யேலவே-மிக

௬. நலஞ்செய் பல்கலை பயிலச் செய்துப நயனம் புரிவித் தார்
முதற்
குலந்த னக்கிசை மறைப்ப யிற்சியுங் கூடத் தெரிவித் தார்

௭. கற்று ணர்ந்திட மணப்ப ருவமுங் காண நோக்கினர்
முற்றும் பிரியங் கனிந்து பேரின்ப முதிரத் தேக்கினர்

௮ சடைய ஞர்மா பினுக்கொரத் தபுத்தூர்ச் சடங்க விமறை
யோர்
உடைய சுதையைப் பெரியோ ராற்கேட்பித் தொப்ப
வுமிறையோர்

௯. மகிழ்ந்தி டச்சடை யவருங் கேட்டு வந்து மனமொப்ப
புகழ்ந்து மணத்தி னேலை விடுப்பப் பொருந்தும் பந்தர்
மொய்ப்பப்

௧௦. பந்தர் யாவரும் வந்து நன்முளைப் பாலி கைதெளிக்கத
தந்தை மகிழ்ந்து மணத்திற் கிசைந்த தைச்செய் துகளிக்க

ஸவாய். இராகம்—குறிஞ்சி. தாளம்—அடதாளசாப்பு.

க. நம்பியா ரூரருக் கின்பம்பெ ருகநன் கொண்டுகொள் மன்
றல்முதல் நாளினி லிங்கே
செம்பொன்ம ணிக்கலங்க ளங்கையிற் பூட்டிய வாத்
தியங்கள்மு ழங்கமு றைப்படி யங்கே

உ. செய்வன செய்திர வும்விடிந் தபின்பு
செய்யம றையவர் யாவருங் கூடி
யுய்வன வெண்ணிறை யர்திரு மேனிதொட்
டெப்ரிய மாய்மகி ழப்பணி நாடி

௩. துய்யம ணியாத னத்திலி ருத்தித் துகடேர்ப
ரிமள மஞ்சன மாட்டி
மெய்யிற்க னகத்து கிலினைச் சாத்திமி
குபனி னீர்கர்ப்பூ ரவிரை சேர்த்தி

௪. நறுஞ்சந்தம் பூசிச்சவ் வாதிட்டப் யர்கைவி
ரற்கணை யாழியிட் டுக்கணி வாக
வுறுங்கதி ராபர ணங்களைப் பூட்டி யுவந்தனர்
மேனிபு ளகித ராக

விருத்தம்.

திருமணக்கோ லஞ்செய்து தங்களின்னை
திகத்திருவு மன்னவர்கள் திருவுமேவ
வரியவா சனங்கள்மிசைப் பல்பேர்செல்ல
வுற்றிடுமங் களவாத்யங் களுமுழங்கத்
தெரியமட வார்வாழ்த்தத் திருநீறிட்டுச்
சிவபெருமான் றனையுன்னிப் பரிமீதேறிப்
பெரியபுத்தூர் செலநகரோ ரெதிர்கண்டேத்திப்
பெண்களவ ரணிநோக்கிப் பேசுவாரே

இராகம்—கல்யாணி. தாளம்—ஆதி.

கண்ணிகள்.

க. குதிரைமீ தேறிவருஞ் சுந்தரன் பவனிதானைக்
குதித்துக்கொண் டோடிவந்தார் சிலமாதர்
எதிரிலாத வியனணிமது வுண்ணாவிழி யிரண்*டளிபோ
துமோவென்றார் சிலமாதர்

உ. அச்சிற் பதித்ததென வவயவத் தொன்றுமன
மதுதிரும் பவில்லையென்பார் சிலமாதர்
மெய்ச்சும வயவங்கள் பார்க்க வொணாத் தன்மனமும்
விழிகளும் வேணுமென்றார் சிலமாதர்

௩. பெண்ணுரு வெடுத்தாற் சடங்கவி பெற்றபெண் போற்
பெருந்தவம வேணுமென்றார் சிலமாதர்
கண்ணிணை படைத்ததற் கிவன்றவ னியின்றிருக்
காட்சியே பயனென்றார் சிலமாதர்

௪. §அணிக்கணி யாகவெண் ணரியணிகளை யெல்லாமேனிக்
கணியச்செய் தனனென்பார் சிலமாதர்
கணிக்கவ சமோசடங் கவிசுதை பெருமையைக்
கண்டுகொண்டு பார்ப்போமென்பார் சிலமாதர்

௫. உருவிலி யெனுங்குறை தீர்க்கத்த வத்திற்பெற்ற
‡வுரவிஜ னிவனென்பார் சிலமாதர்
மருவு லாவுமிந்த வையகம் பெற்றபெரு
வாழ்விவ னேயென்பார் சிலமாதர்

௬. அய்யன ருளினோக்கின் வெள்ளத்தின் மூழ்கித்திரிந்
தலைந்தோமென பார்சில மின்னார்கள்
செய்யபரியுமபாற் பரிவுடனே மெல்லமெல்லச்
செல்லுதெனச் சொல்வார்சில மின்னார்கள்

---

* கண்களாகியவண்டுகள், § ஆபரணங்களுக்கு அழகாகும்படி, ‡ மன்மதன்

௭. ஆடியின மைந்தவுரு வோவிவன் மேனிக்குண
மவயவந் தோணுதென்பார் சிலமாதர்
போடியிவன் தேவன்சாப காரணத்தா லிவ்வுருவாய்ப்
போந்தனன்போற் காணுதென்பார் சிலமாதர்

௮. பேரழ காலுயருஞ் சடங்கவி பெண்மேலிவர்
பிரியமென் பார்சில மடவியர்கள்
பேரார்ம ணந்தபுத்தூர்க் கென்றிவ்வூர்க் கிட்டவனைப்
பிரியம் பிரியமென்றார் மடவியர்கள்.

விருத்தம்.

வருபாத ரிவையுரைக்க மறையோ ராசீர்
வதிக்கப்பா விகைபேந்திப் பலபேர் பாடத்
தருமாம லர்கள்வீச வியங்க ளார்ப்பச்
சடங்கவிதம் மனையிலெழுந் தருளிப் புக்கத்
திருமாது குலவுமணப் பந்தருக்குட் செயுங்கலியா
ணச்சடங்கைத் தொடங்கும் போதங்
கொருமாதோர் பங்கினர்வே தியராய்வந்த தோதுவே
னிருவினையைக் காது வேனே

பதம். இராகம்—சங்கராபரணம். தாளம்—திருபுடை.

பல்லவி.

ஈசரெ ழுந்தருளி னார் வே தியர்போல்மு திர்
வடிவாய் மகிழ்ஜக தீசர்

அநுபல்லவி.

நேசரி டத்துக்கயி லாசத்து ரைத்தபடி
நித்தியா நுக் கிரகவரநிமலர்த டுத்
தாளக் கிழவுரு வொடுமகிழ்ந் தீசர்

சரணங்கள்

க. நயனமறைத் தொளிர்லலாடம திற் றிருநீ
றுபர்மதி யொளி வீச
நிலவுசரிந்தென நறைமுடிவிழமிகு நயமார்குழைகள் மூச
விபனூர்கண் டிகைதொங்கி விளங்குமு சல்போலாட
வீட்சித்தருள் பெருகிடமணியுருக் திராட்சப்பணி
யிலகிட விரைவொடும் (ஈசர்)

உ. நீளவசைந்திடுமுந் நூலுரக் கிலைசயக்
தோளுருத்த ரியமாடச் — சிர
மணிவார்சா மதிகெலியொருகுடை — வாளுற்று வெயில் மூட
ஆளுற்ற வண்டர்களை அளிக்கார் பண் டிசரிய
வணியார்பழ மறைகோவணமொனை லதன்மேல்நழு
வுடைசூழ் தரவர (ஈசர்)

ங. வெண்டுகி லுடன்குசை கொண்டு முடிந்தவேணு
தண்டமொ ருகையிலங்கக் — கனார்
நடையால்வழி கடிமாறிடவரக்
கண்டபேர் கள்* விலங்க
அண்டுபேரணி முதிர்ந் ததோவம்மு திர்ச்சிப்படி
வந்தானோ வைதிகம் அருள்முதல்
வன்றானோ வந்தானெனச்சொல (ஈசர்)

விருத்தம்.

பந்தரிடை வந்தமறை யோர்மணச்ச பைக்குட்சென்
றிந்தமொழி பகரக் கேண்மின்
சுந்தரனே டொருவழக்குண் டென்னவெங்கள்
தொன்றுள்ளோர் தவம் பழுத்து வந்தாற்போலும்
வந்தமுது மறையவரே யுரைப்பீர் கேட்டு வகையுரைத்துப்
பின்புமண மியற்று வேனென்
றந்தவிடத் துரைக்கவன்ப ருருகு நெஞ்சக் கச்சனு
ரிந்தவழக் கைச்சொன் னரே.

---

* விலக

யாதுக ருதியிப் போதிது சேதிந டுக்கமின்
றிச்சொல்லு டுக்கனென் பாரே

௨. சிலர்மருண் டார்கள் சிலர்வெருண் டார்கள்
சிலர்வெருண் டார்கள் சிலர்பகைத் தாரே
உலருஞ்சென் றுவினா ராகிச்சி லர்வசை
யோதிட வாரூர ரும்நகைத தாரே

ஆரியா.

அய்யர்சி ரித்திட நண்ணி
யாட்கொள் வான்வந்தவே தியருமெண்ணி
அய்யவர் வெகுளுற நேரே
சோதித்திடவந் தமாத வர்சொல்வாரே.

ஸவாய்.

௧. வாளாயு தம்போல்முன் னுளினுன் பாட்டன்நல்
§காளோலை யிதுபா ராரூர னே
காளாய றிந்திலை யேனுமிங் குசிரிக்
கத்தகு மோநம்பி யாரூர னே

௨. வேதிய னுக்கொரு வேதிய னட்புகும்
விந்தைகண் டதில்லை வேதியனே
ஓதிய சேதிநன் றீதுசொன் னப்பித்த
னேருறி யாக்கிழ வேதியனே

௩. என்னைநீ பித்தனென் றும்பெரும் பேயனென்
றும்பழிக் கின்றனை யாரூரனே
பன்னும்வ ழக்கில்வெட் கம்வரு மோசொற்
பனத்தும்வி டேனம்பி யாரூரனே

௪. இத்தனைக் குமென்னைச் சற்றும றிந்திலை
யேனும்பெ ருந்தகை யாரூரனே

§ ஆளோலை. அடிமைச் சீட்டு.

மெத்தப்பேச வேண்டா முனைபேவல் கொள்ளாமல்
விடுவதில் லைநம்பி யாரூரனே

௭ எந்தவு லகினுனு மில்லாவ ழக்கஞ்சொல்லி
யேபரி கஸித்தனை வேதியனே
அந்தப்ப டிக்குரல் லாதர வுளதெனி
லதைத்தா லக்கலாங்கிழ வேதியனே

௮. ஆதார வைப்பார்க்க நீசத்த னேசபை
யதனுள்ளோர் பார்க்கத் தென் ஞூரனே
வாதில்லா மலுமிப் போதேநமக்கடி
மைநிச்ச யமாநம்பி யாரூரனே.

விருத்தம்.

பித்தர்வடி வினையாராய்ந் துணரும் போதென்
பினையுருக்கு மெனினுமவர் கடுஞ்சொற் கண்டு
மெத்தவும்வெ குளிகிளைக்க நம்பிவந்த
வேதியரைத் தொடர்ந்துமுறி கிழிக்கச் செல்லத்
தத்திமெல மெலவோட விரைந்துபற்றித்
தாழாதோ லையப்பறித்துக் கிழிக்க வெங்கள்
அத்தரொரு மறையவர்கூக் குரலை யிட்டங்
காவென்பா ரிதுவுமுறை யோவென்பாரே.

பதம். இராகம்—செஞ்சுருட்டி. தாளம்—ஆதி.

பல்லவி.

முறையோ வெனப்பெருங் கூக்குர லிட்டார்
வேத முறையிட்டார் முறை (முறை)

அநுபல்லவி.

மறையோர் சபைக்குட் சிவனே யென்று வந்த
வெணைமணச் சுந்தரன் செய்தது (முறை)

சரணங்கள்.

௧. கூட்டத்தின் வந்தவென்மேற் சேட்டித்த னிவன் றன்
பாட்டனெழு தடிமைச் சீட்டைக்கி ழித்ததுவும் (முறை)

௨. ஆதர வைக்கிழித்த பாதர வைச்சமிக்க
வேதர§ மோவிது வேதர♀ மோவென்று (முறைபோ)

௩. அடித்துக்கொண் டுவந்தென்னை படித்துக்கி ழித்தா யென்னைக்
கடுத்துச்சுந் தரர்கையைப் பிடித்துக்கொண் டிருந்தல்ல (முறைபோ)

௪. *எருத்தப்ப ருவமையில் விருத்தப்ப ருவங்கண்டும்
வருத்தப்ப டுத்துநம்பி கருத்திப்ப டித்தாலும் (முறைபோ)

விருத்தம்.

அடுத்தவரெல் லாங்கலகத் தினைத்த டுத்தங்
கையனைப்பார்த் தப்பொருந்தா வழக்கைச் சொன்னீர்
தொடுத்துமதா ரெவ்வூர்சொன் னீரென வந்த
தொன்மறையோர் வெண்ணெய்நல்லூரெனவு மென்கைப்
படுத்தவடி மைக்குறிப்பைக் கிழித்த தாலிப்
படியடிமை யெனப்பழமன் றுடிபோவென்
றெடுத்துநம்பி யிதனையுன்னார்க் குரைப்பா யென்ன
வேகினார் கடுங்கோப மாகினாரே

பதம். இராகம்—சகானா தாளம்—ஆதி.

பல்லவி.

வெண்ணெய் நல்லூர்க் கேகினார் ० தொண்டர்
கண்ணன் பாகினார்-திரு (வெண்)

§ தரம்—உயர்வு. ♀ தரம்—வீரம். * எருத்து அப்பர்—இடபத்தை யுடைய சிவபிரான். ० தொண்டர்களிடத்து அன்பரானார்.

அநுபல்லவி.

அண்ணலெனும்நம்பி யாரூரரைத்தடுத்
தாட்கொள வெண்ணிமன்றல் நாள்தின நண்ணித்திரு
[வெண்ணெய்

சரணங்கள்.

௧. சிந்தை களித்துமிகச் செல்கின்றாய் மிகநன்று
என்றன்மனத்தின்படி யேமுடிக் கிறேனென்று
(வெண்ணெய்)

௨. ○ அங்கோலத்தின்வித்த தன்மரத் தண்ணலென
நன்கோலத்துநம்பி நாடித்தொடர்ந்துவர (வெண்ணெய்

௩. எப்படிக் காமிதனைப் பார்ப்போமென் || றற்றார்
ஒப்பிப்பின் செலத்தடி யூன்றி யன்பருக்குற்றார் (வெண்

விருத்தம்.

அதிவிரைவிற் சென்றவ்வூர்ச் சபையினுட்புக்
காங்குநடந் ததைநாத ருரைக்க மண்ணில்
விதிநடக்கா வழக்குரைத்தீ ரெனலுஞ் சங்க
மெச்சுவழக் கொடுமதித்து வந்தோ முன்போர்
ததியிலிந்த நம்பியின்மூ தாதையாற்றந்
தவழியடி மைச்சீட்டைக் கிழித்தா ரிந்த
மதிமுறையோ வெனமன்றல் புரியவந்த
வரைப்பார்த்திங் கிந்தமொழி யுரைப்பார் தாமே.

அபங்கு.

௧. காட்டு முறிகிழிக்கப் போமோ—வதில்
நாட்டும் ஐயமுமக்குண் டாமோ—வெனக்

---

○ அங்கோலம்-அழிஞ்சி விருட்சம், அதன் விதை ஷை மரத்தில் தானைப்பற்றிக் கொள்ளுதல் இயல்பு. || உறவினர்.

கேட்டிடு மறையவர் நேரே—நன்றாய்க்
கிளத்தல்செய் வார்நம்பி யாரே

உ. தலைமுறை தலைமுறையாக—வாதி
சைவ ரென்னமுன் பாக
நிலைபெறத் தெரிந்தவர் நீரே—நன்
னீதியொடும் விசாரிப்பீரே-என்று

௩. நம்பி யாருமுரை செய்ய—வந்த
ணரைப்பார்த் தவையுளோர் பைய
நம்புமத் தாட்சியும் மாலே—காட்டி
நம்பிக் குரைத்திடுவோ மேலே

௪. ஓலை காட்டியின்னங் கிழிப்பான்—அறிந்
துஞ்செய்தி டில்நம்மைப் பழிப்பான்-பின்பு
மூலசா ஸனம்வேறு முண்டு—காட்டில்
முராணுட னேதிண்டு மிண்டு

ரு. செய்யாதி ருக்கச்செய் வீரா—வெனச்
செப்பவு மிசைந்திட நேராய்
ஐயர் வைக்கச்சபையோ ரொடுத்துக்—கர்ணன்
அஸ்தம தனிலொப்பிக் கொடுத்து

௬. படிப்பா யெனவவன் வணங்கி—வாங்கிப்
பக்தி யுடனேமிக விணங்கி
* வடிப்ப மாகவா சிப்பான்—சபையோர்
மனமுங் கூர்ந்துயோ சிப்பார்

௭. நாவலூ ராதிசைவ னூரன்—வெண்ணெய்
நல்லூர்ப் பித்தற்கு † நான்மகன் பேரன்—தாங்கள்
ஏவியப டிக்குவழி வழியாய்த்—தொண்
டியற்றுவோ மென்றுமுறையின் வழியாய்—இந்த

* அழகு. † நான், மகன், பேரன் முதலானவர்கள்

அ. முறியென் ஸ்வஹஸ்தலி கிதமென—பாரு
மறியவா சிக்கமிரு கவன-மொடு

நெறியுடன் மேலெழுத் திட்டார்—பார்க்கில்
நிசமா யுளதென் றுரை யிட்டார்

௯. பெருஞ்சபை யோர்நம்பி யாரைப்—பார்த்துப்
பேரெழுத்தோ சொல்வீர் நேரே-யென

வருந்தீரர் சொல்வர்ஸ‾ந் தானே—சீட்டை
வாங்கிப் பார்த்திடவுந் தானே

௰. நீங்கள்பார்த் துரைப்பீ ரென்றார்—முன்
னெழுத்துடன் தோதிடுவீர் நன்றாய்-என்ன

ஆங்கவர் தோதிட்டுப் பார்த்தார்—நிச
மாயிருந் திடகடுத் தீர்த்தார்

௧௧. தோல்விய டைந்தீர்நம்பி யாரே—ஐயர்
சொன்ன ஏவல்கேட் பீரே-யென்று

மேவுஞ்ச பையோர் சொல்லக் கேட்டார்—முன்னம்
விதித்தறி தவென்றெண்ணிப் போட்டார்

௧௨. ஆதி வன்னமுதி போராய்த்—தடுத்தாட்
கொள்வோ ரைநோக்கி நேராய்

ஓதுவர் பெருஞ்சபை யோரே—மன
முருகும் வென் னையனே யாரே.

விருத்தம்.

வேதியரே யெமதுமுன்பும் மாலே காட்டும்
விபன்சீட்டிவ் வூருமக்கென் றதிற்காட் டிற்றென்

றோதுமனை நிலமெங்கே யெனதுமெம்மை
யொருவருநீ ரறியீரேல் வாலா மென்றப்

போதுமறை யவரோடுநம் பியும்பின்போதப்
　　பொருந்துமருட் டுறைக்கோயிற் புகுந்தா ரையர்
ஏதிடஞ்சென் றூரெனவே திகைத்தா ரப்போ
　　தெம்பிரா னருள்செய்தார் நம்பி யார்க்கே.

பதம். இராகம்—கல்யாணி. தாளம்—ஏகம்.

பல்லவி.

அருள்செய் தனர்நம்பி யாரூர ருக்கு நம்பி. (அருள்)

அநுபல்லவி.

தெருளும் வேதியர் கோயிற் புகுந்தவர்க் காணோமென்று
திகைத்தவரைத் தனியே அழைத் துமையொடு
[விடைமேனின் (றருள்)

சரணங்கள்.

க. நமக்குநீ தொண்டன் முன்பு நங்கையர் மோகத்தாலே
யிமைக்குமுன் மண்ணிற்பிறந் திடெனுநம் மேவலாலே
அமைத்திடு முனைத்தடுத் தாட்கொள்வோ மென்றன்பாலே
சமைத்தப டிக்குமுன்பாலே—வந்தாண் டோமென்று
மழைபோலே (அருள்)

உ. ஈசரருளுந்திரு வாக்கிரு செவியேற
நன்றப சுக்குரற்கேட் டிடுங்கன்றெ னவன்பூற
ஆசைதி கழம்பலத் ததிபரே யின்பமீற
அன்பர்ம கிமையேற—மனத் தாவலெல்லாம் நிறைவேற (அ)

௩. வானிற்பஞ் சதுந்துபி மகிழ்ந்தெங்குங் கோஷிக்க
மலர்மழை பொழிந்தண்டர் மனங்கள்ஸந் தோஷிக்க
மாநிலத் தினிலுந்தம் முடனேஸம் பாஷிக்க
வருமன்பர் தமையங்குபோ—லிங்கு மகிழ்ந்து போஷிக்க
[மிக (அருள்)

---

௦ திருவெண்ணெய் நல்லூர்க் கோயில் கர்ப்பக் கிரகம்.

௪. நம்மையும் வன்மைபேசி யதனுல்வன் ருெண்டனென்று
நாமமூற் றுநமக்கு நேமவர்ச் சனையென்று
செம்மைபெ றுந்தமிழாற் பாடித்து திப்பாய்நன்று
செயும்பே ரின்பமொன்று—நற்கதி யருள்வோ மென
[முன்னின் (றருள்)

விருத்தம்.

கருணைமழை பொழிந்துநம்பர் நமைப்பாடித்
துதியெனலுங் கமலம் பூத்த
வருணமணி யிணையடிக ளினிற்றாழ்ந்து
வணங்கியெழுந் தத்த னேநின்
பெருமையனந் தகுணகெணங் களையுபதி
டதங்களுஞ்செப் பிடவொண்ணு தேற்
றருமவுரு வேயறியே னெவணமுரைப்
பதென நம்பர் சாற்றுவாரே.

ஸ்வரம்.

௧. ஆதியி லேநமைப் பித்தனென் றுயத
னுற்பித்தனென்றடிச் சீரில மைத்தே
ஓதுவை யென்னப்பித் தாபிறை சூடியென்
றுற்றபதிகமி ஞ்சயோ டிசைத்தே

௨. அன்புடன் பாடிடும் பக்தரை நோக்கியின்
னம்பல்வகையினம் பாடிட நன்றாய்
இன்பம்பெ றுதியெ னவுரைத் துநம
தின்புகழ் பாட்டினி லேதுதி யென்றார்.

விருத்தம்.

வில்லாரும் பொன்மலையா ரருள்புரியப்
பணிந்துநம்பி விடைமே லுற்ற
நல்லார்மே வருட்டுறையார் திருவெண்ணெய்
நல்லூரின் னுவ லூர்க்கு

நெல்லாரும் பெரும்பணைசூழ் திருத்துறையூர்க்
குஞ்சென்று நெறியிற் பாடி
மல்லாரும் பலதலங்கள் பணிந்துபுலி
யூர்க்கேக மதித்தா ரன்றே.

ஒவி. இராகம். சென்ஸ்ஜூட்டி. தாளம்—ஆதி.

க. எண்ணிவழி கூடி யின்பமனம் நாடிப்
பெண்ணைநதி கடந்திடப் பேரிரவி யோடி

உ. மேற்கடலை மேவ வித்தகரு மாவல்
மேற்கொளக் கடிலநதி மேவதிகைத் தேவர்

ங. நன்னகர்ப்பு றத்தி ருவலூரார் பக்தி
மன்னிய நாவரசுழ வாரப்படை நத்தி

ச. கைத் தொண்டியல் கொள்ளுங் கடிநகரென் றுள்ள
பக்தியொடு கால்படப்ப டாதெனவே விள்ளும்

ரு. சித்தர்வட மடமே பக்தர்சென்றவ் விடமே
நித்திரை செய்யநிமலர் நீடுமனத் திடமே

சு. பூண்டகிழ மறையோர் போலவெங்க ளிறையோர்
ஆண்டகை தலைமேற்றுள் வைக்கக் கண்டின்பத்
[துறைவோர்

எ. ஐயரே நும் பாதம் அடியேன்சிர மீதும்
எய்தியதென மூப்பினு லென்றிடவப் போதும்

அ. வேறிடத்தை நாடி வித்தகர்கண் மூடிக்
கூறுந்துயில் கொள்ளமறை கோடியி னந்தேடிக்

கூ. காணப்பதந் தன்னைக் கட்டழகர் சென்னி
பூணவைத் திடநாவலூர்ப் புனிதரு மென்னை

கo. அடிக்கடிமி திக்கும் ஐயரைம திக்கும்
படிக்குநீர்யார் சொல்வீரெனப் பண்பொடுது திக்கும்

கக. ஐயரும்நீ யின்ன மறிந்திலையோ வென்னத் துய்யர்மறைந்
திடக்கண்டு தாணுக்கிட்டிடிம் கென்ன.

கலித்துறை.

செய்தே னெனத்தெளிந் தன்பர்கண் ணானந்தத் தெள்ள [முதம்
பெய்தேமெய் யெங்குமு ரோமம் புளகித்தன் பின்பெரு [மைக்
கெய்தேனை யெய்தவைத் தாட்கொண்ட மூர்த்தியி னற்ப [வத்தைக்
கொய்தேன்கொய் தேனெனக் கொண்டாடி யேதுதி கூறி [னரே.

பதம். இராகம்—பூரிகல்யாணி. தாளம்—ஆதி.

ஸாவனமனபலகாலீரேனெவனு மிந்துஸ்தானி வர்ணமெட்டைப்போல.

பல்லவி.

துதித்தார் மன முருகியெம்பரனைத் (துதித்தார்)

அநு பல்லவி.

மதித்தா ரணி சிவபெரு மானைத் (துதித்தார்)

சரணங்கள்.

௧. தம்மானை யறியாத சாதியாருள ரேயெனப்
பெம்மானுக் குப்பதிகம் பாடித் (துதித்தார்)

௨. தட்சணகங் கையெனச்சொல் உச்சிதக டிலநதி
யிற்சைவம றையோர்மகிழ்ந் தாடித் (துதித்தார்)

௩. தேசமுட னேமனத்தி லாசைமிக வெங்கள்வீரட்
டேசரிரு தாளிணையைப் போற்றித் (துதித்தார்)

ஸவாய்.

௧. துங்கவ திகையி னங்கணரைப் போற்றிப்
பொங்குங்கெ டிலத்திற் றென்கரை நாடி

மங்குல் நிகர்மா வலிபால்மண் யாசித்தி
லங்கிய மால்பணிந் தங்குகொண் டாடி

௨. வழிபட்டி டுந்திரு மாணிகு ழியின்
வரனைப்ப ணிந்துமன மகிழ்ந்தேகிச்
செழிமலர்ச் சோலைத் திருத்தினை நகரிற்
சென்றர னைப்பணிந் தேகிருவாதி

௩. செந்தமி ழாலுய ரும்நீறு தாங்கிய
திருநாத லானையெ னும்பதிகத் தா
லுந்துதித் தேற்றி யுவந்தவின் னோர்கள்க
ணங்தொழுந் தில்லைம ருங்கணைந் தற்றார்.

இராகம்—எதுகுலகாம்போதி. தாளம்—ஆதி.

கண்ணிகள்.

௧. இனிய பத்தருரம் பூழிப டந்தில்லை
யெல்லையை வணங்கினர்
கனியமு தனையப நவல்நா ஆறிடச்சொல்லுங்
கருத்து மிணங்கினர்

௨. நாகவ குளநாளி கோரம் ரஸாள
நளிர்முகில் போற்கூடிப்
போகபூ மியினும் விளங்கும் புறம்பனையிற்
போந்துக டந்தாடி

௩. வன்னி கொன்றை செருந்தி செண்பகம்
வகுளம் மந்தாரங் கன்னி காரம்
மன்னு ஜாதி முல்லை மல்லிகை சூழ்நந்த
வனத்தைப் பணிந்திந் நேரம்

௪. தவிநா யகிமகிழ் மறைச்சிலம் பொலியைத்
தாம்பணி மறைநகரைப்-பணிந்
தினிதுபெ றக்கடல் சூழ்ந்தெனு மிஞ்சி
யிடத்தக ழிகண்டாரே

௫. நடனம் புரிநசை யால்மறைச் சுரும்பறை
நகர கழ் மலர்வண்டே
இடம்வளர் கேதகைச் சுணம்படிந் தன்பர்போ
விசைக்கும் வண்டுகள் கண்டே

௬. *மணிநா விசையால் வெண்கொடி யால்நான்
மறைசேர்நான் முகங்களால்
அணிசேர் போதன்போல் விளங்கிய நகருத்
தரவா யில்கண்டன ரால்.

வெண்பா.

அன்பினடி யார்கணமோ வாரூரி னம்பியரோ
முன்பணிந்தார் யாரோ முறைவணக்கோ—டின்புற்றுக்
‡ கும்பிடுகைத் தொண்டாரு குற்றுவரக் கோயில்கண்டு
† கும்பிடுகைக் கொண்டாராங் கு.

பதம். இராகம்—சுருட்டி. தாளம்—ஆதி.

பல்லவி.

வாயிலைக்கண் டுவணங்கி ஞரே மறை
வாயிலங்கு மாரூர்நம்பி யாரே-கோபுர (வாயிலை)

அநுபல்லவி.

தாயும்தந்தை யும்போல்ரட்சித் தாயும்ஜக தீசர்நிஜ
தாசரெல்லாம் போற்றும் நடராஜர்வளர் திருக்கோயில் ()

சரணங்கள்.

க ஆரணச்சா லையுமத வாரணச்சா லையுமணித்
தோரணச்சா லைகளையுந் தாண்டி—மறை
யந்தணர்வேள் விச்சாலையு மீண்டிச்-சிற்
றம்பலத்த ரசைத்தொழ வேண்டிச்-சிகர (வாயிலை)

* பிரமனுக்கும் சிதம்பரத்திற்கும் சிலேடை. ‡ கூட்டமுள்ள தொண்டர்கள். † கும்பிடுந் தன்மை.

௨ எண்டிசையி லுள்ளவ ளெல்லாந்திரண் டொன்றுய்வந்த
தென்னவணி சேர்மறுகை நாடிக்—கடந்து
தொண்டர்கள் சூழ்தர வுறவாடி.—யெங்க ளண்டர்பிரான்
றிருவடி தேடி-விரைவிலோடி (வாயிலே)

௩ தேவர்களி றைகளும்பின் பூவுலகி லுள்ளசித்தர்
மேவியவன் பர்களெல்லாஞ் சேர்ந்து-செல்
வேபிரம்பி னடிகளைத் தோய்ந்து—புகுந்
கோயில்வலம் வந்துகளி கூர்ந்து-திரு (வாயிலே)

விருத்தம்.

பணிந்தெழுந்து சிரமீது குவித்தகைய ராய்ப்பேரம் பலத்தின்
மேவும்
* தணிந்திரவி வலம்புரிமே ருவைமுறையே பிரதக்ஷிணித்துத்
தான்வணங்கித்
○ திணிந்தமறை யாதிமத்தியாந் தத்தன்ப ரகத்தலர்தே
சிலங்கவைக்கண்
டுணிந்ததொண்டர் பணிந்துநடே சரைக்கண்டார் தேவாரத்
துரைகண்டாரே

பதம். இராகம்.—ஸ்ரீ. தாளம்.—ரூபகம்.

பல்லவி.

நடரா ஜரைக்கண்டு வந்தித்தார் ஸ்வரூபா நந்தவொ
ளியைக்கண்டு சிந்தித்தார்-குஞ்சித பாத (நட)

அநுபல்லவி.

திருடபக்தி யில்மிகுந்த சீர்த்தியார் கல்விக் கடலைப்ப
ருகிடும் சுந்தர மூர்த்தியார்-தில்லைத்திரு (நட)

* தணிந்திரவி—தண்-இந்து-இரவி யெனப்பிரித்துக் கொள்க

○ நெருங்கிய வேதங்களின்—ஆதி-மத்தி-அந்தங்களிலும் அன்பர்களுடைய அகங்களிலும் பிரகாசிக்கும் ஒளி விளங்கும் சபையின் தண் என்று பொருள் கொள்க.

### சரணங்கள்.

௧ ஐயறி வுங்கண்களை கொள்ளக்-கா
ணங்கள் நான்குமனசா யுள்ள
மெய்யறி வுறும்ஸத்துவ மாகமுக் குணங்களும்
மேதகு நடனப் பேரின்பம் பெருகிட
நவ நீதமென மனமுநெக்குருகிட (நட)

௨ அமிருத கிரணசந்திர சூடர்-விண்ணோர்
சமுகத்தி ருநடனம் நாடப்-பெற்றுச்
சபையுமிப் பிறவியே வாவிதென் றுநீட
அமையுநான்மறை களுந்துதிகள் பாட
அன் பாவலுடனே மிகவேகொண்டாட (நட)

௩ இதயக மலவிதழ் விரியத் தம
திருகண்கள் பாஷ்பங்கள் சொரிய
மதுநிகர் மடித்தாடு மடிமைக்களன் றிபேபென்
றதிகமாகவே மனத்தில்மிகு பிரிய மாகவின்பமு
றநவின்று தெரிய (நட)

### விருத்தம்.

நடுத்தாட் கொண்ட பெருமான்மேற் சாற்றுந் திருப்பதிகம்பாடி
யெடுத்துத் தொழுது துதித்துநிற்க வினிது மகிழ்ந்து நடராஜர்
தொடுத்த வருளா லாரூரிற் றலங்கும் நம்பால் வருகவென
வடுத்து வானி லொலிகேட்ட வளவிற் பணிந்தங் கெழுந்தாரே.

இராகம்—சகனா. தாளம்—சாப்பு.

### கண்ணிகள்.

௧ ஆநந்த நர்த்தன வரசரு ளாடினார்
மேனிக ழப்பணி விடைசிரஞ் சூடினார்

௨ அம்பலஞ் சுற்றிப்பே ரன்பர்வ ணங்கினார்
பின்புமுன் பாய்நடந் தின்பத் திணங்கினார்

௧ பொன்மலை யாம்கோபுர வாயில் கடந்திட்டார்
பன்னிலைச் சிகரியைப் பணிந்து நடந் திட்டார்
௨ வீதியுந் தில்லைமா வெல்லையும் வந்தித்தார்
ஏதமி லீசரி னையடி சிந்தித்தார்
௩ கொள்ளிடந் தாண்டினர் உள்ளுமன் பீண்டினர்
வின்ளும்பே ரின்பத்தை மிக்கவே வேண்டினர்.

விருத்தம்.

அன்னைதிரு முலைஞானப் பாலயின்றார்
பிறந்தபெற்றி யதனைப் பெற்ற
தென்னமுற்று லகிற்சிறந்த கழுமலமா
நகராருகி லெய்தி முன்னம்
துன்னியசீர்த் திருஞானப் பிள்ளையா
ருதித்தபுரந் துள்தாள் வைத்து
மன்னிடவெண் ணுதெல்லை வலமுற்றுப்
பணியவிறை மகிழ்ந்தா ரன்றே.

ஆர்யா.

இறைமகிழ் வாய்விடை மீதே
யினிதாமெதிர்காட் சிமேவ வருபோதே
நிறைபே ரழகினர் கண்டார்
களைகா ணுதமயலார்பி றவிவிண்டார்.

பதம். இராகம்—கமாஸ். தாளம்—ஆதி.

பல்லவி.

ஈச ரடிபோற்றினர் மகிழ்ந்தேற்றினர் * ஏற்றினர்(ஈசரடி)

அநுபல்லவி.

மாசிலா வுமைமாது வாமபா கமருவத்
தேசின்வி டைமேற்பருவ கதிர்கோடிபோ ருவவரும் (ஈச)

* விடையையுடையவர்.

சரணம்.

௧. ‡புகலியா ரெனநம்பு புகலியர் ரிடத்தன்பு
மிகவேவைத் தருள்விளம்ப் பிசைப்பதி கத்தால்விரும்பு ()

௨. கழுமல வளநகர் கண்டுகொண் டேனென்று
வழுவில்ப திகம்பாடியே வலமொண்ட ரிறைஞ்சிமுன்னின்
(நிசரடி)

வெண்பா.

எழுந்தகையோ டன்ப ரிறைஞ்சக் கருணைக்
கொழுந்தெதிரே காட்சி கொடுத்தங்—கெழுந்தருள
நம்பியாரூர்மேவ நாடுவிருப் பெய்தவெல்லை
கும்பிட்டுச் சென்றாராங் கு.

இராகம்—முகாரி. தாளம்—மிச்ர சாப்பு.

கண்ணிகள்.

௧. சாலைப்புறவப் பதிபோற்றினார்—திருக்
கோலக்காவைப் பணிந்தேற்றினார்
பைந்-தமிழ்ச்செந்தே னெனக்கூறித்
திருப்புன்கூர் செலத்தேறி

௨. நம்பரிணைய டிவணங்கினார்—பே—ரின்பத்தமிழ்
சொல்லி யிணங்கினார்—பல
நற்றலங்கள் பணிந்து○காவிரி யொத்திலங்கு
தடங்கொள் ||காவிரி

௩. நதிமருங்கணைந் தின்ப மாகினார்—படிந்ததிப்பிரி
யங்கொள வன்பரேகினார்—புகழ்
நாடுதிருமயி லாடுதுறைபணிந் தாடவர்கள்தகை
நாடிமன மகிழ்ந்

‡ புகல் யாரென—புகல்யாரென்று. புகலியார்—புகலியர்.
○ கா விரி—சோலைகள் விரிவர்க.
|| காவிரி—காவிரிநதி

௪. தின்பம்பெறமா காளஞ் சென்றிட்டார்—எங்கள்
நம்பரைத் துதித் ததிர்நின்றிட்டார்—அப்பா-
லேகிப்புக லூரீசரை யேகற்றவர் நாவாரவே.

கலித்துறை.

துதித்தார்நம் மீசர் திருவரு ளுடித் துலங்குமன
மதித்தார்பொன் ளுருத் தரியமுன் னுலணி மார்பரின்பங்
கதித்தார் புகழ்த்திரு நன்னுவ லூரர் கனிந்தசொற்குட்
டிதித்தாரு நாமர்தென் னுரூர்க்குச் சென்றனர் செவ்வி
[யரோ.

பதம். இராகம்—கானடா. தாளம்—ரூபகம்.

பல்லவி.

ஆரூர்க்குச்சென் ருர்ஸுந்தரர் ஐம்பகையும்
வென்ருர் நன்ருர் திரு (வாரூர்)

அநுபல்லவி.

காரூருந்தண் டலைசூழ் தண்டலை
கமலா லயஞ்சே ரமல மார்ந்திடு (மாரூர்)

சரணங்கள்.

௧. அந்நகரில்வாழ் பவர்க்கு நம்மன்பன்
ஆரூரனோா மழைத்திட வின்பம்
மன்னிவ ருகிரு னெதிர்சென்று
வம்மினழையு மெனவிறைவாய் நன்மொழிபெறு
[வார்விரைவாய் (ஆரூர்)

௨. எங்கும் கொடிகள் நிறைந்த மேடைகள்
துங்கமு றுந்தோ ரணங்கொள் வாடைகள்
பொங்குங்கதலி கமுகு கள்மிடைந்
தங்கங்கணி யாகமிளிர வுங்கண்களி கூரவொளிரு (மாரூர்)

௩. பூரண கும்பந் தீபம் கதம்பப்
பொடிக ணிறைந்த மருங்கும் விதம்பெற்
றுரும் வேதிகை பொறிபொற் சுண்ண
மழகியமணி பரப்புந் தொடை
யிலகுநறிய வனட்பந்தர்கொள் (ஆரூர்)

௪. நாக சுரமே ளங்கள்கோஷிக்க
மோககீதந டம்வி சேஷிக்க
பாகமுறுந்தொண் டர்களைப் போஷிக்கப்
பருமானனி கரவரசிவ பெருமான்மன சுஸந்தோஷிக்க ()

விருத்தம்.

தொண்டரெலாஞ் சிவநாமகோஷஞ் செய்து
துன்னுமெயிற்புறத் துவந்து சூழ்ந்து போந்து
கண்டுவன்றொண் டரைவணங்க வவருந்தொண்டர்
களைவணங்கி மறுகினிடைச்செல் போதுசிந்திக்
தெண்டருந்தொண் டரைநோக்கித் திருவாரூர்
எம்மையுமாள் வரோவெனவே பதிகம்பாடி
யண்டர்பிரான் திருக்கோயில் வாயில்முன்சென்
றணிந்தாரைப் புணைந்தவரைப் பணிந்தார் தாமே.

ஸவாய்.

பணிந்தங்கெ ழுந்துதே வாசிரி யமண்ட
பத்தைவ ணங்கிக்கு வித்தகை யோடுந்
தணிந்தி டாததிருட பக்தியோ டெழுலத்
தானத்தைப்போற்றிவ ணங்கியன் போடும்

பதம். இராகம்—தஞசரி, தாளம்—ஆதி,

பல்லவி.

০ ஏற்றினு ரை யேற்றினுர் எழும்பிறவி மாற்றினுர் (ஏற்றி)

০ ஏற்றினுரை—இடபத்தையுடையவரை.

அநுபல்லவி.

மாற்றினு யர்பொன்போல மைந்தசுந்த ரருஞ்சால (ஏற்)

சரணங்கள்.

௧. மூலஸ்தான வாஸரைச் சீலத்தொண்டர்நேசரை
வாலைப் பற்றிடங் கொண்டாரைக் கோலப்புற்றிடங்
[கொண்டிடும் (ஏற்றி)

௨. அங்கம்புள கங்கொள வன்புநிறைந் தின்புள (ஏற்றி)
பங்கயத்தாள் வந்தர்ச்சிக்கும் கங்காதர
[ரைக்கர்ச்சிக்கும்

௩. நெக்குருகிப் பாடியே மிக்கபாஷ்ப மோடியே
/யக்கரையக் கரையார்ந்தசாஷ்டாங்கஞ்செய்தன்
[புகூடியே (ஏற்றி)

விருத்தம்.

அன்பினுக் குருகி யெம்மா னூநார் மகிழ நம்மை
யின்பமா ருனக்குக் கோழ ரெனத்தந் தோம் வேள்விக் கெய்தி
முன்புனைத் தொண்டு கொண்ட முயற்றில்நீ கொண்ட கோலத்
துன்பெறும் வேட்கை தீரென் றுயர்வான்வாக் கெழுந்த தன்றே.

வெண்பா.

மருவாய்க்கும் கொன்றை மலர்ச்சடைய ராற்செய்
திருவாக்கைப் போற்றியன்பர் செங்கை—*பொருவாக்கும்
மாலைக் கமல மதைப்பொருவ வேமுகிழ்த்துச்
சாலவே தோத்திரஞ்செய் தார்.

பதம். இராகம்—காம்போதி. தாளம்.—ரூபகம்.

பல்லவி.

துதித்தா ராரூர்வா ழீசரைத் தியா கேசரை நேரே (துதித்தா)

/ அக்கரை—உருத்திராட்சமாலையணிந்தவரை.
* பொருவு—ஆக்கும்—குற்றத்தைச் செய்யும்

அநுபல்லவி.

கதித்தார கத்தினேசரைத்—தியாகேசரைப் பணிந்து (துதி)

சரணங்கள்.

௧ வாள்விழி மங்கைபங்கரை—வரதவுத் துங்கரை
யாட்கொண்டதுங் கருணைநேரே—
அதன் பெருமையைச் சொல யாரே—யெனத் (துதி)

௨ எய்தாப் பெருமையை—யெய்தச்செ யருமையைச்
செய்தவும் மகிமையைச் சொல்ல—யாரோ
தேடு மன்பர்மனக் கமலத்தேனோவென்று (துதித்தார்)

௩ ஈசர்தோழ ரென்னமன்னவே—யிசைதொண்டர் பன்னவே
மாசிலன்பர்கள் மகிழ்வுதுன்னவே
மறைகளறியா முதலே யென்னவே (துதித்தார்)

விருத்தம்.

இவ்வாறு துதித்தெழுந்து வீதிவிடங்
கரைப்போற்றி யிறைஞ்சித் தாழ்ந்து
செவ்வாறு பெருந்தொண்டர் தம்பிரான்
றோழரெனச் செப்பி டச்சென்
றவ்வாறு மகிழ்சைவ முத்திரைப்ப
ணிகளொடுமா லையுஞ்சாத் தங்கொண்
டெவ்வாறுஞ் சிவகருணை யாளுமெனு
வானந்தத் திருந்தார் தாமே.

கலித்துறை.

நிற்றலும் புற்றிடங் கொண்டாரைப் பாடிநன் னேயருறப்
பற்றிகழ்ந் தோர்வள ருங்கையி லைக்குட் பரமரிடம்
உற்றவ ளுக்குப் புரிதொழிற் சேடிய ருட்சிறந்த
நற்ற கமலினி யாரூரிற் றோன்றினர் காரணத்தே.

பஞ்சசாமரம்.

௧. ஆரூரில்ருத்திர கணிகை யர்குலத் தார்தெள் ளமுதமே—வந்து
நேருறவவ தரித்த பெண்கொடி யார்மின் னிதயமே—யெனப்

௨. பொங்கு மின்ப வுருவுக்கு நாம மின்கொள் பரவையா—ரென்
றெங்கும் புகழ விசைத் தனர்கள்பல் வியங்கொ டினிமையார்

௩. காப்பு மிட்டுத் திங்கள் முதிரக் களிப்பிற் றுலங்கினார்—மூன்
○ கூப்பிட் டயின்றார் மகிழ்ம லர்மங்கை குணம்போ விலங்கினார்.

௪. தளரும் நடையுங் குழறு மொழியுந் தந்தத்தின் முளையுமே—
வளரும் குழலுஞ் சரிவுற அணி மல்கி விளையுமே. [சற்று

வெண்பா.

சுட்டி நுதலிற் றெருத்துச் சிறுபணிகள்
மட்டி லணிவய வத்தணிந்து—பொட்டிட்
டயினிநீர் சுற்றி யனைமார் கிளைபோற்
பயிலவளர்த் தார்மிகவன் பாய்.

இராகம்—ஆனந்தபைரவி. தாளம்—ஆதி.

கண்ணிகள்.

௧. மானி னிளம் பிணையோ—மூகை
வாய்விள்மதன் கணையோ—வாசத்
தேனி னிள குமிளம் பதமோ—வமுதாற்
செய்மித் திடுபணையோ

௨. அவரி னிளங் கொடியோ—மதிக்குச்
சுடருத வுங்குடி யோ—†காமன்
நிவரும் பருவங் கற்கும் பருவம்
நிகழ்தரு வின்பிடியோ

---

○ பூமியைப்பிட்டென நினைத்துண்டவர். அவர் மகாவிஷ்ணு.
† மன்மதன் வளரும் பருவத்திற்கமைந்த கணுக்கள் பொருந்திய கரும்பின் வில்லோ பெண்ணுனையோ.

௩. வளர்கலை யெனவோங் கும்—பொற்பும்
வயதும் வரவேதாங் கும்—கழங்கோ
டிளகிய பந்தம் மனையா டலபயில
வேயிடை தளர்ந்தோங் கும்

௪. ஊசலின் மீதிருப்பும்—அம்பிகை
பாடலின் மேல்விருப்பின்—குறிப்புந்
தோன்றிடப் பிள்ளைப் பருவமும பேதைப்
பருவஞ்சென் றிடுங்குறிப் பும்

௫. காம ராஜனீட்டுங—குவைத்தனங்கள்
காட்டுந்தனங்கள் நீட்டும்—கோங்
கருமபை யவமதிக்க ௦ முன்குறிப் புணர்த்தவே
கவின்மிகப் பாராட்டும்.

விருத்தம்.

இத்தகை யணங்கனூர்புற் றிடங்கொளெம் மானைப் போற்றி
டத் * தகை யின்றிப் பாங்கி யருடன்கோ யிலுக்குட் சென்று
வித்தகை யாரைக்கண்ட மேதகை யாரூர் நம்பி
குத்தகை பாகநெஞ்சைக் கொளுமவர் யாரோ வென்ன

பத்தியம். இராகம்—ஆனந்தபைரவி.

கற்பகக் கொம்பரோ—காமன்ம லரம்பரோ
காமனூர் பெருவாழ்வோ—கதிர்மதிய மோ
பொற்புலவு புண்யஞ் செய்—புண்யமோ மரைகுவளை
பொற்காந்தள் பவளமணி—பூத்தலதையோ
நற்கமலை யுருவமிதை யொக்குமோ யீசர்தண்
ணளியோ விண் ணொளியோ—பிராணவளி யோ
அற்புதஞ் சேர்சுதைப் பதுமையோ புதுமையோ
அயனு லமைத்த ரத்தின தீபமோ.

---

௦ தாம் ஆதியில் உமாதேவியாருக்குத் தோழியாயிருந்த தன்மையைக் குறிப்பால் யாவருக்கும் உணர்த்தலால அவ்வழகு பாராட்டப்படும்.

* தடையின்றி.

சிற்பரா லெழுதாத நவசித் திரமோ
திண்மனமு ருக்குகரு விவிசித்ரமோ
எற்பொருட் டுதயமோ வெனநாடியே
யெண்ணமுற் றனர்நம்பி யுளம்வாடியே.

விருத்தம்.

தண்டாளம் படிகருத்தி ராக்கமணி வடம்புனைந்த சாமி நேரே
கண்டிடவு§மதன்மலரைக் கண்டிடவு மனத்துளடங் காமயக்கங்
கொண்டிவர்நின் றிடப்பண்டை விதிகூட்டக் கமலமிசை குலவி [வாழ்நற்
கெண்டைநிகர் கட்கடையார் நோக்கிச்சென் றூர் [பெண்ணங் கரசுமாதோ.

வெண்பா.

* பரவையார் நோக்கிற்சட்—பந்திக்க‡மேனி
பர்வையார் பார்வையெதிர் பாயும்—விரைவையார்
கூறற்பாற் றின்னுண் கொளுமடமச் சம்பயிர்ப்பை
மீறற்பாற் ருயுமன மே.

பதம். இராகம்—காம்போதி. தாளம்—சாப்பு.

பல்லவி.

யாவரோ யிவர் யாவரோ (யாவரோ)

அநுபல்லவி.

தேவரிலொருவ ரோ—வரமுனிவ ரோ—வருகினர ரோ
வனமிகுப்ர ஸித்தரோ-நவ ஸித்தரோ. (யாவரோ)

சரணங்கள்.

க. மூவரில்முதல்வ ரோ-செழியசுடர் மூன்றிலொருசுட
ரோ-குணமவையில் மூன்றில்முதன்மைய தோ-யிவையி
லெதை முன்னுவேனெது பன்னுவேன் (யாவரோ)

---

§ மன்மதன்ஸமயம் பார்த்துப் புஷ்பபாணங்களைப்போடவும்.
* பரவையார்—பரவைநாச்சியார். ‡ மேனி, பரவு, ஐயார்—மேனியில் பரவும் அழகுடன் கூடினவர்.

௨. இவர்தங்கநுதி யணியைமதனணி வெலுமோமுகமதி
யினையுநிறைமதிவெல்லுமோயிடஞ்செல்லுமோ (யாவரோ)

௩. உடையும்விடைநிகர் நடையுங்கருணைக்கட் கடையுந்
துதிக்கையின் றுடையும்பிடிக்கடங் கிடையுப்பார்த்தக
மிடையுதே (யாவரோ)

௪. புண்யமோஅதி கண்யமேவுலா வண்யமோகரு ரண்யமோ
சாத் குண்யமோ சுப்ர மண்யுமோ (யாவரோ)

விருத்தம்.

குறிபட்ட மான்பிணைபோல் பெருங்காத
லானன்கு குணத்தின் வேலி
பறிபட்ட தெனமனத்தை வலிதாக்கிக்
கொடுபுகு கொம் பனைமார்சூழ
நெறிபட்ட வெம்மருங்கு மதன்கணைதூர்த்
துத்தடுப்ப நிறைவிதானஞ்
செறிபட்ட திருக்கோயிற் குட்புகவா
ரூரர்மெல்லச் செப்புவாரே.

ஆர்யா

அறுகார் தொண்டரை நோக்கி
யணியா ரிவர்யா ரெனமுன் மகிழ்வுதேக்கித்
தருமா கர்க்கறி யாரே
தருமா னனையவ ருமால்ப ரவையாரே.

ஸவாய்.

௧. என்னப்ப ரவையர் நாடிச்சென் றுபுற்
றிடத்தவ ரைப்பணிந் தோர்வழி செல்ல
§யென்னப்ப ரவையு ணராதி றையரு
ளின்வகை யால்மூன் றொ டர்மயல் புல்ல

§ என், அப்பர், அவையுணராது—எனது சுந்தரமூர்த்தி அச்சங்கதி களை யறியாது.

உ. தொடக்குண் டேனையாளு மீசரிடத் தினில்
துன்னுவ னென்றுள மும்மகிழ்வாகி
நடக்கும்வி டையனை யநம்பி கோயிலுள்
நண்ணிப்பு கக்கல்வி யின்னிரு வாகி

ந. மாதைக்கா ணுமல்ம னத்தினிற் கொண்டா
வம்புனைந் தாரடி போற்றியா ரூரர்
சீதப் பிறைநுத லாருயி ரெங்ஙனஞ்
சென்றதெ னத்தேட லாயின * ரேரார்.

இராகம். பியாகடை தாளம்—ஜம்பை.

கண்ணிகள்.

க. பாசவினைப் பற்றறுக்கும் பரனார்மே லாசையினு
மாசையுளத் திடமீச ரருளெங்குசென் றதுவே

உ. அண்டர்நா யகன்சரண மலதுமற்று நினைப்பனை
யண்டிமால் தருமீச ரருளெங்ஙன்சென் றதுவே

ந. பந்தம்வீ டருள்பரமன் பாதமல தன்னினைச்
சிந்தைகவ ரிறைதண் ணளி சென்றவிட மெவணே

ச. என்றுபல முறையியம்பி யின்னுயிரைத் தேடுவான்
நன்றருள்தே வாசிரிய மண்டபநண் ணினரே

ரு. காவியங்கண் ணியைத்தேடிக் கசிந்துருகி மனம்வாடி
ஓவியத்தை யுதவிலுயி ருதவுமிறை யென்றார்

சா. நாட்டுமிசை நாவலூர் நாவலவ ரினம்வருந்தப்
பூட்டுமேழ் பரியிரதன் புணரிபுகுந் தனனே

விருத்தம்-

பகலெல்லாம் பெடைகளொடு மிரையருந்திப் புள்ளினங்கள்
பறந்து சேக்கை

* ஏரார்—அழகையுடையவர்.

புகமாலை தமியோர்கள் பணிப்புற முன் வரமயலைப் பொருந்து மின்னார்
அகமெனவும் மிருவஞ்ச மாக்களின்வல் வினையெனவு மைந்தெ முத்தைப்
பகராத நாவுடைய வறிவிலர்நெஞ் செனவுமிருள் பரந்ததன்றே.

வெண்பா.

வண்ணமுறுந் தொண்டருமிவ் வாறுமின்னார் மாமயற்கு
ளெண்ணமுறுந் துன்புற் றிருக்குமேற்—றண்ணுலகில்
யார்மயங்கா ரென்றுகங்கு லின்முன் முறுவலித்த
சீரெனநி லாவுதித்த தே.

இராகம்—சுருட்டி. தாளம்—சாப்பு.

கண்ணிகள்.

க. துன்பஞ்செய் வோர்க்கொல்கி யின்பஞ்செய் திடுங்காந்தன்
துணைக்கரம் பெற்றுமகிழ் மகளிர்போற் சேந்த
அன்புறுங் கைரவ மலர்வெண் ணிலவை
யணிதரு மானீற்றி னொளிசேரும் நிலவே

உ. விரவப்ப ரவையெனு மெல்லியர் தருங்காதல்
இரவிலா ருயிர்த்துணைக் கெய்தவே போதா
ஒருவ ராகநாவ லூராருற் றிடவே
பொருவம தொளிர்ந்து பொருந்திட வடைவே

ந. கண்ணழ லினிற்பட்ட காமன்முன் புறவே
அண்ணல்தண் ணளியிது வாயதின் புறவே
எண்ணரன் சடைக்கங்கை யிடம்வளர் மதியே
யண்ணுநீ யலைகொழித் தழலும்வெண் மதியே

ச. ஆழியீ சர்க்குநஞ்சை யகங்கொடு பெய்தாய்
ஏழையாந் தனியாமென் னிடத்திலென் செய்வாய்
தாழ்வில ரன்மலயந் தனிலுதித் தாயே
வாழ்வார்நீர் நாட்டினில் மருவியுங் கொதித் தாயே

விருத்தம்.

இவ்வண்ண மீசர் தோழ ரிசைமனம் வருத்த மெய்தச்
செவ்வண்ணப் பரவையாரிச் செல்வர்மேற் கூர்வேற் செங்கட்
*பவ்விய நோக்கங்கூடப் படர்ந்துமுன் வினையுஞ்சேர
வொவ்விய மால்கொண் டுள்ளத் தூற்றவா றினிது சொல்வாம்.

கலித்துறை.

* மாதனத் தார்நடை காட்டிச்சி லம்பொலி மன்னவென்னம்
‡ மாதனத் தாற்பொறை தாங்கா திடையிறும் வம்மின்செல்லீர்
|| மாதனத் தாடை நெகிழாது தாங்கியம் மாதர்சென்றம்
o மாதனத் தாலுயர் பூமணிச் சேக்கைக்குள் வைத்தனரே.

வெண்பா.

a கைக்கிளையும் பூவை களையும்வெறுத் தோட்டினார்
b கைக்கிளைபா லும்வெதுப்பங் காட்டினார்—கைக்கிளையார் c
பாவை யனைய பரவையார் மேவுதுன்ப
மியாவருரைப் பார்களறிந் தே.

இராகம்—காம்போதி. தாளம்—ஜம்பை.

கண்ணிகள்.

க. செழுநிலா மணியிழைத்துத் திகழ்தருமுன் றிலினடுத்தம்
வழிநிலா மனத்தையொரு வழிப்படுத்தி யுரைப்பார்
பொழிநிலா முழுமதியைப் பொருவதன வழகர்நெஞ்சை
விழிமீட்ட லானுருகும் வெண்ணெயெனக் கரைப்பார்

---

* பவ்விய நோக்கம்—அடக்கமுள்ள பார்வை.

* மாது அனத்து ஆர் நடை—அழகிய அன்னத்தை யொத்த நடை. ‡ அம்மா—விளி. || மாதனத்து—ஆடை—பெருமை பொருந்திய பீதாம்பரம். தனம், இங்கு பொன்னை யுணர்த்திற்று. o அம்மாது—அப்பரவையாரை. அனத்தாலுயர்—அன்னத்தின் சிறகுகளாலுயர்ந்த a. கைக்கிளை—கையின்கண்ணுள்ள கிளி. b கை—வெறுப்பினால் கிளைபால்—சுற்றத்தார் பால். வெதுப்பம் காட்டினார்—கோபத்தைக் காட்டினார். c கைக்கிளையார்—ஒருதலைக்காமம் பொருந்திய.

யின்னனபல் விதந்துயரற் புலம்பிவைக
லினிதுமகிழ்ந் தாரூரர் மனங்களிக்க
வெந்நிலமும் புகழடி களடியார்க் கங்கங்
கியம்பினர் புற்றிடங்கொள் சுயம்பினுரே

பதம், இராகம்—நவரோசு. தாளம்—சாப்பு.

பல்லவி.

தொண்டர்கட் கிதுரைத்தார் ஆரூர்வாழீசர் (தொண்டர்)

அநுபல்லவி.

வண்டமிழ் நாவலூரன் மனங்களி கூர்ந்திட
மணஞ்செய்விப் பீரென மனமகிழ் வாய்ந்திடத் (தொ)

சரணங்கள்.

க. பரவைமா தைத்தந் தோமாரூ ரன்மகிழ
விரைவில்ம ணமுடியு மென்னவி றைமகிழத்
(தொண்டர்)

உ. நமதுசுந் தரனபி ராமன்மி கவுநன்று
அமையும்ப ரவைமா தணியதற் கிசைவென்று (தொ)

ங. சீருல கினிற்சுபம் சீக்ரமென் பதுபோலச்
சேரு மணம்நாளேயே செய்விப்பீ ரென்றுசாலத் (தொ)

விருத்தம்.

இப்படிக்கி றையுங்கூற வெழிலார்தம் மணத்தை நோக்க
விப்படி யிருளும் போக்க வெழும்படிக இருதிக்க
*மைப்படி கூந்த லார்க்கு மையர்க்கு முலகோ ரொற்று
மைப்படி மணஞ்செய் விக்க மாதொடுங் களித்தார் தாமே

* மைப்படி கூந்தலார்க்கு—கருநிறம் பொருந்திய கூந்தலையுடைய வருக்கு

பதம். இராகம்—சங்கராபரணம். தாளம்—ரூபகம்.

பல்லவி.

ஆடல் புரிந்து கோயிற் கேகினர்
பரவை மாதொடும்விளை (ஆடல் புரி)

அநுபல்லவி.

பாடல்புரிந்தா ரூரில் வாழுந்தற்—பரனு ரருள்
பெற்றிடும்ஸுந் தரனு ரதி வரனுமென (ஆடல்)

சரணங்கள்.

க. மாதுடன் கூடி மகிழ்ந்து மாளிகை
மருங்கா விக்கரை நெருங்கு செய்குன்றில்
சீதளப் பந்தர் நீழலிற் பேடை
செஞ்சேவலெ னவுநாடியி தஞ்சேரமரு வியேபல (ஆடல்)

உ. நம்பி யீசரைக் கும்பிடநினைந்
தின்ப சுகந்த தைலத் தில்நனைந்
தெண்பெறு பல மணிகள் கூடி
யிலங்கணிகள்வி ளங்கவே புனைந் (தாடல்)

ங. கையிற் பொற்கோலுங் காதினிற் றேடு
மெய்ந்நூ லுநெற்றி விளங்கு நீறேடு
மைய ரழகுக் கழகி தாமெனத்
தையலர்மகி ழச்சாலச் சைவமுத் திரை யுறுகோலத்(தாடல்)

ச. நடையினிற் றவக் களிறேயென்று
மடல்சேர் விடையற் கன்பனே யென்றும்
படரு மறையோர் தலைவ னேயென்றும்
பக்கத்தன்பர்கள் போற்றிவரக்கட்ட ழகார் தோற்றியும்(ஆ)

விருத்தம்.

வேந்தர்விரு தாஞ்சைவ விருதுமோங்க
மின்னனையார் மயல்மருவ மிடைந்த வீதி

போந்துநடந் திடவாகு வலைபந்துன்னப்
புகழுமறை யோர்சூழக் கோயிற் புக்குச்
சேர்ந்திடுந்தே வாசிரிய மண்டபத்துட்
டிகழடியார்க் கண்டிவருக் கடியேனாக
வார்ந்திடுநா ளென்றென் றகம்வைத்தங்க
டவிற்சென்றா ரரனடிப ரவிச்சென்றோர்.

வெண்பா.

அன்பரடி யார்க்கடியே னாவே னெனக்கரங்கள்
இன்பமுட னேகுவித்தங் கேகுங்கால்—நம்பர்திருக்
கோலத்தார் காட்சி கொடுக்கப் பதவிணையைச்
சாலப்ப ணிந்துதித் தார்.

பதம். இராகம்.—உசேனி. தாளம்.—ரூபகம்.

பல்லவி.

பாதங்கள் கதியே யண்டங்களின்
பூதங்கள் பதியே—உன்றன் மலர்ப் (பாதங்கள்)

அநுபல்லவி.

வேதங்க ளின மோதற் கரிய
மேலவாந்திரு மாலு மறியாப் (பாதங்கள்)

சரணங்கள்.

௧. இன்பமறைய ளிகள்சேரு மினிதானந்தத் தேனூறும்
என்பொருட்டுமு தயஞ்சேரு நிறை
யன்பரிதயத் தலர் செந் தாமரைப் (பாதங்கள்)

௨. உலக முயர்ந்திட நடித்து மதிக்குங் கலகய மனையுமிதிக்கு
நல மிகுமன்பர் துதிக்க வுவக்கும்
மலைமகள் செங்கை வருடச் சிவக்கும் (பாதங்கள்)

௩. மாதவர் சிந்தை யதனிற் புல்கும் மாதவர்க் கொளி நல்கும்
வேதங்களலங் கிருதமாய் மிதிக்கும்
பாதுகையாக விருந்து துதிக்கும் (பாதங்கள்)

(ச) மறைவாரண மீதி லிருக்கும் நிறையுமின்பங்கள் பெருக்கும்
குறைசெய் திடுமென் பிழையைப் பொறுக்கும்
குற்றங்கள் பொறுக்கு மரைப் (பாதங்கள்)

ஆரியா.

(க) இவ்வித மேதுதி யன்பர்க்
கிதய மகிழ்ந்திரு தாளு முதவுநம்பர்
செவ்வியர் தம்முகம் நோக்கிச்
சீரார் தொண்டர் மகிமாவை வவிதாக்கிப்

(உ) பெருமையி ஞல்நமை யொப்பார்
பேணு வினுலெம் மையே யடைந்துய்ப்பார்
அருமையி ஞல்நிலை நிற்பார்
இருமையி னீங்கின வர்மீதி லிசைசெப்பார்

ஸ்வாய்.

(க) என்றித ருள்செய்ய வானந்த நீர்கண்க
ளிற்பெரு கவழித் தொண்டரின் சீரே
நன்றிது தீதின தென்றறி யாதவன்
நானுரை செய்யவ லியனே நேரே

(உ) சொல்லவு னதருள் நண்ணுமே லாமெனத்
தூயரு ரைசெயத் தாயினு மன்பாய்த்
தில்லைவா ழந்தணர் தம்மடி யார்க்கும
டியேனெ னச்செப் பெனவிறை நண்பாய்

(ங) உரைக்குமு ரையைச் சிரமீது கொண்டுதம்
முள்ளம கிழ்ந்துபு ளகிதாகி
விரைக்கம லக்கழ லிற்சிரங் கண்கள்
மிலைந்து குழைய வணங்கி யன்பாகி

(௪) மேவுந் திருவருள் மேற்கொண்டு நிற்க
விமலரெ ழுந்தரு ளப்பணிந் தன்பாய்
நாவலூர் நாவல வர்தொண்டர் தங்குழா
நண்ணநெ டுந்தூரத் தேபணிந் தின்பாய்.

விருத்தம்.

($) திருக்கூட்டந் தனைப்பன்முறை வணங்கியே தொழுதேத்
திச்சென் றுமெய்த்தன்
(§) பருக்கூட்டஞ் செவிக்குதவப் பொழியமுதத் தாரை
யொத்தின் பம்பாலிக்கக்
(‡) கருக்கூட்ட முகிலினைப்போற் சிவபெருமா னருள்செய்
மொழிக்கரும்பை முன்வைத்
(†) துருக்கூட்ட நவமணிபோற் றனித்தனித் தொண்ட ரைப்
பாடி யுவந்தார்தாமே

வெண்பா.

தொண்டர் மகிழ் செய்திருத் தொண்டத் தொகைப்பதிகம்
விண்டுபணிந் தார்பவத்தை விண்டிடுவன்—றொண்டர்மொழி
யீசர் திருவடிக்கா ளெய்தவைக்கு மென்றுரைத்த
பாசுரத்தை மெச்சியுரைப் பார்.

விருத்தம் பவசுருதி.

குன்றவில் லினர்தடுத்தாட் கொண்டவன் றொண்டர்காதை
யொன்றிய மனத்தாராகி யுறுசெவிக் குய்ப்போர்தங்கள்

---

($) திருக்கூட்டம்—அழகுபொருந்திய தொண்டர்களின்
கூட்டம்
(§) மெய்த்து அன்பருக்கு ஊட்டம் செவிக்கு—மெய்மையாக
அன்பர்களுக்கு ஊட்டத்தைச் செவிகளுக்கு
(‡) கருக்கூட்ட—கருமைநிறம் பொருந்திய கூட்டமான
(†) உருக்கூட்ட நவமணி—நிறம்பொருந்திய கூட்டமான நவ
ரத்தினம்

கன்றிய மனத்தா லெய்துங் கடும்பவ மகன்றிகத்தில்
நன்றிசே ராயுள்மைந்தர் *நளினியும் பெறுவர்மாதோ.

திருச்சிற்றம்பலம்

திருமலைச்சிறப்பு தடுத்தாட்கொண்ட புராணமாகிய சுந்தரமூர்த்தி நாயனுர் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆகப் பதங்கள் | 17 | வெண்பாக்கள் | 9 |
| விருத்தங்கள் | 26 | கலித்துறைகள் | 4 |
| ஆர்யா | 4 | கண்ணிகள் | 9 |
| அபங்கு | 1 | பத்தியம் | 1 |
| ஓவி | 1 | லவாய்கள் | 9 |
| லாவணி | 2 | ஆக உருப்படிகள் | 83 |

முதற்கண்டத்தின் முதலாவது திருமலைச் சருக்கம் முற்றுப்பெற்றது.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

2-வது தில்லைவாழந்தணர் சருக்கம்.

# 2. † தில்லைவாழந்தணர் சரித்திரம்.

பதம். இராகம்—மோகனம்—தாளம்—ஜம்பை.

பல்லவி.

மாவளர்ந் திடுந்தில்லை வாழுமந் தணரே
மகிதலத்தில் மேலான மகிமை பொருந்தினரே (மாவளர்)

---

* இலக்குமி.

அநுபல்லவி.

தேவர்கள் யாவரும் வணங்கும் சிற்சபே சனை மதித்துச்
சிறப்பொடுபூ சனைபுரிந்து செழிப்புடனே மிகத்துதித்து (மா)

சரணங்கள்.

(க) நீற்றினர் கோல்முற்ற நிருத்தனடித் தொண்டு
நியமமுட னனுதினமும் நிகழ்மறைகள் விண்டு
சாற்றினு ராயினர்கள் தருமநெறி கொண்டு
தழைக்கு மின்பம் திளைக்குமுத்தி தனையடைய நினைவு
கொண்டு (மாவளர்)

(உ) முத்தழலை யோம்பிவரும் முதிர்தவமுஞ் சிறந்து
முதிர்தத்துவ நெறிமறையின் மொழியங்கமும் நிறைந்து
நிர்த்தமிடுத் தமரினித்தி யமுயர்பணி விரைந்து
நிதிலகல மதுவெனவும் நினைவொடுயர் துதிபகர்ந்து (மா)

(ங) உயர்மரபில் ஜனித்துமறு தொழிலாட்சி யாலே
ஓங்குந்திரு நீற்றின்செல்வத் துயர்ந்திட மேன்மேலே
சுயமுறுமெய்ஞ் ஞானமுறச் சோதிசிவன்பாலே
துலங்குமன்பு மிலங்கிடநல் லலங்கிருதங்கள் பெறுவதாலே
(மாவளர்)

(ச) செம்மையாற் றணிந்தசிந்தை தெய்வமறை யவராய்த்
திருமூவா யிரத்தொகையர் ஜகத்தினிறை யவராய்
மெய்ம்மையார் திருத்தொண்டத் தொகைமுதலி லறைய
வரும்
மேதகுவன் றொண்டர்க்கான் மொழியவவ ருரையிவரும்
(மாவளர்)

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர் சரித்திரம் முற்றிற்று.

ஆக பதம் 1.
ஆக சரித்திரங்கள் 2 க்கு உருப்படிகள் 84.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# 3. ‡திருநீலகண்ட நாயனூர் சரித்திரம்.

ஆர்யா.

திருவளர் காவிரி நதியார்
ஜயமிகு பொனிநாட் டினிலுயர் சிவபதியாம்
மருவளர் மதிபுனை நிதியாம்
மவிபுலி யூரெப்பதியிலு மிதுகதியாம்

லாவணி இராகம் இந்துஸ்தானி காபிதாளம் ஆதி லாகியாகவும் பாடலாம்.

(க) மாதவர் நிறையொரு புரமத் துவிதவ சனமொரு புரமொளி ரும்
வேதம தோதுவி நோதமெந் நாளும் விளங்கி யதுவும் மிளிரும்

(உ) § முனிவர்கள் தனிநிலை யுணர்வுற நிதநித மோவிய மெண வினைவர்
கனிவொடு சிவனடி யவர்களை மகிழ்வொடு கண்டெவர் களுமணைவர்

(ந) உபசரித் தன்னவஸ் திர்முதல் யாவையு முதவி யெவரு மகிழ்வார்

---

§யோகநிலையில் நிற்கும் முனிவர்கள் அசையாமல் நிற்கும் உடல்களினால் சித்திரம்போல் காணப்படுவார்.

சுபசரி தத்தையுற் றேசிவத் தியானத் துடனித முந்திகழ்
வார்

(ச) நன்றிது தீதிது வென்றுசொல் வேதம் நவின்று பொருந்
திடுவார்
ஒன்றுடன் மூவாயிரமறை யவர்களும் ஓங்கி யிருந்திடுவார்

(ரு) சித்ரவி சித்ரமி குத்திடும் வீதியிற் செறிந்திடு மாளிகையும்
பித்திநி றைத்தமு தக்குடம் வைத்த பெருமைபெறு சூளி
கையும்.

(சு) ஓங்கிய வாவண வீதிகணிகையர்க ளூறும்வீ திகள்பலவும்
பாங்குறு சோலைத டாகமும் வாவிகள் பண்புட னேகுலவும்.

(எ) முல்லை சிவந்திமல் லிகைந் தனவன மும்மட மும்பொருந்தும்
தில்லைநன் னகரினில் வேட்கோ வரின்குலத் தினிலுதித்
தேதிருந்தும்.

(அ) அய்யன் திருநா மந்திரு நீலகண் டப்பெயர் புனைவுற்றோர்
மெய்யன் புடையோ ரினில்மிக் கோர்சிவ மேபொரு
ளெனக்கற்றோர்

பதம்-இராகம்-கேதாரம்-தாளம்-ஆதி.

பல்லவி.

சந்த தந்திரு நீல கண்டர்செய் †சங்கதிகள் மிகுமின்ப மேதரு
(சந்த)

அநுபல்லவி.

சிந்தை கனிந்து புகழ்ந்து வியந்து ஜலங்கொள ரன்றனை
என்றும் நினைந்து (சந்த

†சங்கதி-வரலாறு.

சரணங்கள்.

(க) வஞ்ச மேனிமேனியார் நடனபதக் கஞ்ச மேனியனவார்க்
குரியபணி
வாக்குயர் மனக்கா யத்தால் நேசித்து
வந்தனை கள்செய் தேமிகப் பூசித்துச் (சந்ததம்)

(உ) இன்ப வோடுசெய் தே மட்கலன்களை யன்பி
ஞேடு பெய்தே—சிவபக்தருக்
கீதுப யோகம தாமென வேசொல்லி
யிருபத மலர்மன மகிழ்வொடு மேபுல்லிச் (சந்ததம்)

(ங) தாமனை யறமுற் ருே ரின்பத்துறையில் தாம்நினை வது
பெற்ருேர் மிகுமழகு
தங்கு துங்கமும் நெருங்கிய யிங்கிதர்
சங்கரர் திருநா மங்களி * னங்கிதர் (சந்ததம்)

வெண்பா.

திருநீல கண்டர் தெரிசனையே செய்யத்
திருநீல கண்டர் செலவே—தெருவூடே
வீசுமழைக் காற்ருது வெட்கியயற் பக்கமுறுந்
‡தாசிகிர கத்தினுழைந் தார்

ஸ்வாய்.

(க) அங்கொரு திண்ணையின் முன்புற மெய்தி யமர்ந்தன ரிங்கித
மும்பெறு லோலர்
சங்கரி பங்கினு றைந்தவர் தஞ்சரி தஞ்சொலி விண்டு
கொண்டின்புறு சீலர்

* அங்கிதர்-அடையாளத்தை யடையவர்.
‡இங்கு வேசையைக் குறிக்கும்.

(உ) ஆதிய ஞதிசித் ஜோதிய பேதிய ராவணி யீசரி நாமமே
சாற்றி
போதிய சேதிபொன் மாதிரு காதிலு றக்கனி வாயவர்
தம்மையே போற்றி.

பதம்-இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கொண்டன என்பு திருநீல கண்டர்த முன்பு மிகக் (கொண்ட)

அநுபல்லவி.

மண்டல மெண்டிசை யும்புகழ் சாது
வந்தனை யேபுரி தொண்டர்த மீது (கொண்டனன்பு)

சரணங்கள்

(க) அன்புட னவரிரு கைகளைப் பிடித்து
மின்புடன் மனைவியினுள் ளேவர நடித்துக் (கொண்டனள்)

(உ) அங்கவர் மனைவியினுள் ளேவரச் செய்து
அடிமலர் தனக்கவள் கடிமலர் பெய்து (கொண்டனள்)

(ந) வந்தவர் முடியிற்பூச் சூட்டிக்கொண் டாடிச்
சந்தம் பூசியுற வாடியே பாடிக் (கொண்டனள்)

(ச) மங்கள மேவிய மலருறு மெத்தை
தங்கும்ப டிக்குச்செய் வித்தனள் தத்தை (கொண்டனள்)

(ரு) மந்தா மெனுந்தன மங்கையுஞ் சருவ
அந்த ரங்கமுட னேயவர் வெருவக் (கொண்டனள்)

இராகம் ஹமீர் கல்யாணி தாளம் ரூபக சாப்பு பஞ்சசாமரமாக
வும் பாடலாம்.

கண்ணிகள்

(க) மாது செய்த சூதை யோது வார்க ளியாவர் நேர்மையால்
போது மென்றவ் வில்லை விட்டுப் போயி ஞர்தம் நேர்மை
யால்

(உ) வீதி வந்தவ் வேசி செய்த வேட மோடு கூடியே
யாதி நர்த்த னஞ்செய் யீச ரால யத்தை நாடியே

(ங) அன்பி ேேைடு மங்கு சென்று மால யத்து ணோர்ந்தனர்
யின்ப மாக வீசரைக்கண் டேக ளிப்பி லார்ந்தனர்

(ச) சங்க ராபு ராந்த காச தாசி வாக பாலியே
மங்க ளா கராவினேத மஞ்சு ளாதிரு சூலியே

(ரு) நர்த்த னஞ்செய் பாத மூக்க ணுத வென்று சாற்றியே
வர்த்த னத்தி னேடு கோயில் வாயில் வந்து போற்றியே

(சு) தன்ன கத்தை நோக்கு ருது தன்ன கத்தை நோக்கவே
மின்ன கத்தில் வேறு பட்டு வெம்மை யோடு பார்க்கவே

பதம்-இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

ஈ தேது வேட மெவர்செய்வி சேடம் (ஈ தேது)

அநுபல்லவி.

சாதுவென் றதும் போச்சே தக்கோர் நகைக்க லாச்சே
(யீதேது)

சரணங்கள்.

(க) மண்குழைப் பவர்க் கிந்தச் சந்தண மேது
வனஜம லர்மு கத்தி லிருக்கே ஜவ்வாது

தண்கொள்பெ ரியோர்க் கிந்த ஜாலமாகாது
தங்கள் பெருமை நன்றாய்த் தெரிந்த திப்போது (யீதேது)

(உ) ஈசர டியா ரையிவ் விதங்கண்ட தில்லை
யெவரிடத் திலிருந்து வந்ததோ தொல்லைத்
தாசரென் றுங்களைக் கொண்டாரே தில்லைத்
தக்கோர் நகைத்தா லென் சொல்வேன் வெருகல்லை
(யீதேது)

(௩) பரத்தைய ருறவைக் கொண்டீ ரோநீர் சொந்தம்
பற்றிவந் தாலிங்கே யிருக்கோ சம்பந்தம்
சரித்திரங் கண்ன் றாகத் தெரிந்து நிர்ம்பந்தம்
சம்பாதித் தீருமக்குண் டோவநு பந்தம் (யீதேது)

விருத்தம்.

வந்ததிரு நீலகண்டர் தம்மோ டிந்த வசனங்கள் பலவுரைத்தார்
வாணிமேலாஞ்.

சந்தவருந் ததிக்கற்பன் மிக்கார் தாமுஞ் சந்ததமு மனைத்
தொழில்க ளெல்லாஞ் செய்தார்

அந்தமுடன் மனைவியரைத் தழுவப் போனு ரவரிசையா தென
மொழியப் புலவிதீர்க்கச்

சொந்தமுட னெணயெவம்மைத் தொடுவீராகிற் சுடர்நீல கண்ட
மெனச் சொன்னார்தாமே

பதம் இராகம் நாதநாம கிரியை தாளம் ஆதி.

மாதே யெப்போதுந் தொட மாட்டேனே யென்றன் (மாதே)

அநுபல்லவி.

சாதுவென் றேமதியா தாற்றுனே யென்றன் (மாதே)

சரணங்கள்.

(க) என்னிட மேகபட மிருக்குதென் றவகடஞ்
சொன்னுய் நிஜமென் சடந் தொலையள வுமுன்னிட
(மாதே)

(உ) எம்மை என் றுரைத்தாயே யென்றுமெல் லோரும்தாயே
வெம்மையைத் தவிர்ப்பாயே விதனம்விட் டிருப்பாயே
(மாதே)

(ங) ஈசர டியார்தன்னை யிழிவுபொ ருந்தச்சொன்னை
மாசடை யாதபொன்னே மருவேரு சையா லுன்னை
(மாதே)

கலித்துறை.

கற்பினி லோங்கிய மாதருந் தங்கள் கணவருக்குப்
பொற்புற மெய்யணு காதவர்க்கானது போற்றல்செய்தே
யிற்புற நீங்கா திருவரு மோரிடத் தேயிருந்து
மற்புறு நற்புணர்ச் சித்தொழி லொன்றில தாகினரே.

வெண்பா.

இவ்வணநா டோறு மிருந்திள மையா லுயருஞ்
செவ்வணம்போய் மூப்புவந்து சேர்ந்ததே—யவ்வணத்தை
யாருமறியாதா லதைத்துலக்கி வைத்ததிந்தச்
சீருலவு தில்லையா சே.

ஆர்யா.

சங்கா ராகிய ஜோதி—தன்னடிப ணிபவருடநல பிரக்யாதி
யெங்கும்வி ளங்கவும் வீதி—யிடம்யோ கிவடிவ மெனவந் தனராதி

பதம் இராகம் பூரி கல்யாணி தாளம் ஆதி.

வந்தனர் யோகி வடிவமே யாகி (வந்தனர்)

அநுபல்லவி.

சந்தம றையோன் போகி தான்வணங் குநிர் வாகி (வந்தனர்)

சரணங்கள்.

(க) மார்பினி டமுன்னூலும் வயங்க வொருகை மேலுஞ்
சார்புற வேமுக் கோலுந் தா னெடுப்பவர்போலும்
(வந்தனர்)

(உ) கோவண முமவ்வி சேடக் குளிர்நீ றொளிர்ல லாட
மேவிப்பம் பையு மாட விண் ணவருங்கொண்டாட
(வந்தனர்)

(ங) பலிகொளுந் திருவோடும் பற்கிர ணமுநீடும்
நலமாமா லயன் றேடு நாதன் கருணையி னோடும் (வந்தனர்)

(ச) கனமிகுந் திருநீல கண்டர்தம் மனைசால
வினவிச்சென் றனர் கோலம் விளங்கும் கதிரினைப் போல
(வந்தனர்)

ஸ்வரம்.

(க) வந்திடும் யோகியை யின்புற நாடி மகிழ்ந்தனர் சங்கர னன்ப
ரென் றெண்ணி
கந்தம லர்பொரு வும்பதந் தன்னிற் கனிந்து பணிந்தனர்
தொண்டரு நண்ணி

(உ) வித்தக ஸித்தித ரத்தகு முத்தம விற்பன பற்புத முற்றவர்
நீரே
யித்தரு ணத்திலுங் கட்கின தைச்செயெ
னத்திக முப்புக முச்சொல்லு வீரே

(ங) என்றனர் தொண்டரு மின்புடனன் பரு மித்திரு வோடுன்
பால் வைத்துவை ப்பாயே

நன்றிபெ றும்பரி சுந்தரு மென்னிதி நாடினு மேதரு மன்
புருவாயே

(௪) இவ்விதஞ் சொல்லியு மீந்தன ரீங்குபின் னேவரு
வேனென்னி டந்தரு வாயே
செவ்விபெ றுந்திரு வோடது மேன்மை சிறந்தபொ ருளது
கொண்டுவை நீயே

(௫) வந்தவர் தன்னைவ ணங்கிப்பின் வாங்கி
வழுத்தினர் தொண்டர்மி கக்கனி வோடே
சொந்தமு டன்முனம் வாங்கும் பொருளைச்
சுபாவ மென் றேகற்பில் வைத்தனர் வீடே

(௬) வைத்தவர் முன்னம்வ ரக்கனி வுற்றிட
மாமறை யாளரு மேகமுன் னின்றே
உத்தம வென்றுவி டைப்பொருள் கொண்டன
ரோங்கின ரம்பலத் தைக்கனிந் தன்றே

வெண்பா.

கொஞ்சநாட் சென்றபின்முன் கோலமுட னேநடனர்
மிஞ்சவேட் கோவர் விளங்கவெண்ணி—வஞ்சமுடன்
வந்தா ரெதிர்ந்து வழிபடவோ டன்றிமெத்தத்
தந்தாய்வந் தாய்கொணர்ந்து தா

கலித்துறை.

என்றவர் கேழ்க்க விருந்தவர் வாய்புதைத் தேகியுள்ளே
சென்றவ ராகிமுன் வைத்ததைப் பார்க்கத் திகைத்த வராய்
நன்றிது கண்டில மென்றய்யர் தாளிணை நாடியுய்வ
தன்றிமற் றிங்கிருக் குஞ்செயல் யாது மறிந்திலனே

இராகம் தனுசரி தாளம் ஆதி.

கண்ணிகள்.

(க) அய்யனே சீரார் துய்யனே—யென்ற
னன்புரு வேயரு ளின்குரு வே திருவே யருவே (அய்ய)

(உ) எத்தனே கல்நேர் சித்தனே—யிது
யாது வோ டேதுகொ டாது மடாது நின் றாய் நன்றாய்
(எத்தனே)

(ந) அத்தனே யோக முத்தனே—முன
மாடெழி வோடுகொ ளோடுமென் வீடுவைத் தேன்
மெய்த்தேன் (அத்தனே)

(ச) காலமே செல்லும் ஜாலமே யென்முன்
காட்டிநல் லோட்டினை வீட்டினுட் பூட்டிவைத் தாய்
கைத்தாய் (காலமே)

(ரு) தேடினேன் காணேன் வாடினேன்—என்ன
செய்குவே னய்யனு னுய்வகை செய்குவீ ரே நீரே (தேடி)

(சு) வஞ்சனே கொடிய நெஞ்சனே—வோடு
வைத்தெ னிடத்தில பத்தமு ரைத்துவிட் டாய் கெட்டாய்

(எ) அண்ணலே யார்க்கு மண்ணலே —ஓட
தேநிகர் மேனம ரானது நா னளிப் பேன் களிப்பீர் (அண்)

விருத்தம்.

மெய்யடியா ரிந்தவித மொழிய் யோக
வேடமே புனைந் திலகு மெய்யர் தாமும்
பொய்யடியா யான் கொடுத்த மண்ணோ டன்றிப்
பொன்னினாற் றருவையெனும் வேண்டே மன்று

செய்யபொரு ளீவதென்று முன்னஞ் சொன்ன
செய்தி தவறுமெனவே நினைந்தோம் பின்னால்

வெய்யகொடுந் தழலெனவே வெகுண்டோ டைத்தா
வென் றிட்டார் புலன்களையே வென்றிட்டாரே

இராகம்-தோடி-தாளம்-சாப்பு-பஞ்சசாமரமாகவும் பாடலாம்.

கண்ணிகள்.

(க) அண்டர் நாதனை யோக மண்ட லீகர் நாடவே
பண்டு மந்த வோட தேநீ கொண்டு வாவென் றாடவே

(உ) அய்ய யோக நாத வோட தேநி னைக்கி லில்லையே
செய்ய தாயி வேனென் றேன்சி னந்து விட்டீர்
சொல்லையே

(ங) உன்னி டத்த டைக்க லத்தொ டேக ரத்தல் நீதியா
மன்னி டத்துன் மைந்த னோடும் வாவி மூழ்கிச் சாதியாய்

(ச) என்று ரைத்தி ரய்ய செல்வ னில்லை யேயா னென்செய்
வேன்
நன்று பாரி தன்கை சேர்த்து நாமமூழ்கி லஞ்செய்வேன்

(ரு) ஈசர் சொல்ல நீல கண்ட ரென்று ணைக்கை பற்றவே
கூசு மாணை யுண்டென் றார்வேட் கோவ ரும்மெய் முற்றவே

(கூ) என்று சொல்ல வோடெ டுக்க வெத்த னித்த பாவியே
நன்று நன்று வாஸ பைக்கு நான்வி டேனுன் னாவியே

(எ) சென்று தில்லை யந்த ணாளர் செய்ச பைக்கு ணோ வே
முன்றி கழ்ந்த வாறெல் லாமொளித்தி டாது கூறவே

(அ) அந்த ணாளர் யோகி சொல்வ தான தேநீ செய்குவாய்
முந்த வேசெய் திடினு முன்றன் மொழியி னனு முய்கு
வாய்

வெண்பா.

என்றுரைக்க வீட்டினிட மேகிமனை யாருடனு
நன்றுபெறு வேணுதண்ட நாடிக்கை—யொன்றினராய்
வந்தெமது யோகி மகிழவமைக் கையினராய்
தந்திரமாய் மூழ்கியெழுந் தார்.

ஆர்யா.

வாவியில் மூழ்கி யெழுந்தார்
மதன்ரதி யெனவே யுருவா மகிழ்வார்ந்தார்
தேவி யுடன்விடை மீதே
திருநீ லகண்டர் மகிழ்வுற வப்போதே

பதம் இராகம் பரசு தாளம் சாப்பு.

பல்லவி.

காட்சி கொடுத்தாரே யெவர்க்கு நல்ல (காட்சி)

அநுபல்லவி.

ஆட்சி யான பொரு ளாமென வேசொல்லக் (காட்சி)

சரணங்கள்.

அண்டர்கள் கூடியங் கலர்ந்தபூ மாரிமெய்யத்
தொண்டர்கள் கண்டர காாவெனு ந்துய்யக் (காட்சி)

திருச்சிற்றம்பலம்.

## திருநீலகண்ட நாயனார் சரித்திரம்

முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆர்யா | 3 | ஸவாய் | 2 | கண்ணிகள் | 1 |
| பதம் | 6 | பஞ்சசாமரம் | 1 | ஆக | 22 |
| விருத்தம் | 2 | வெண்பா | 4 | | |
| லாவணி | 1 | கட்டளைத்துறை | 2 | | |

ஆக சரித்திரங்கள் 3-க்கு உருப்படிகள் 106.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# 4. *இயற்பகை நாயனுர் சரித்திரம்.

இராகம் மாஞ்சிதாளம் ரூபகம்.

**கண்ணிகள்.**

(க) செழுஞ்சென்னி நாட்டினி லனபாய சோழன்
றிருக்குலம் பெருக்கிய புகழெனு நாளும்
கொழுங்கன்னல் கதலிசெந் நெலும்விளை வாக்கும்
குலவுமருதநீரா லுலவியே தேக்கும்

(உ) பொன்னிரதிசெழித்துப் புணரியிற் பாய்ந்து
புனித மாயபுண்ய தீர்த்தமும் வாய்ந்து
நன்னயம் பெருகுபு காரெனு நகரம்
நாளும்வ ணிகர்குலத் தினுக்கொரு சிகரம்

(ங) என்னத்த ழைத்துமறை ச்சிலம்படி யாருக்
கினியவ டியார்வேண்டு மவையவை கூறு
முன்னமே யளித்தறம் வளர்த்திடுந் தகையார்
முற்றுந்த வத்தோர்புக ழுலகியற் பகையார்

(ச) ஆறுருரு டியவய்யர் போருளாலே
நீறுபூ சடியவர் நினைத்ததின் மேலே
மாறில்லா மல்வேண்டு மவையெல்லா மளிக்கும்
பேறெல்லா மிவனுக்கும் பெற்றியிற் களிக்கும்

(ரு) ஏவல்செய் திடக்காக்கு மில்லறம் புரிந்து
மேவு நாளிலதை மிக்கவே தெரிந்தும்
பூவுல கினில்வாழும் யாவரும் நாடப்
புனித முறும்விண்ணுல கவருங்கொண் டாட

ஆர்யா.

நுண்பொரு ளாகியும் வெளியே
யம்பல மேவிந டமேசெய் பேரொளியே
தண்பெறு புகாரி னாரே
தாறு டிடமுன் னினர் புனிதர் நேரே

பதம்-இராகம்-சென்ஸ்ஜுருட்டி தாளம்-ரூபகம்.

பல்லவி.

வந்தன ரம்பல நாதர் மறையோ டரிதே டியபாதர் (வந்தனம்)

அநுபல்லவி.

விந்தைபொ ருந்துபுகார் வீதிம ருங்கிலேகிச்
சந்தம றையோன்போல வாகித் தனிநீ றிலகவே யுமைபாகி
(வந்தனர்)

சரணங்கள்.

(க) உம்பர்நா யகியம் துணரவோ பிரியாத
அம்பிகை யறியாமற் றூனே யறியோம்
அடியவ ருக்கன்பானோர் (வந்தனர்)

(உ) பலபல யிலமோடிப் பக்தரெங் கெனத்தேடி
ஜலஜம லர்முகமும் வாடித்
தனிநா மெனவே தனியாய் நாடி (வந்தனர்)

(ஙு) தூர்த்தவே டத்திற் §புகார்ச் சொல்லென்றெண் ணுமற் *புகார்ச்
சீர்த்தந கரிற்சென்றார் நேரே
ஜகவஞ்ச கர்நெஞ்ச கம் ¶புகாரே (வந்தனர்)

ஆரியா.

வந்திடும் வேதியர் தானே
மலியற்பகையா ரில்மேவ மதிமானே
எந்தைபி ரானடி யாரே
யிலமேவி னரென் பதாக மகிழ்வாரே

பதம் இராகம் மாஞ்சி தாளம் ரூபகம்.

பல்லவி.

மகிழ்ந்தெதிர் வணங்கினர் தகையாரே கைம்
மாறில்லா தருளியற் பகையாரே நேரே (மகிழ்ந்தெதிர்)

அநுபல்லவி.

புகழ்பொங்கர்க் கியபாத்யமுன் கொடுத்தாரே—மலராற்
பூசித்திருவினையை விடுத்தாரே மன (மகிழ்ந்)

சரணங்கள்.

(க) எங்கள்கு லத்தோர்செய்த பெருந்தவமே—பழுத்திங்
கெய்திய தெனக்கண்ணீர் பெய்தினி யசொல்லின்மெய்
(மகிழ்ந்)

(உ) நல்விருந் தாகவந்த நாயகமே—பெருஞ்
செல்வம ளிக்குமுத்தி தாயகமே—யென (மகிழ்ந்)

---

§புகார்-அபவாதம். *புகார்-புகாரென்று பேர்விளங்கிய
¶புகார்-புகமாட்டார். அதாவது செல்லமாட்டார்

ஙு) நன்னிதி யம்போலக் கண்டேனே—யினி
யென்றாற் செயும்வினை யினையும்விண் டேனென மெய் (மகிழ்ந்)

ஸ்வாமி.

(க) என்றிது கூறி வணங்கி யெழுந்தெதிர் நின்றவ ணிகரை
நோக்கினர் நேரே
சென்றவக் கைதவ வேதியர் நெஞ்சத் திறத்துட னோக்கி
யிதுபுகல் வாரே

(உ) கொன்றைம திச்சடை யாரடி யார்கள் குறித்தவை யாவும
ருதருள் வீரே
யென்றிது கேட்டுவந் தோழும்மி டத்திலொன் றிச்சித்தோ
மெங்க ளியற்கை யாரே

வெண்பா.

நீரிசைவீ ராகில் நிகழ்த்துவோ மென்னலுமே
சீரிசையோங் கன்பருந்தன் சிந்தைகொடு—நேரிசையா
தென்ற தடியே னிடத்திலுள தேலதனுக்
கென்னலா மென்றுரைத்தாரே

பதம் இராகம் இந்துஸ்தானி காபி தாளம் அடதாள சாப்பு

பல்லவி.

வேண்டுவதை யென்னிடத்தினில் வே தியரே சொல்லுமய்யா (வேண்டு)

அநுபல்லவி.

ஈண்டுபெரி யோர்தமக்குநா னேவல்செய் வேனுமக்கு (வேண்டு)

சரணங்கள்.

(க) இப்பொரு ளெல்லா நம்பர்க் கற்புத மானவன்ப
சொப்பும்பொரு ளேமனத் துண்மையெ னிஙேயனை நம்பி (வேண்டுவதை)

(உ) மெய்ப்பொருளி னடியாரே யிப்பொருளை யவர்நேரே
செப்புமுனமே நா னெப்பிவிக்குங் காலவன்மேல் (வேண்டு)

(ங) நெஞ்சினில்வஞ் சகமில்லேன் துஞ்சவரி னும்பொய்
சொல்லேன்
கொஞ்சர்முன்னில்லேன் மனச் சஞ்சலமெவ் வளவுமில்
லேன் (வேண்டு)

வெண்பா.

தொண்டரிவையுரைக்கச் சொற்பிசகா தன்பரெண்ணங்
கண்டுதவுங் கைகளெனுங் கற்பகத்திர்—அண்டுமியற்
சாயைபோல் வாழ்ந்திடுமுன் றன்மனைவி யாரைமகிழ்ந்
தேயருள்வீ ரென்றுரைத்தா ரே.

பதம் இராகம் பூரி கல்யாணி தாளம் ஆதி.

பல்லவி.

மனைவியைத் தாரு மனங்களி கூரும் (மனைவியை)

அநுபல்லவி.

வினையரே தவமெய்த விதிவத்தாய் மணஞ்செய்த (மனை)

சரணங்கள்,

(க) விருந்ததி கம்வந்தாலும் பொருந்துப சாரம்மேனு
மருந்ததி யிற்செய் கற்பாலு—மருந்ததியினைப்போலு (மனை)

(உ) மாதவ ருக்குநண்ணும பாதபூ சனைபண்ணு
மாதர வுடனே யண்ணு—நாதரைத்தெய்வமென் றெண்ணு
(மனை)

(ஈ) பந்தர்கள்வந் துமூசாமல் வந்தாலும வரேசாமல்
முந்தவே காத்துப் பேசாமல்—சிந்தை கனிந்துகூசாமல்
(மனை)

விருத்தம்.

¶இயற்பகையா ரிந்தவுரை கேட்டலுமே யெமதிடத்தி லியைந்த
யாவு
§மையற்பகையாம் பாசிவத்தி னடியார்தம் முடைமையென
வைத்தேனிந்தத்
‡தையற்பகைம்பூ தங்களுறும் சாட்சியா யுமதெனவே தந்தே
னென்று
‖மெய்ப்பகையே லெனமுனிலும் மகிழ்ந்துதொண்டர் தமைப்
பணிந்து விளம்புவாரே

ஸவாய்.

(க) முன்னமெ னக்குள தெம்பிரா னல்கு முதியபே றென்ன
விரைவினிற் சென்றே
நன்னயமேவுதன் வாழ்க்கைக்குரிய-நலமிகு கற்பின் மனை
யின்முன் னின்றே

---

¶இயற்பகை-இயற்பகை யென்னும் நாமம் வகித்த தொண்டர்.
§மையற்பகை-மையலிற்கு அதாவது பெண்ணாசைக்குப் பகை.
‡தையற் பகைம் பூதங்கள்-தையல், பகு, ஐம்பூதங்கள் பெண்ணை
பகுக்கத்தக்க ஐந்து பூதங்கள்.
‖மெயப் பகையேல்-மெய்யை யுடைய அப்பனே கைக்காதே
யெனக் கருத்து.

(உ) சொன்னவி திப்படி மன்றல்புரிந்திடு தோகையே வந்தவிம்
மேய்த்தவர்க் கென்றே
யுன்னையு தவின னென்னக்க லங்கி-யுனங்கனிந் திம்மொழி
கூறினரின்றே

கேகாவளி.

(க) இதாவுரைசெய்சீ ரெதா கிலுமனத் ததா லோசனைக்
கதாகு மியல்பென் னதா மெனவுமுன் பதாய் நின்றனள்
(உ) துணிந்து சொலிமுன் பணிந்தெ ழுதலுங் கனிந் தன்பரும்
பணிந்தெ திர்வணங் கியும்பொன் னனையா ருடன் சென்ற
னர்

வெண்பா.

சென்று வணங் கிப்பணியச் சேயிழையா ளுந்தியங்கி
நின்றிடவு மன்பருந்தன் னெஞ்சமகிழ்ந்—தின்றடியேன்
செய்யும் பணியெதெனக் செப்ப மறையவரு
மய்யமற வீதுரைப்ப ரால்

பதம் இராகம் கானடா தாளம் ஆதி.

பல்லவி.

தனிவழி போகலா மா மாதுடனுன் (தனி)

அநுபல்லவி.

கனிவுட னீரளித்த காரிகையுடன்சென்று
மனமது திடுக்கிட மார்க்கம தனிலின்று (தனி)

சரணங்கள்.

(க) தோட்டக் காரன் கொடுக்க—விசைந்திடினும்
பூட்டை பிடுங்கி கெடுக்க—வருவது போல்
நாட்டி லுள்ளோர்தடுக்க நமது துடைநடுக்கத் (தனி)

(உ) பந்து ஜனங்கள் வருவார்— போலிருக்குது
வந்திடி லெதிர் பொருவார்—பொருதில்தனி
வந்திடும் பார்ப்பானு மாச்சு வெறுங்கை யாச்சுத் (தனி)

(௩) கொடுத்துப் பலனு மில்லையே—யோசிக்கும்வரை
யடுத்திடும் வெகு தொல்லையே—யுலகிலுள்ளோர்
சடுத்தம் பேசிக்கல்லை படிப்பார் வலுவோ வில்லைத் (தனி)

வெண்பா.

மன்னுமுறவோ ரையுமிம்-மாநகரை யுந்தாண்டப்
பின்னுடனே வாருமெனப் பேசிடவே—தன்னிகரில்
அய்யருரை கூறு மதுவரைக்குந் தாழ்ந்தபிழை
செய்யவைகி னேனெனநொந் தே

ஆர்யா.

அடல்வாள் பலகையு மார்ந்து மடவா ரொடுநா தரேகு துணை
சார்ந்து
நடவீ ரெனமுன் பிட்டுப் படையார் செலவுற விஞேர்க ளெதிரிட்டு

பதம் இராகம் சுருட்டி தாளம் ஆதி.

பல்லவி.

உற்றுரெ திரில்வளைத் தாரே மறை கற்று ரெதிரியென நேரே
(தமதுற்று)

அநுபல்லவி.

சற்று கிலும்பய மில்லாமல் வேதியன் றய்யலைக் கொடுபோகத்
—துணை
யற்றூர்போல் நாமிருப்ப தன்யாய மெனச்சொல்லி அய்யோ
மனதுமிக நோகத்—தம (துற்றூர்)

சரணங்கள்.

(க) அளவில்லாக் கொடுமை யால்மானம் பாதிக்க அவமதிப்
புளங்கொதிக்க
இளகல் மனப்பயித்திய வியற்பகை கொடுக்கினும்
யாம்விடோ மென்றெல்லோரு ங்கதிக்கத்—தம(துற்றார்)

(உ) வாய்கூசா மனுன்றன் பெண்டீரைத் தாவென்று மறை
யோன் கேழ்க்கலாச்சே—பெற்ற
தாயினு மன்புடைய சேயிழை யையுதவத் தகுமோ வுல
கில்மிக யேச்சே—யென (வுற்றார்)

(ங) உயிரைவிட் டாலுமிந்தக் கைரவ வாய்க்கனியை
யூர்கடக்க விடுவதில்லை— மனத்
தைரியத் தையுமறி வோமெனப் படைகளைத் தாங்கியு
மானமுற்றோ மில்லை— யென (வுற்றார்

விருத்தம்.

சீலமிலாய் நில்லடா வெனவுரைக்க வனகனுமஞ் சினன்போல்
மாதைச்
சாலவே பார்க்கவவ ளியற்பகைவென் றிடுமஞ்ச வேண்டா
மென்ன
வலவன்பர் கேட்டடியே னிருக்கின்றேன் றளரீரென் றியம்பக்
கேட்டு
வாலுளவை யெனக்குநித்தி வரைவிட்டுப் பிழையுமெனவதிற்
சொல்வாரே.

பதம் இராகம் மணிரங்கு தாளம் ஆதி.

பல்லவி.

ஜாதியைக் கெடுப்பாரோ வேதியன்பின் தையலை விடுப்பாரோ
யெவருந்தங்கள் (ஜாதியை)

அநுபல்லவி.

கோதிலாத பிரக் யாதிஸம்பா தித்துக் கூறியன் போலவெகு
வீரியம் பேசிநல்ல (ஜாதியை)

சரணங்கள்

(க) இரண்டுகார் யமுந்தெரியா தென்ன கர்ம
மீ தென்னதர்மம்-மீ தென்ன வர்ம மிந்தச். (ஜாதியை)

(உ) பகைவர் நகைப்பரென் று சற்றுமோராமல்
இகல்செய்ய வும்வந்தாயே யெவர்க்குமே ருமல் (ஜாதியை)

(ஙு) வெட்கம் துக்கம்விட்டு மாதை முன்னிட்டு
முக்கியமெ னவந்தாயே-முதல் பந்துக் கட்டு (ஜாதியை)

ச) எல்லோரு மேபழிக்க வியல்வெடுத் தாயே
வல்லவித் தூர்த்தனுக்கும் வழிவிடுத்தாயே (ஜாதியை)

(ரு) உயிரைவிட் டாலும்விடு வோமிந்த மாதை
யொருக்காலும் விடமாட்டோம்-பொறுக்குதில் லையிப்போ
தே (ஜாதியை)

(சு) மானம்போ யுயிர்காவ லோ சொல்லுவாயே
தானமி துவோமெத்தத் தாவிக்கு திக்கிறுயே (ஜாதியை)

விருத்தம்.

இனத்தாரு மிவையுரைக்க-வெதிருரைப்பார் வெகுண்டென்முன்
னெதிர்த்தீராகிற்
சினத்தாரும் வாட்கிறையிட் டுங்களைவா னிலும்வரும்வேதியர்
பின் மாதை
மனத்தாரு மகிழ்ச்சியொடு சேர்ப்பனென வுறவோர்கள்
மனங்கொள்ளாமல்

வனத்தாரு நிமலர்முன்பு வளைத்தார் பேரன்பர் சமர் விளைத்தார்
தாமே

பதம்-இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

பகையா யெதிர்த்த வருடன்போ ராடிஞர்-இயற் பகையார்
பெருந்தகையார் (பகையாய்)

அநுபல்லவி.

வகையாய் நிமலனை வளையுற வோரை—மதித்தி டாமல் முன்பு
குதித்துநின் ரேரைத்—தகையார்ந் திடச்சொரிந்திடுமரத்த
தாரை
தங்கும்ப டிவாள்கொடு-பொங்கியெ திர்த்துநேரே (பகை)

சரணங்கள்.

(க) விழிவழி கனல் சொரிந் திட-வெதி ரோடிப்—பழிவரு மென
வஞ்சி டாமலே நாடிப்—பொழிமுகி விடியென வெதி
ருரையாடி
யொழிதரச் சாரிகையொ டுஞ்சுழ லாடித்
தழிவரும் வாள்கொடு கைகளும் வீழவே—சரித்துப்பனம்
பழநிகர் வார்தலை யுதிர்தர மாளவே—யடித்துடலங்
கிழிதர வாள்கொடு சிலர்களை மீளவே—பிளந்துகால்கை
வழுவிய தசையொடு தொங்கிட நீளவே—மூளுங்
கோபத்தோ
டழிதர நிலைதெரி யாவனு மேவி
யடிக்குஞ்சு ரைமா ருதம் போலுலாவிப்
பிழையீர்நீ ரமரில்வல் லவரெனக் கூவிப்
பெருங்கை புரியுமே தாவியுந் தாவிப் (பகையாய்)

(உ) கடலொலி யெனச்சிலர் கூட்டங்கள் கூடிக்
காயுங்க டுங்கணைகள் விடுத்தெதி ராடிப்
படபடத்துவா வருவீரெ ன்றோடிப்
பாயும்பு லிபோலியற் பகைவரு நாடித்
தடமந் தாமெனக் கலக்கியே மாட்டுவார்—ஒளிந்துதனித்
தனிவந் தவரையுங் கணியாமல் வீட்டுவார்—மிகுந்தவடத்
துடனெண் டிசையிலு மிவராய்க் காட்டுவார்—சூறைக்
காற்றினி
லுழல்சரு கெனமரு வலரையும் வாட்டுவார்—வலியவந்
தோர்
குடர்கள் சரிந்துவரச் சுரிகையாற் கீறி
யுடலைவெ டித்தபலாப் பழம்போல நூறி
வடவரை யெனத்தலை களைக்குவித் தாறி
மதிமயங் காமற்றொண்டர் களுக்கென்று முபகாரி
(பகையாய்.)

(ங) தாகமி குந்திரத்தங் களையள்ளிக் குடிப்பார்
தனிவேறி முற்றிய வ ரவர்களிற் றுடிப்பார்
வேகமா யேன் வந்தோ மெனக்கண்ணீர் வடிப்பார்
வெட்டுண்ட வுடல்க ளொடுஞ்சிலர் நடிப்பார்
சோக மொடுந்தலை சுற்றியே யாடுவார்—ரக்தப்பெரும்பிர
வாக மூழ்கிமிதப் பாகியே யோடுவார்—உயிர்நசையா
லேகளே பரங்களை யெடுத்துமேன் மூடுவார்—அமரில்நிரு
வாகஞ்செய்திடமுடியா மலே வாடுவார்—பெருங்கழுகு
காகமொ டுபருந்து களும் பந்தற் போடக்
காயுங் கடியசினப் பேய்கள் நின்றாட
வேக சூ ரரெனவேவினையாட
வியற்பகை வல்லமையை யெவருங் கொண்டாடப்
(பகையாய்.)

விருத்தம்.

செவ்வாறு பெருகவமர்க் களத்திலெல்திர்த் தவரையெல்லாஞ்
சிங்கம் போல
லிவ்வாறு முடித்துநின்ற முனிவரரை நோக்கியஞ்சா தினிது
செல்லத்
தெவ்வாரு மிலையெனினுஞ் சாயார ணியங்கடத்திச் செல்வ
னென்ன
அவ்வாறே யியங்கடத்திச் சென்மினென வரப்பினுமங்
கழைப்பார்தாமே

பதம்-இராகம்-ஆநந்தபயிரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

வா வா வென வோதின ரிட மாதினர் (வாவா)

அநுபல்லவி.

தேவாதி தேவன் மறை செப்பிய றியா யிறை (வா வா)

சரணங்கள்.

(க) அன்பரைச் சிவமென்று-நம்பிய வர்முன்னின்று
கும்பிட்டெண் ணமென் னென்று-கொடுப்போய்யென்
றங்குநின்று (வா வா)

(உ) உரியவ ரையுமீறி யரியசங் கதிபாரில்
தெரியச்செய் திடுமனத் தீரனே யிங்கு நேரில் (வா வா)

(ந) பந்தரெ னவெண்ணுமல்-பகைதத்திட வேபடிக்குள்
முந்தவ டர்த்தனி-முனிவா னேநொடிக்குள் (வா வா)

(ச) வேதன்விண் ணினும்பொன்னி-நாதன்மண் ணினுந் தேடிச்
சீதச்சி ரந்தாள்காணுச்-சிவபெரு மானேயோடி (வா வா)

விருத்தம்.

ஓலமிடல் கேட்டடியேன் வந்தேன் வந்தேன்
உயிர்பிழைத்தா ரொளித்துவரில் வாளால்வீட்டிச்
சாலவடர்ப் பேனெனவந் திடவுமய்யர்
தமைக்காணார் மங்கையருந் தனித்து நிற்கக்
கோலமுறும் நடராஜர் கணங்களோடுங்
கோதில்விடை மீதிலெழுந் தருளநோக்கிச்
சீலமுறுந் தொண்டருமா நந்தக்கண்ணீர்
சிதறினா ரிருவினையை யுதறினாரே.

பதம்-இராகம்-சகானா-தாளம்-ஆதி.

பல்லவி.

கண்ணிற் கண்டாரே-யீசரைக் (கண்ணில்)

அநுபல்லவி.

எண்ணரும் பிறவியை மாற்றின தகையா-ரீகையா லுயர்ந் திடு
மியற் பகையார் (கண்ணில்)

சரணங்கள்

(க) அண்டர்கள் நறுமலர் மாரிகள் பொழிய
மண்டு முனிவர்துதி-மறைகளால்மொழியத்
தண்டு வெள்ளிமலைமேற் பொன்மலை தழிய
தனவனை யொடுமாநந் தம்பொங்கி யேவழியக் (கண்ணில்)

(உ) யாதுரை பகர்வே னெனக்களி தேக்கி
யின்பக்க டலளித்தா யென்குறை நீக்கி
கோதிற் றெண்டுகொண் டும் முற வாக்கி
கொடுத்தந டனத்திரு வடிபோற்றி யெனநோக்கிக் (கண்)

(ரு) பணிந்துப ணிந்தெழுந்து கலையெனத் துள்ளிப்
பரவச மொடுநினைந் துலகினை யெள்ளித்
துணிந்து தொடர்ந்தபர்வங் கணையெல்லா ந்தள்ளி
ஸ்வரூபப ணியமுதை நிமைகளா லள்ளிக் (கண்ணில்)

விருத்தம்.

உள்ளருகி நெக்குடைந்தா நந்தத்தாரை
யொழுகநின்ற வியற்பகையை யுன்போன்மைக்
கொள்ளுநம தகத்துவந்துன் மனைவியோடுங்
கோதில்சிவ லோகமுறக் கொடுத்தே மென்று
கள்ளவிழுங் செழுங்கொன்றைத் தாரார் மன்றுட்
கலந்திடத்தம் மனைவியொடு மானமோங்கித்
தெள்ளியவெண் கயிலைபுக்க வுறவினோர்விண்
சென்றுபுக்கப் பேரின்பந்திளைத்தார் தாமே

சுதந் விருத்தம். பல சுருதி

இச்சரி தந்தனை மெச்சி யகந்தனி லிதமாக
வைச்சும கிழ்ந்தனு தித்தவ ரின்புற மனைசேய்க
ளுச்சித சம்பத மிச்சமு டன்பெறு குணர்வோடு
நிச்சய நன்பத முற்றும்வி ளங்குவர் நிதமாதோ

திருச்சிற்றம்பலம்.

## இயற்கை நாயனர் சரித்திரம்

முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆர்யா | 3 | கேகாவளி | 1 |
| பதம் | 10 | வெண்பாக்கள் | 4 |
| விருத்தம் | 7 | கண்ணிகள் | 1 |
| ஸவாய் | 2 | ஆ | 28 |

ஆ சரித்திரங்கள் ௬-க்கு உருப்படிகள் 134

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# 5. *இளையான்குடிமாற நாயனார் சரித்திரம்.

லாவணி-இராகம்-மாயாமாளவகௌளை-தாளம்-ஆதி

(க) சீர்பொருந் தியமன்றுட் டிருநட ராஜர் செழிக்குங்குஞ்
சிதத்தாளில் நேசர்
ஏர்பொருந் துந்தப்பிரா னடிமையின் றிறத்தினு லிசை
பெறும் விசுவாசர்
அடியவர்கட் குதவிசெய் பிரகாசர்

(உ) வாய்மைபொருந்தியவே ளாளர்செ யுந்தவத்தால் வந்துதித்
தகம்பீரர்
ஏயுந் தொண் டில்செலுத்தும் மனமுடை யார்வளஞ்சேர்
இளையாங் குடிமாறர் மதியிற்சற்றுங் களையா மனத்தீரர்

(ங) மேழிச்செல் வமெக்கா லுங் கோழைப டாதெனவே
விளம்புநல் லுரைபோ லும்
தாழ்வி லாதசாலி நிறைந்தபாக்ய சாலி தழைக்குங்கு
பேரன்புபோலும்
அறங்களினுல் கொழிக்குநி திமேன்மேலும்

ஆரியா.

சந்தத மில்லற மேவித்—தழைவார் நல்லற முமேசெய் மேதாவிச்
சிந்தைக னிந்துமை நேசர்—தினமே மகிழ்தொண் டர்தாசர்
மகராஜர்

பதம்—இராகம்—மாயாமாளவகௌளை—தாளம் ஏகம்.

நாராயணஹரி யென்ற இந்துஸ்தானி போல

பல்லவி.

தொண்டு செய்தார் பெரும்பிறவி யெய்தார்
தூயனர் யார்க்குந் தாயனர் சிவ—நேயனர் மாற நாயனர் தினம் (தொண்டு)

அநுபல்லவி.

சிவச்சின்னம் பொருந்திடில் யாவ ரேனுமெதிர்
சென்றுவ ணங்கிப்ப ணிந்து—கனிந்து (தொண்டு)

சரணங்கள்.

(க) முன்னோர்செ யுந்தவத்தால் இந்நேரங் காணப்பெற்றேன்
என்னக்கை குவித்து நின்று—முன்னின்று (தொண்டு)

(உ) கைலாகு கொடுலத்தி லழைத்தாத னத்திருத்திக்
கால்களை நீரால்நனைத்து—அர்ச்சித்துத் (தொண்டு)

(ங) தூபதீ பமொடுப சரித்துநால் வகையறு
சுவையொட முதையூட்டிச்—சீராட்டித் (தொண்டு)

ஸவாய்.

(க) இவ்வண்ணந் தொண்டர்க்குச் செய்வண்ணங் கண்டன்ப
ரியாவருங் கூடியி யைந்தமு துண்ணுஞ்
செவ்வண்ணத் தாராள கேசன்போ னடோறுஞ்
சீர்சிறந் தோங்கிந வநிதி நண்ணும்

(உ) பெற்றிபெற் றோருங்குமங் நாளிற் சிறுமைப்
பெருக்கம்வந் தானுந்தொண் டின்றிறங் காட்ட

நிற்றலு மெல்லவ ளங்குறை யப்பர னேசெய முன்போ
லன் பர்க்கமு தூட்ட.

பதம்—இராகம்—வஸந்தா தாளம்—ஆதி.

பல்லவி.

முன்னம்போல் பக்திபுரிந் தார் நன்னய வறந்தெரிந் தார் (முன்)

அநுபல்லவி.

பொன்னம்பலப் பேராசை யுன்னியே த ரணிமிசை (முன்)

சரணங்கள்.

(க) தனம்பெருக் கங்குறைய மனக்கனி வுநிறைய
தினப்பிடிக் கனங்கொடுத்து—நினைத்தவண் ணமுமுடித்து
(முன்)

(உ) பொன்செய்பணி களைப்பற்றும் நஞ்சைபுன்செய் களைவிற்றுந்
தன்செய்கை குறைவறுமல்—சஞ்சலம னதுறுமல் (முன்)

(ங) செம்மையகத் துள்ளயாவுந் தினந்தோறும் விற்றுமேவும்
தம்மைவிற்குங் கடன் மேலுமே—தான்வந்திட வுமெக்
காலுமே (முன்)

அபங்கு.

(க) இவ்வித நாடொறுந் தொண்ட—ரற—மேசெய் திடநீல
கண்டர்
ஒவ்விய *தந்தவ ளவிடை—மின்னை யொப்பிடுந்—
‡தந்தவ ளவிடை

---

*தம்தவள விடை—தம்முடைய வெளுமையான இடபம்.
‡தந்தவள விடை—நூலின் அவ்வளவு அளவுள்ள, இடை.

(உ) மாது மின்றித்தனியாகி—பரஞ் ஜோதி யருந்தவர்போ
லேகிப்
பாதி மதியணிந்த †சடையார்—அன்—பருக்கருள் செய
மனஞ் ||சடையார்

(ங) மாரி காலத்திரு ளூடி—பெய்—மழையால் நனைந்திடத்
தேடி—வரச்
சீரினர் கதவை மூடி—யிருந்—திடுமேல் வையில் மன்றுளாடித்

(ச) §திருக்குரற் கேட்டெதிர் சென்று—வந்தார்தந்—¶திருக்குறத்
"திருக்கறப் பணிந்தார்
மருக்குல வுமெய்யீரந் துடைத்தார்—மிக்க—மாசுறும்
பவங்களைத் துடைத்தார்

(ரு) குளிரா விடத்தினில்வீற் றிருக்கச் செய்து—மினிருந்
தவர்க்குமன முருக்க—மொடு
மனியோ டமுதிட வேண்டி—மனை—யாருடன் யோசித்தன
ரீண்டி

கலித்துறை.

மின்னே யருந்தவர் மேவி நடுநிசி வேளையிலே
கன்னேரு நெஞ்சருங் காண்கிற் றமதகக் கட்டுகள்விட்
டன்னோ மேயங் கனல்மெழு காவா திர்ஷ்டவசத்
தின்னேரம் வந்தவர் தம்பசி தீருத் தியைச்சொல்வையே.

பதம்-இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம் (மன)ஜாலகளித என்ற
இந்துஸ்தானி போல

பல்லவி.

வந்தவர்பசி தடுத்திடவொரு வகைசொல் வாய்மானே—மண
மிகு செழுந் தேனே—தேடி. (வந்தவர்)

---

†சடையார்—ஜடையையுடையவர்.
||சடையார்—சலிக்காதவர்.
§திருக்குரல்—அழகிய குரல்.
¶திருக்குற—நேத்திரம் பொருந்த.
"குற்றம் நீங்க.

அநுபல்லவி.

இந்தத் தவராற் பசிதீரென்—றென வெனைத் தானே—கேட்கநல்ல
தெனவும் வந்தேனே—யிவ்வேளையில் (வந்தவர்)

சரணங்கள்.

(க) இந்தவேளை யகமதிலொன்று மிலையென் செய்வேனே
—யிறையிரு
ளினில்மதிமானே யடியவர்வந்தநுர லத்தானே—யிந்த
வேளை (வந்தவர்)

(உ) சந்தப் பணையில்வி ரைத்தசாலமுளை தனைவி ரைவோடுங்
—கொணரில
தனை யடைவோடுந்—திருவமு துணவிக் கக்கூடும்
—யானிந்தவேளை (வந்தவர்)

வெண்பா.

இந்தவுரை கேட்டவுட னேமெய் புளகரும்ப
முந்த விழுந்த முதல்வந்த—டைந்தவர்போற்
சென்றார்பொன் னம்பலத்தின் றேவை மனத்திலுன்னி
யன்றுவ லோடுகொணர்ந் தார்.

பதம்-இராகம்-பியாக்-தாளம்-ஆதி.

பல்லவி.

சாலி முளையைகுண சாலியன் போடுங்கூடை
தனில்நிறை யவாரிக்கொண் டுவந்தாரோ (சாலி)

அநுபல்லவி.

காலின்றி னைவால்மெல்லக் கோலிவ ழிதடவிக் கங்குல்மைக்
குழம்பின் சீராகக்
கட்டுவிட் டுருகல்போல் மழைமா ரிபொழியக் கவின்முகத்
திலிறைக்க நேராகச் (சாலி)

சரணங்கள்.

(க) அருந்தவர் பசியினுல் வருந்துவ ரென்றுதுக்க
மதனுலவதிசற்றுந் தோணுமலே
அன்பர்முன் வாஸனையாற் கம்பமில் லாமற்சென்றங்
கயலிலொ ருவரையுங் காணுமலே (சாவீ)

(உ) பகலில்வி ளைத்தவித்து வாய்க்கால்வ ழியினீராற்
பாப்பிவ ருவதைக்கண் டகமகிழ்ந்து
பருத்தகூ டையைத் தாழ்த்தி வாரிவாரிநிறைத்தும்
பண்பார் மனைவிமதி தனைப்புகழ்ந்து (சாவி)

கேகாவளி.

தவாத தவருமு பவாஸ மொடுமில் லில்வாஸஞ் செய யிவாறு
நி னைவார வியலும்மெ னைவா ரன்பிலா (பிழையை
யெனப்ப சியதால் நினைக்கு மெனமா மனத் தின்விரை
விளிற்செ லவெதிர்ந் தினித்த மனைநெல் முளைக்கூ டையை

வெண்பா.

தாங்கினர் *பங்கமிலார் தண்முளையின் §பங்கமிலா
தாங்குநீ ராற்கழுவி யாசகலத்—தேங்கமழும்
வாக்கினர் வந்தவரு மாதவர்க்கன் பாகவுரை
வாக்கினர் மிக்கமகிழ் வாய்.

பதம்-இராகம்தோடி-தாளம்-ஆதி

பல்லவி.

செம்மையமு தாக்கினர் நன்மையுறும் வாக்கினர் (செம்மை)

அநுபல்லவி.

மும்மையு ந்தெ ரிந்தபெரு முதறிவி னேக்கினர் (செம்மை)

---

*பங்கம்-முறிவு.
§பங்கம்-சேர்.

சரணங்கள்.

(க) கலக்க மிலார்விறகைக் காணேனென வீட்டின்
அலக்கைமு றித்துக்கொ டுக்க அடுப்பின்மாட் டித்தீ
மூட்டிச் (செம்மை)

(உ) வெய்யபவ முளைதனை நையவருத் தல்போல்முளை
செய்யினெல்மு ளையதனை யுய்யவறுத் தன்புபுனை(செம்மை)

(ங) கறிக்கென்ன செய்வேனென்று கழறக்கொல்
லைக்குட்சென்று
குறிப்புடனி ளங்கீரை கொணர்ந்து சமைத்து நேரே
(செம்மை)

ஆர்யா.

(க) விண்ணு ரமுதமு நாண— மின்னுர் வேணி யானுர் மகிழ்வு
பூண—எண்ணப் படியமு தாக்கி— யிசையார் கணவரி டமே
சொலினர்தேக்கி

(உ) *அருந்தவர் பசியால் வாடி—யாயா சமொடுது யில்வா
ரிருகண்மூடி
0 யிருந்தவ ருக்க||றி வித்தார்— இனிதா நடரா ஜர்தாளை
[] யறிவித்தார்.—

பதம். இராகம்—கமாசு. தாளம்—அடதாள சாப்பு.
பூலோங்கி யென்ற இந்துஸ்தானி போல

பல்லவி.

எழுந்தருள்வீர் அமுதுண்ணஎழுந்தருள்வீர் கருணைசெய் (தெழு)

---

* அருந்தவர்—அரிய தவத்தையுடையவர்.
0 இருந்தவர்—இருந்தவர்
|| அறிவித்தார்—தெரிவித்தார்.
[] அறிவித்தார்—அறிவதற்கு மூலாதாரமுள்ளவர்.

அநுபல்லவி.

அழுந்தும மழையால்முடிச் செழுங்கதிர் மேனிவாடி
யாயாச முற்றீரேயென் மேல்நேசம் வைத்தன்புடன் (எழுந்)

சரணங்கள்.

(க) யாம்பயில் தவமேலே தாம்பழுத் ததுபோலே— யென்
னிலந்தேடி வந்தீரேவந் தனங்கோடி— செய்தேனுவந்
(தெழு)

(உ) ஏழைமு கத்தைநோக்கிக் கூழையு மமுதாக்கி
யினிதுண்பீர் அடியேன்மேற் கனநண்பீர்— ஆதரவோ
(டெழுந்)

சந்த நோட்டு. இராகம்—ஹமீர்கல்யாணி. தாளம்—ஏகம்.

தொண்டர் கூற வண்டர் நாதர் மண்டு ஜோதி யாயுறக்
கண்டு மாரர் பெண்டி ரொன்றும் விண்டி டாம லேங்கிடப்
பண்டை வேத விடையி னீல கண்டர் சைவ மாதொடும்
விண்டு வாதி தேவ ரோடு மேவி முன்ப தாகினர்.

பதம். இராகம்—பியாகு. தாளம்—ஆதி.

பல்லவி.

ஈச ரெழுந்தருளி னார் விடைமேல் ஜக (தீசர்)

அநுபல்லவி.

மாசின் மனத்தெருளினார் முன்பாக ஜக (தீசர்)

சரணங்கள்.

(க) மந்தார மலர்களை யிந்திராதி யர்பொழிய
முந்தத் தொண்டர் கண்களில் முதிரும் பாஷ்யம் வழிய
(யீசர்)

(உ) அன்பவுங் களைச்சோதித் தகத்தில் மகிழ்ந்தி ட்டோநன்
றின்பம் பெறவுங் களுக் கீந்தோ நம துலகென் (றீசர்)

(௩) ‡ தனதனுங் கட்குநாளுந் † தனதனு கிப்பணி
தினமும்பு ரியவைத்தோம் செழிப்பீரென் றுமணி (யீசர்)

விருத்தம்.

ஈச ரருருளித் தமதுலக மெய்த விளையாங் குடிமாறர்
மாசில் மனையோ டுயர்கையிலே மருவுங் காதை தனைக்கேட்போர்
வாச முறுமில் லறத்திருந்து மகிழ்வுற் றோங்கிப் பின்பரனார்
நேச வுலகம் புக்குயென்றும் நிலைபெற் றின்ப மூழ்குவரே.

இளையான்குடிமாற நாயனார் சரித்திரம்

முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆபதம் | 5. | அபங்கு | 1 | சந்த நோட்டு | 1. |
| விருத்தம் | 1. | கேகாவளி | 1 | | |
| ஆர்யா | 2. | ஸவாய் | 1 | ஆக உருப்படிகள் | 18. |
| வெண்பா | 2. | கண்ணிகள் | 2 | | |
| லாவணி | 1. | கலித்துறை | 1 | | |

ஆக சரித்திரங்கள் உருப்படிகள் 152.

---

‡ தனதன்—குபேரன். † தனதன்—சொந்தமுள்ளவன்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# 6 †மெய்ப்பொருணயனர் சரித்திரம்.

லாவணி-இராகம்-மாஞ்சி-தாளம்-சாப்பு

**கண்ணிகள்.**

(க) சீர்பொருந் தியசேதி நாட்டினிற் சிறந்த
திருக்கோவ லூர்தனைத் திடவந்து பிறந்த
கார்பொருந் துமலைம ||லாடரின் கோமான்
கலைவேத நெறிவாய்மை யறிந்திடும் சீமான்

(உ) அரசியல் நெறிவந்த வறநெறி புரிந்தங்
கரிகளை வெலுந்திண்ண வரைப்புயந் திருந்தப்
பெருமையாய்த் தரித்தவர் பிறைமதி சூடும்
பெம்மான்மெய்ப் பொருளென்ற பெருமையை நாடும்

(ங) தற்பர ரிவரென்ற தன்மையாற் போற்றும்
மெய்ப் பொரு ளிவரென்று விரிவுல கேற்றும்
அற்புத ரெந்தையாற் கருந்தொண்டு புரிய
அகமதில் நினைத்தன ரவர்புகழ் விரிய

பதம்-இராகம்-காபிதாளம்-அடதாளசாப்பு.

எந்தநிநின்னுவகடுதுரா என்ற ஜாவளிலோல

**பல்லவி.**

தொண்டுசெய் தார்-மெய்ப்பொருணயனர் ஈசர் (தொண்டு)

||மலாடர்—மலையாளர்.

அநுபல்லவி.

மண்டுப வத்தைப்போக்கித் தொண்டர்மீ தன்புதேக்கித்
(தொண்டு)

சரணங்கள்.

(க) மாடுமு தற்செல்வங்கள் நீடும டியவர்கள்
நாடும்பொ ருள்களென்று தேடிக்கொ டுத்துநின்று
(தொண்டு)

(உ) தொண்டரெங் கெனத்தேடிக் கண்டவு டன்கொண்டாடி
யண்டவர் பதம்நாடி யடிகள்தம் முடிசூடித் (தொண்டு)

(ஙு) அஞ்சக்க ரங்களோதி யக்கும ணிவிபூதி
மஞ்சுடன்த ரித்துக்கியாதி மருவயென் றும்விநோதி
(தொண்டு)

(ச) ஈசர்கோ யிற்பிரதிஷ்டை-யெங்குஞ்செய் துவிசிஷ்ட
மாசகல ரற்குநிஷ்டை மருவப் பூசித்துமிஷ்டர் (தொண்டு)

வெண்பா.

இத்தகையாய் மெய்ப்பொருளா ரீசர்மகிழ்ந் தோங்கிநிற்க
மெய்த்தவவே டத்துடனே மேவுதொண்டின்—சுத்தரென்றெண்
ணுமறி யாமுத்த நாதனன்ப ரோடுசமர்
வாளொடுகா லாளுறச் செய் வான்.

பதம்-இராகம்-அடாணு-தாளம்-ஆதி.

பல்லவி.

அடல் புரிந் தானே அரசர்முன் றூனே நின் (றடல்)

அநுபல்லவி.

புடவிகி டுகிடென நடுங்கப்பிர தாபப்
போரினில் ரணபேரிசாற்றிட ¶ முத்தநாதனின் றடல்.

---

¶ அவன் பெயரன்று ஆனால் மூடர்களுக்கரசனெனப் பொருள்கொள்க.

சரணங்கள்.

(க) அணியணி யாக்கா லாட்களை வகுத்தங்
கரியயி ரதகஜ துரகமுந் தொகுத்துத்
துணிவுட னுயிரபி மானமுஞ் செகுத்துத்
துலங்குமெய்ப் பொருண்முன்னின் றிணங்குமா
னமுகுத்தங் (கடல்)

(உ) தொண்டர் மகிமைசற் றுந் தெரியாத பாவி
சுகிர்தரைச் சுலபமா யெண்ணியே தாவிச்
சண்டைசெய் திடமத கரியெனப் பூவிற்
சண்டமா ருதமெனக் கண்டவர்ந டுங்கக்கூவி (அடல்)

(௩) அய்ய ரானருளைப் பெற்றமெய்ப் பொருளா
ரடித்துத்து ரத்தச்சேனை யகிலமு முருளக்
கைதவ முற்றமுத்த நாதன்மெய் மருளக்
காந்து தனையுலக மிகழ்ந்துசொ லும்பொருளாய் (சுடல்)

விருத்தம்-

இந்தவித மிகழ்ந்தோட முத்தநாத னிறையவர் மெய்ப் பொருளை
வெல்ல வினியமார்க்க
மெந்தவித மெனநினைந்து மிலங்குபூதி யெழில்திகழ்மெய் யணிந்
துசிவ வேடம் தன்னை
சொந்தமுடன் றரிப்பினல்லாற் சோதியீசன் றுணைகொள்ளு
மவரைவெல்லே மென்றுநாடிச்
சிந்தையினிற் கபடமொடுஞ் சிவவேடத்தைச் சேர்ந்திட்டா
னவ்மதனைச் சார்ந்திட டானே

இராகம்-சென்ஜுருட்டி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

(க) கைதவன்சி வவேடங்கொண் டெழுந்தான்—என்று
மெய்தவந் தனிற்சற்று மெய்தவந் தழுந்தான்

(உ) மெய்யெங்குந் திருநீறு பூசி——நாவால்
பொய்யாயஞ் சக்காத்தைப் புரிதல்போற் பேசி

(ங) கையினிற்ப டைகரந்த பையைப் புத்தகக்
கவளிபோல் மறைத்திடக் காட்டியே பொய்யன்

(ச) கோவலூ ரினைத்தேடி வந்தான்——மெய்ப்பொருள்வெல்லு
மாவலூ றிடத்தொண்ட ரகஞ்சார்ந்தங் குவந்தான்

(ரு) காவலா ளவரினைக் கண்டு——சிவவேடங்
கைக்கொண்டா ரெனப்போற்றிக் கனிவுரை கொண்டு

(சு) உள்ளெந் துருளுவீ ரென்ன——வுரைத்திடு
மூரியமொழி கள்செவி புகுதவே மன்னர்

(எ) வள்ளலி ருக்குமிட நாடத்—— தத்தனென்ற
வாயிற்காவ லன்நாதன் துயிலுமென மூடன்

(அ) கள்ளமொடுஞ் சிவபக்தன் நானே—— மன்னற்குக்
கனிவாய்ச்சி வாகமநூற் கழறவந் தேனே

(கூ) என்றவன்ற டையைவ மதித்து—— உள்ளே
யெழும்பள்ளி தனைக்கொண்ட யிறையிடங் குதித்து

(ய) நின்றவன்ற னைமனைவி கண்டாள்——பள்ளியினின்று
நிமலவெ ழுகவென நிகழ்ந்தன்பு கொண்டாள்

ஆர்யா.

மனைவியு ரைக்கவெ ழுந்தார்——மனதா (வலிநெடு பவ மீதிலழுந்தார்——பனகம ணிந்தவர் நேரே——பணிசெய் தொண்டரி வரோவெ னவிள்வாரே

தேண்டை.

(க) தொண்டர்வே டந்தரிப்பார் நேரே நின்று
தொத்திரஞ் செய்துபூசிப் பாரே——யெங்க

(உ) ளண்டர்நா யகனுருத்தானே—யிவண்
அமர்ந்ததோ வென்றுரைத்து மானே—ஏழை
(ரு) யென்றன்மீ தன்புகூர்ந்திப் போதே—வந்த
தியாதெனச் சொல்வீர்வருந் தாதே—யென்று
(ச) வந்துமெய்ப் பொருளுமே கூற—வதில்
வரைந்தான்முத் தநாதன்பொய் மீற

இராகம்-நாட்டைக்குறிஞ்சி-தாளம்-ரூபகம்

பல்லவி.

கேளு மையா மனது தேர்ந்து கனிந்து (கேளுமையா)

அநுபல்லவி.

நாளு மன்பர்கட் கமுத மளித்தவர் தாளி ணையில் மலர் தூவி
மகிழ்ந்மேதாவி (கேளும்)

சரணங்கள்.

(க) பக்தி நெறியினி லுற்ற மனதொரு மித்தவ ருலகி
லும்மையே விட
யெத்தி சையுமிலை யுத்தம வு னையே நத்தியுமிகம தித்து
வந்தே
னுவந்தேன் (கேளும்)

(உ) உங்கள் கடவுளார் சங்கரர்சொ லும லங்கிருத வரகம
நூலிதா—மூல
கெங்கு மரிதரி திங்கு மதுசெவி தங்கும் படி கொடு
வந்தேன் மனது ம கிழ்ந்தே (கேளுமையா)

(ரு) மோன முடனபி மான மூலகினி லேபி னவின்றிதி
தானமர்ய்ச் செவி
யே நலமுறயி தான ஸமயம் மெய்ஞ் ஞான முதவுமின்
னூல்நிக ரிலதினுலே (கேளும்)

ஸ்வரம்.

(க) இத்தகை யாகவு ரைத்தம திதனை மெய்த்தவர் கேட்டுமி
கச்சிறந்தே
நத்தியே நாம்செய்த வத்தின்பே றீதெனச் சித்தம ராவிக
சித்துவந்தே

(உ) ஐயனே யித்தகி யுய்யும்வ கைசெய்யும் செய்யவிந்
நூலினைச் செப்புவீரே—யெனத்
தையல் விலகிடிற் சொல்லுவே னென்னவத் தண்மொழி
கேட்டதை யொப்புவரே

கலித்துறை.

கன்னே ரகமுறும் வஞ்சகன் சொன்ன கடுமொழியால்
மின்னே விலகெனத் தொண்ட ருரைக்கவம் மேதகையார்
அந்நேர மந்தப் புரஞ்செலக் கண்டுவந் தண்டர்பிரான்
சொன்னேர்சி வாகம நூலினைக் கேட்கத் துணிந்தனரே

இராகம்-சகானா-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

(க) வேடங்கொண் டெழுமுத்த நாதனைத்த விசிருத்தி
மேதினி யிற்று மிருந்தார்—மன்று
ளாடும் பிரான்சொல்நூலை ஐயரே சொன்மினென
வாதுர மாய்க்கேட் டமர்ந்தார்.

(உ) கேட்கக் கவளிநின்று நூற்கண் டெடுப்பவன் போற்
கிளர்வாட் கைதவ னெடுத்தான்—அதனைக்கொண்டு
பாற்கரன் போல்விளங்கும் பரனருள் கொண்டவர்மேற்
பதியக் குத்தியே விடுத்தான்.

(ங) எம்பிரான் வேடமுல கெங்குமெய்ப் பொருளென
வீசர் பக்தியைப் புரிந்தார்—அதனாலிங்கு

துன்புசெய் தாலுமுத்த நாதன்வே டத்தைக்கொண்டு
சுத்தர் வணங்கி யிருந்தார்.

(௪) கைதவன் மெய்ப்பொருளோ டுள்ளே தனியாய் நின்ற
காரணமென் னென்று பயந்தான்—பயந்ததத்தன்
எய்த வாட்கொடுநின்ற பொய்தவமுத்த நாதனை
மிகலைக் குத்தவு முயன்றான்.

விருத்தம்.

இவ்வாறு முயன்றதத்த னறனைத்த டுத்தே
யிவர்சிவ வேடங்கொண்ட நமராந் தொண்டர்
செவ்வாறு பெருகவதைப் பொருத்து மந்தச்
சிவனடியார்க் கிடையூறு செய்யே லென்றார்
அவ்வாறு சொன்னவுரை கேட்டதத்தன்
அடியேனம் மொழிதவறா நடப்பே னின்னும்
எவ்வாறுங் குற்றேவல் சொன்மி னென்றான்
இனியமொழி கேட்டிசைப்ப ரிறைவரேறே.

பதம்-இராகம்-சங்காபரணம்-தாளம் ஆதி. ஏழைப்பார்ப்பானடி-
என்ற வர்ணமெட்டுப்போல.

பல்லவி.

அடியார்க் கிடை யூறின்றி யவர்த லத்திற் சேர்ப்பாய் (அடியார்)

அநுபல்லவி.

கொடிய செய்கையுறும் நெடியபூதலர்வந் திடிய தானவுரையே
பகர்ந்திவரைப் பொடிசெயவே நிரையே—வருவர் (அடியார்)

சரணங்கள்.

(க) அண்டர் நாதர்மகிழ் தொண்டரின் பெருமை மண்டலத்
தோ ரறியார் மாணிவனைக் கண்டுமன்பு தரியார்
—பெரிய (அடியார்)

(உ) பூதி மேனிதரித் தாதி யானபரஞ்சோதி நாமமோதித்திகழு
மிவர் கியாதி தெரியப் போதித்—தினிய (அடியார்)

ஸ்வாய்.

(க) மன்னரு ரைகேட்ட பின்னர் சிவவேடன்
றன்னை யழைத்தும்தத் தன்செல வே
பொன்னுல குற்றவ ரின்னவன் செய்கை
பொறுக்க வொணு திவ னைக்கொலவே

(உ) வந்தவ ரைத்தடுத் தந்தமன் னனுரை
சிந்தைம கிழ்ந்துதத் தன்மொழிந் தான்
அந்தவு ரைகட்கி சைந்துல கோர்விட்டுப்
பந்தமு றுந்தம் பவமொ ழிந் தார்

(ங) இப்படி யோதியு மிப்படி யோர்வில
கப்பணி வாய்வன முங்கடத்தி
சொற்படி செய்தன னென்றுமன் னராந்
துறவி யிடம் வரைந் தான்றிடத்தில்

(ச) தத்தன் வரும்வரை தம்முரையிர் தாங்குமத்
தண்ணளி யாரிடந் தானும்வந்து
பக்தரைக் கொண்டு விடுத்தன னென்று
பகர்மொழி கேட்டுவந் தார்சிறந்து

பதம்-இராகம்-கானடா தாளம்-ஆதி.

பல்லவி.

போதனை செய்தாரே மெய்ப் பொருளரு நேரே (போதனை)

அநுபல்லவி

ஆதரவுடன் றங்கு மாரா மைச்சரையு மழைத்து முத்தியின்
பத்திற் றிளைத்துவ கைகிளைத்துப் (போதனை)

சரணங்கள்

(க) எண்டிசையுஞ் சாருந் தொண்டரையே நீரும்
கண்டவர் களைமனை யழைத்தமு தமளித்து
மண்டுப வமொழித்து வருவீரென் றுந்
தழைத் தெனப் (போதனை)

(உ) ஐந்தெழுத்து மோதி யநுதினம் விபூதிப்
பந்த மறமெய்யெங்குந் தரித்தீச னைக்குறித்துப்
பணிசெய்வீ ரெனத்தொண்டர் பக்திபெரி தெனக்
கொண்ட (போதனை)

விருத்தம்

மைந்தர்கட் கினியபுத்தி மகிழ்ந்தினி துரைத்தபின்னர்
பந்தம்விட் டவராயீசன் பதத்தையே மனத்திலுன்னச்
சந்ததான் மறைகளோதத் தனிமன்று ளாடுகின்ற
வெந்தைவெள் விடைமீதேறி யினிதுட னெழுந்தார் மன்னே

இராகம்-வஸந்தா-தாளம்-சாப்பு.

பல்லவி

ஈசர்த ரிசனஞ் செய்தார் எங்கள் மெய்ப்பொருணாயனா
ரற்புத ராம் வரஜக தீசர்

அநுபல்லவி

கேசவ னயன்முதல் நேசர்தே டியுங்காணாக்
கிளர்பத மருவியெக் களித்தின்பத் திற்குளித்து ஜக (தீசர்)

சரணங்கள்;

(க) கைலைம லைகிரிவெள் விடைமீ துமையுமின்னக்
கண்ணனா ருகில்நின்று மண்ணவ்மேற் றுதிபன்ன
மயிலமரு முருகேசர் கயமுகர் மருவி யருகினி
லமர வுருகிட ஜக (தீசர்)

(உ) கண்களினின்றானந்த பாஷ்பங்க ளுஞ்சொரியக்
கருணை வாரிதியக விதழ்மல ரும்விரியப்
பண்ணவர்கள் மலர்மாரி பொழிந்திடப்
பணிந்து தொடர்ந்திடும் பவரோ யொழிந்திட (ஜகதீசர்)

(ங) ஸாலோக ஸாமீப ஸாரூப முங்கடந்து
ஸாயுச்சிய மாந்-துரியா தீத பதமடைந்து
சீலமுடன் ஜகதீசனருகினில் தினமுந் துதிசெய்து
கனிய மொழிபெய்து ஜக (தீசர்)

**விருத்தம் பலசுருதி.**

இந்தவித மெய்ப்பொருளா ரினிய தொண்டா
லீசர் பத நிழலமர்ந்த காதைதன்னைச்
சிந்தைமகிழ் ந்துரைப்போர்கள் கேட்போரெல்லாந்
தினமுலகிற் சிறந்தபத மடைந்து வாழ்ந்து
பந்தமறப் பவமொழிந்து பரமனான
பரஞ்சோதி யெந்தையுல கமர்ந்தென் னாளும்
சந்ததமுந் தொண்டர்கள்கூட் டத்திேனாடு
தாமுமிருந் தினிதாக வாழ்வர் மன்றே

மெய்ப்பொரு ளாயனார் சரித்திரம்

முற்றிற்று.

| | | | | |
|---|---|---|---|---|
| கண்ணிகள் | 3 | ஆர்யா | 1 | ஆ. உருப்படிகள் 19 |
| பதம் | 6 | தெண்டை | 1 | |
| வெண்பா | 1 | ஸவாய் | 2 | |
| விருத்தம் | 4 | கலித்துறை | 1 | |

ஆ. சரித்திரங்கள் 6-க்கு உருப்படிகள் 171

---

உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# (7) †விறன்மிண்ட நாயனார் சரித்திரம்

லாவணி அல்லது ஸாகி.

(க) பராசா யுதமுறு மாதவ முனிவன் பாசி ராம நாடு
திரைசெய் கடல்வளம் நிலவள மலைவளம் செழித்திடு
மலைநாடு

(உ) வாரி சொரியுங்கதிர் முத்தும் வயல்மென் முத்தும் மல்கு
கரும்பின் முத்தும்
†வேரல் விளையுங்குளிர் முத்தும் திறலுறும் வேழக்
கரும்பின் முத்தும்

(ங) ‡மூர லெனச்சொல்லும்நல் வெண்முத் தநகையார் முறை
கோக் குஞ்சேரர்
ஆரூர் திருநாட் டோர்முன்சிறந்தமூதூர் அணிசெங்குன்
றூர்சேர

(ச) மறையோர் குலத்தோர் வழிவழி நின்றெழுகு மகிமை
யாலே நிறைந்தே
வுறையு மந்நகரில் வே ளாளர்கு லத்தினில்வந் துதித்தனர்
பக்திசிறந்தே

(ரு) பக்தி நிறையுந்தொண்டர் களைச்சிவ மென்றெண்ணிப்
பணியுந் தொண்டு ¶புரிந்தோர்
மித்தையு லகின்வாழ்வை யெத்தும்வி றன்மிண்ட
ரெனத்திகழ் நாமம்சிறந்தோர்

---

†மூங்கில் ‡பல் ¶புரிந்தோரென்ற எழுவாயும், சிறந்தோரென்ற எழுவாயும் உதித்தனரென்ற வினையைக்கொண்டு முடிந்தன.

பதம்-இராகம்-ஸாவேரிதாளம்-ஆதி

பல்லவி

ஆரூரில் வந்து மணைந்தார் அரனூர் மகிழ்விறன்மிண்டர் (ஆரூர்)

அநுபல்லவி

நேரூர் மலைநாடு வழிநடந்து பாரார் வெகுதேசமதுகடந்து(ஆரூர்

சரணங்கள்

(க) சீரார் பலதங்கள் மிளிர்ந்திவரும் நீரார் சடையினை ரைத்தொ
முதுவரும்
பேறே தம தறமெனக்கொண்டு நின்ற வாறே நிலையுறு
கலிநடை வென்ற (ஆரூர்)

(உ) மேருச் சிலைவளைத்துப் புரங்கள்செற்ற சீரார் வை திகத்தே
ரதனிலுற்றக்
காரர் விடக்கண்டர் வசிகப்பெற்ற சீரால் முக்தி திளைக்க
வினையகற்ற (ஆரூர்)

(ங) தேவா சிரியத்தி னிடைபொருந்து மூவார் தொண்டர்
குழுவி னரைமறந்து
மேவா நம்பி யா ரரனையும்வந்து நாவா லொரு வாறு
*புறகென்றுவந் (ஆரூர்)

(ச) நம்பி யிவர் தொண்டு வலிமையென்றும் நம்பித் திருத்
தொண்டுத் தொகைசொல்லென்று
அம்பு லியின் சடையார் நவிலவன்றும் அன்பின் சொல வ
வர்தங் கோதுமகன்று (ஆரூர்)

---

* புறத்துவணங்கிச் செல்லாமல் மனசால் இவர்க்கு அடியேனுகும் நன்று னோக்காளென்று வணங்கி ஒருவாருக ஒதுங்கிச் செல்லுமெனப் பொருள் கொள்க.

விருத்தம்

ஜகத்திலுளோர் நாமுமுயத் திருத்தொண்டத் தொகைநம்பி
செப்ப நான்கா
வகுத்திவரு மறைகளுக்கெட் டாதவான் மலரடியை வழுத்துந்
தொண்டர்
மகத்துவஞ்சேர் கூட்டத்தி லிருவருமொன் ருதலெனில்
மகிமைதன்னைப்
பகுத்துரைசெய் திடவொணுமோ விறன்மிண்டர் பணிபெரிதாப்
பகரலாமே.

விருத்தம்

திருத்தொண்டர் மகிமையினை விளக்கவந்த திருத்தொண்டத்
தொகைபாடக் கருவியாகும்
பெருத்தொண்ட ரெனப்பாரோர் புகழ்ந்து போற்றும்
பெருமைபெறும் விறன்மிண்ட ரனுர்க்கேற்ற
அருத்தியொடும் தொண்டுசெய்தந் நாள்தொட்டேநின்
றகிலமுறுந் தொண்டர்களை வணங்கவீசன்
கருத்துமகிழ்ந் திடவுமின்பக் கைலைபுக்குக் கணநாத ரெனவமர்ந்
தார் கனிவாய் மாதோ

பலசுருதி விருத்தம்.

அன்பினிற் றொண்டுசெய்து மமர்விறன் மிண்டர்காதை
இன்பமாப் படிப்போர் கேட்போர் இகத்துறுஞ் சுகங்க ளேற்
பம்புமோர் வினைகள் கொய்து பரமனுர் கைலைபுக்குச் (றும்
சம்புவின் கமலப்பாதந் தனையடைந் திருப்பர்மாதோ.

விறன்மிண்ட நாயனுர் சரித்திரம்

முற்றிற்று

| | |
|---|---|
| ஆக லாவணி அல்லதுஸாகி | 1 |
| பதம் | 1 |
| விருத்தம் | 3 |
| ஆக | 5 |

ஆக சரித்திரங்கள் 7-க்கு உருப்படிகள் 176

௨

கணபதிதுணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# (8) *அமர் நீதி நாயனார் சரித்திரம்.

---

லாவணி-இராகம்-இந்துஸ்தானி-காபிதாளம்-ஆதிஸாகியாகவும் பாடலாம்.

(க) திருமருவியநே ரியர்வாழ்பொன்னிச் செழுநன் னாடுடையார்
மருமருவியபொழி லுடையார் தடநிறை மருதவேலி யுடையார்

(உ) கிள்ளைகள் மறைகளை யுள்ளப டிபகருங் கிளைவே றியாகமும்
கள்ளவிழ் சோலைக டொறுமறை யவர்கள் கருத்தொடு செயுமகமும்

(௩) மங்கு லொலிகளென வெங்குமுழ ங்கிரத மருவும் மன்னர்கள்தெருவும்
துங்க நிதிகள்குவை குவைகளா விளங்கித் துலங்கும் வணிகர்மருவும்

(௪) ஆகம பாடங்கள் நீங்கிடா துசை வர்கள்வளர் வீதிகளும்
யோக நிலையிலோ வியம்போற் றனையறி வோர்கள்ஸ மாதிகளும்

(௫) பொருந்திய திருப்பழை யாறையில் வணிகர்த போபல னெனவாழும்
காந்தைய ணிபரம னடியவர டிகளைக் கண்டு வணங்கிநாளும்

ஆர்யா

(க) போற்றிசெய் வதில்மனம் வழுவார் பொய்யா கியவாழ் வினோடி னிதுழுவார்
ஆற்றல றம்பொரு ளின்ப மமர்நீ தியால மர்நீதி யெனநம்பும்

(உ) திருநாம வணிகர் நாளுஞ் சிவநாம மதைம றவாத வரை யாளும்
பொருளு டியபுகழ் வல்லார் புயல்நா ணுங்க ருணையாளர் மிகநல்லார்

பதம்இராகம்-கானடா-தாளம்-ஆதி மிசிரகதி

பல்லவி

செய்தார்பெருகியநல் லறமே தினமும் (செய்தார்)

அநுபல்லவி

வெய்தாம் பிறவிகூடி யெய்தாத வழிதேடிச் (செய்தார்)

சரணங்கள்

(க) அடியவர் கட்குமுதை விரும்பியே யூட்டி யவரடிமலர்களைச்
சிரமதிற் சூட்டிச் (செய்தார்)

(உ) நம்பரை மேவிய நம்பர்போல் நாடி
இன்பம்பொ ருந்தும்தொண்ட ரெங்கெனத் தேடிச்
(செய்தார்)

(ங) ஏர்வையு டனேபக்தர்க் கிடுங்கோவ ணங்கீள்
போர்வைக ளைக்கொடுத்துப் புகழ்மிஞ்ச வேதொடுத்துச்
(செய்தார்)

ஸ்வாய்

(க) நித்யமு மிப்படி பக்தியு டன்சிவ பக்தர்க ளுக்கமு தொத்திட நேரே
நத்துல வும்பணை யுற்றநல் லூரில் நடத்தும்வி றாவினி டத்தகு சீரே

(உ) பொங்குமட மொன்ற மைத்தடி யார்க்குப் பொருந்தமு தாக்கி விருந்திட நாடிக்

கங்கைய ணியெங்கள் சங்கர ரன்ப ரலங்கிருத பக்திவி
ளங்கவே தேடி

பதம்-இராகம்-பியாக்-தாளம்-ஆதி

பல்லவி

வந்தாரே யீசர் மலைமகள் நேசர் (வந்தாரே)

அநுபல்லவி

சந்திரகிரண மென விபூதிசாலத் தழைக்கும் படிக்குபிரும
சாரிகள் போல (வந்தாரே)

சரணங்கள்

(க) சடைகாந் தநோர்திரு முடிச்சிகைதொங்க புடைபுரந்
தவுரமுப் புரிநூல லங்க
அடைவுடன் மான்றோலு மதில்முடித் திலங்க வுடையப
வித்ரமா கதவொளி துலங்க (வந்தாரே)

(உ) முஞ்சி யரைஞாணுற வரையினிற் பொருத்தித்
தஞ்ச மறைக்கோவணந் தாழ்த்திடத் திருத்தி
வஞ்சவல் வினைவே ரறுத்திடக் கருத்தில்
மிஞ்ச வுவந்திருதாள் மேதினியி விருத்தி (வந்தாரே)

(ங) கண்டவர் மன நவ நீதம்போ லுருகத்
தொண்ட ரன்புவெளியிற் றோன்றிடப் பெருகத்
தண்டின்மீ திருகோவணந் தருப்பையுந் திருகக்
கொண்டுவந்த மர்நீதியார் கோதின்மடத் திற்குறுக
(வந்தாரே)

ஸ்வாப்

(க) வந்தவ டிவினைக் காண்டலுந் தூய மனத்தினி லும்வத
னம்மலர் வாகிச்
சிந்தைவி ளைந்தெதிர் வந்துவ ணங்கித்தந் தேகம்பு ளகுற
வேமிக்கன் பாகி

(உ) காணக்கி டைத்திடாத் தங்கள்தி ருவடிக் கஞ்சக்க ளிந்தம
டத்தினிற் றோயப்
பூணமுன் செய்தபெ ருந்தவம் யாதோ பொருந்தும்ப
டிவந்த தென்றனர் நேயர்

(ங) வேதிய ருமமர் நீதிய னைநோக்கி மெய்யடி யார்க்கினபஞ்
செய்யவென் றெண்ணிக்
கோதில முதூட்டிக் கந்தைகீ ளுடைகள் கோவண
மீதில்கேட் டும்மிட நண்ணிக்

(ச) காணவந் தோமெனக் கண்ணேநு தலிற்க ரந்தவர் கூறக்
கனிந்தவர் நாடிப்
தோணம றையவ ருண்ணும்ப டிக்குச் சுவைபெற வேதிய
ரட்டனர் கூடி

(ரு) இம்மடத் திலமு துண்டடி யேன்புண்ய மெய்தவைப்
பீரென வேயிசை வாகி
நன்மைபொ ருந்தவொ ருமொழி கூறுவர் நாடைந்தொ
ழில்களி னும்நிருவாகி

ஊர்யா.

மணிதிகழ் பொன்னி யிலாடி—வரும்வே ளையில் ம ழையினால
வதிமூடி
நணியிடில் நனையுமதென்ன—நற்றண் டிலவிழ்த் ததோர்கோ
வணமின்ன

வெண்பா.

இக்கோ வணமகிமை யெய்தியதுன் பால்வைத்துத்
தக்கோய் நதியாடிச் சார்பொழுதி— னிற்காத்தில்
சுவா யெனாநதியி லேகிமூழ் கிக்குறிப்பி
னவனுட னேதிரும்பி னார்.

பதம்-இராகம்-சென்ஸ்ஜுட்டி-தாளம்-சாப்பு

பல்லவி.

ஆடித் திரும்பினார் நீர்வினை யாடித் திரும்பினார்

அநுபல்லவி.

ஊடிப் பிரிந்த மங்கை யைப்பின்னுங் கூடிக் கலந்த
கொள்கை போல் மகிழ்ந் (தாடி)

சரணங்கள்.

(க) வாரி திக்கதி புண்யங் கொடுத்துப் பாரிலுள்ளவர் பாபங்
கெடுத்துச்
சாரு மந்நதிக் குற்றம் விடுத்துச் சீ ருள்திரு மேனியதிற்
றோயவிடுத் (தாடி)

(உ) கோவ ணப்பெரு மையினைக் கூறிக் கொடுத்துப் பூமிசை
தவத்திற் றேறிப்
பூவ ணப்பதங் களையிப் பாரிற் பொருதிக்களி மிகமீறிக்
கருதிப்ரிய மொடு காவிரி (யாடி)

(ந) கொடுத்த கோவணம் பத்ர மென்ன யெடுத்து வைத்தய்ய
ரேக வுஞ்சொன்ன
வடிப்பம் போல்வைக்க மனறத்திட் டுமின்னல் மாரிபொழிய
வேநினைந்து சீரியரதி லேமெயுநனைந் (தாடி)

விருத்தம்.

சென்றமறை யவர்வணிகர் வைத்தகோ வணமறையச் செய்து
பொன்னி
யின்றுறைநீர் படிந்தனரோ சடைக்கரந்த கங்கைநனைத் திடவங்
தாரோ
மின்றிகழ்வான் மழையில்நனைந் துவந்தவர்தண் டத்துறுஞ்செவ்
வியகௌபீனம்

ஈன்றுநனைந் ததுமுனந்தங் கதைத்தாவென் றாதனைப் புதைத்
தார்தாமே.

## வெண்பா.

வேதியராற் றூய விருந்தருக்காக் கிச்சொன்முன
மாதி யடிவணங்கி யய்யர்தந்த—சோதித்
திருக்கோவ ணத்தினைவைத் திட்டதிற்கா ணாதன்
பருக்கோது வார்விற் பனர்.

## பதம் இராகம்-தோடி. தாளம்-ரூபகம்.

வைத்தவிடத் திற்றந்தகோ வணங்காணே னென்றார்

## அநுபல்லவி.

சித்தனுக்கி யாயமர்நீ தியார்நொந்து நின்றார் (வைத்த)

## சரணங்கள்.

(க) மாயையி னாலே மறைத்ததைமேலே நேயரெங்குந்தேடிவித
னித்தொருக் காலே (வைத்த)

(உ) செய்யமனையுறவோ ரிதென்னென்று மயங்க
அய்யரிடம் வழக்கினி லகப்பட்டுத் தியங்க (வைத்க)

(ங) தேவரீர்சொற் போல்பயபத் திரத்தில்வைத் ததையே
ஆவலுடன் வைத்ததிலை யாராய்ந்து மிலையே (வைத்த)

(ச) கோவணத்தி னுக்குங்கள்வன் வருவானோ வென்றே
மேவியெங்குந் தேடிவிசா ரித்துங்காணா தின்றே (வைத்த)

(ரு) பழியைநம்மி டஞ்சமத்தப் பகைவரு மில்லை
யிழிவுவந்த தென்றுபயந் தென்செய்வோமென் றெல்லை.
(வைத்த)

கலித்துறை.

வைத்தவி டத்திலை நீர்தந்த தென்ன மயங்கிமன
தெய்த்தவ ராகிப் பணிந்து பணிந்தெழுந் தேங்கிநிற்க
மெய்த்த மறியைக் கரந்துதண் டேந்திய வேதியர்சொற்
பொய்த்தவ னேயென்செய் தாயென்று கோபச்சொற் போற்
சொல்வரே.

பதம் இராகம்-சுருட்டி தாளம்-ரூபகம்.

பல்லவி.

கள்வன்வந் தானே கோவணத்திற்கும் (கள்வன்)

அநுபல்லவி.

உள்ளநி தியிருக்க உயர்ந்தப ணியிருக்கக்
கொள்ளாம லதைவிட்டுக் குறிப்பாயி தற்குமட்டும்(கள்வன்)

சரணங்கள்.

(க) படித்துப் படித்துக்கூறிக் கொடுத்துப்பு னற்காவிரி
யடுத்துமூ ழ்கிமாரி யடிக்கவே தடுமாறி
நடுக்கிமெய் யாடக் கோவணங்கள்மெய் நனைத்தெங்கு மூட
வருங்கோலத்தைப்
படித்தநீர் கண்டுமுள்ளம் பதைக்கிறீ ரிதற்குள்ளே (கள்வன்)

(உ) மிக்கம கிமைபெற்ற மேன்மைக்கோ வணமென்று
தக்கநி சமுரைத்த தப்பிதம் நம்மேலொன்று
தொக்கிட நாடி வருமுன்னமி தற்கிடந் தேடி யொளித்த
வரார்
மெய்க்கச்சொல் வீர்மதித்து விண்வழி யாக்குதித்துக்
(கள்வன்)

(ங) பயந்தவர் போலமெல்ல நயந்தெமக் கிதஞ்சொல்ல
அயர்ந்துவந் தீரேநல்ல அமர்நீதி யெனவெல்ல

மதுபோற்பேர் வாய்ந்து கபடஞ்செய்வ தறியாமற் சார்ந்து
கொடுத்ததுகா
ணுமலெங் கேபோச்சு பூமியிலு மைமேச்சுக் (கள்வன்)

(ச) கொடுத்தோர்நா பிகையில்லை கொள்ளேயிட் டாரோகல்லை
படிப்பாரென் றெண்ணவில்லைப் பதராம விந்தச்சொல்லைப்
பகரவந் தீரே நன்முச்சுது பகைவரு நேரேயிதுசெய்வாரோ
பாதுகாக் கிறேனென்று சாதுவைப் போற்சொன்னீரே
(கள்வன்)

கேகாவளி

(க) பிரமாத மிருகோ பமாகி யிதுசெப் பமா ஞகார்
உபமா ரகித வற்பமா மென்னிடமின் பமா ரன்புசெய்
(உ) தெனக்க ருள்புரிந் தனைத்து முமதாய் நினைக்குஞ் செய
வினைத்த முவுமென் மனத்தி டர்களைந் தினித்தன் புரீர்

வெண்பா

நேய மிருத்தவமர் நீதியார் மெய்மறந்து
தாயகமா வின்பவுரை சாற்றியே--தூயமலர்ப்
பங்கே ருகச்சரண்கை பற்றிப் பிடித்தன்ப
ரங்கி துரைசெய்வ ரால்

பதம்-இராகம்-இந்துஸ்தானி-காபி-தாளம்-ஆதி

பல்லவி

குற்றம்பொறுப் பீ ரென்முர் கற்றவேதியர் முன்னே நின்முர்

அநுபல்லவி

சுற்றமுமற்ற மிகவே தெரியாத தன்மையுளேன் வன்மமிலேன்
உண்மைக் (குற்றம்)

சரணங்கள்

(க) மெய்மறைக்க மேவிய பொய்சொல்லாத மேதாவியே
கையிலேகை கூக்குவித்துக் கலங்கிப் பாத வித்துக் (குற்றம்)

(உ) நேரினிற் றேனு மலே யாருங்கண்ணிற் காணுமலே
சீரின்வைத்த துமா யாவி சித்ரமறைத் திட்டது போனுற்ற
(குற்றம்)

(ங) வஞ்சர்கள்முன் னேநில்லேன் றுஞ்சநேரி னும்பொய்
சொல்லேன்
*அஞ்சுதலை யையு டையேற் §காறுதலை கூறியே யென்மேல்
(குற்றம்)

ஆர்யா

கவச மௌனமான மூடக் கண்களி னீர்பெரு கியேமெய் யதிலோட
அவச மமர்நீதி யாரே அய்யரி டத்தின மூமேயு ரைசெய்வாரே

ஸவாய்

மஞ்சுள வேதியர் செஞ்சரணங்களை யஞ்சலி செய்துந யஞ்சொல்
வர் நாடி
நெஞ்சினிற் சற்றேனும் வஞ்சமி லேனென்னை யுஞ்சகிப்
பீரெனக் கெஞ்சுவர்வாடி

(உ) நூதன வஸ்திரம்பு-ராதன நற்பணி-யாதன மும்பெறு-
மாதன நன்றூர்
ஸாதனம் வேண்டுவ-தேதேனும் நல்குவன்-வேதனு
மொப்பிலா வேதிய வென்றூர்..

விருத்தம்.

‡ஏணிகையிற் பிடித்தேறு பரிக்கள்வர் பதியினிய யியம்பக் கேட்டு
வாணிபநன் றூச்சுதென-வெகுண்டடக்கி யவர்போல-மதித்து
நல்கும்

---

* அஞ்சுதலை—பயப்படுந்தன்மையை § ஆறுதலை—தேற்றுதலை.

‡ ஏணி-மானையுடையவர், கையிற்பிடித்து-கையால் பிடித்துக்கொண்டு ஏறுபரி-இடபத்தைக்குதிரையாகநடத்தும் -கள்வர்பதி-அறுவைரிகளை-யழுக்கும்நாசயகன். மற்றொருதொன்யர்த்தம். ஏணியைக்கையில்கொண்டு-ஏறுபரிக்கள்வர்-ஏறும்படியான. உபரி-மேலானகள்வர்களுக்குப்பதி.

சேணுறுங்கோ வணத்திடைதந் திடுமனத்தோ திலையெனக்கோத்
திடுந்தண்டத்தின்
பூணுறுங்கோ வணத்திடைநல் குமென்று ரன்பருங்கையிற்
கொடுமென்றார் தாமே.

கலித்துறை.

மாசிட் டருமவிழ்த் துக்கொடுக் கக்கையில் வாங்கியன்பர்
பேசிட் டருமகிழ் வாகிச் சிரம்வைத்துப் பெற்றிபெறுங்
காசிட் டரிய பெருந்துலை நட்டிரு கண்ணினுந்த
ராசிட் டதில்வைத்துத் தூக்கினர் போற மாக்கினரே.

பதம்-இராகம்-பைரவி-தாளம்-திரிபுடை.

பல்லவி.

வேதியர் கோ வணந்தன்னை யோர்தட்டில் வைக்க வன்பர்
மாதட்டு மீதெட் டியதே யெல்லாந்தெரிந்திடும் (வேதியர்)

அநுபல்லவி.

பூத லத்திலன் பரை மேதக வாக்கித் தாழும்
பொறுமைகாட் டியது போ லருமைத் தொண்டரை யாளும்
வரகிருபாளு (வேதியர்)

சரணங்கள்.

(க) பக்தர்கட் கென்னத் தனி வைத்தகோ வணங் களை
மெத்தத் தாராசிலிட்டு மேலெழுந் ததைத் தொட்டு
¶அத்தர்க்கு ளகப் பட்டு *அத்தத்தி ழையார்பட்டு
வத்திரத்தையொரு மித்து வைக்கமெத்த மெத்த வுயரப்
பிரமித்த கங்களைத் தினைத்து (வேதியர்)

(உ) என்னமா யமி தென்னப் பின்னுந் துகிற்பொ திகள்
வன்னம் வன்னமா யேற்ற வணிகர்த மையேமாற்றப்
பின்னுமு யர்ந்து காட்டப் பேரிசை நிலைநாட்டச்

¶ அத்தர்-ஈசன். * அத்தம்-பொன்

சொன்னப் பணிகளைப் பின்னும் வைப்போமெனத்
துணிந்தய் யாடியைப் பணிந்தெ ழுந்து கனிந்து (வேதி)

(௩) ஆகிலுந் தா மல்ல ஆனால்வைப் பீரென்ன
அணியும்ப ணியுந் துய்ய மணியுஞ் செம் பொனு மின்ன
வேருவித் துப்பற் ருது லோகங்க ளையுஞ்சொன்ன
விவரப் படிக்கிட்டு முயரப் படிக்கட்டில்
வெளுப்பு றுங்கோவண மிழுப்ப மனமுந் தவிப்ப (வேதி)

சந்த விருத்தம்.

இதுபுதுமை யெனநகரு ளெவருமதி சயமுறமெய் யெழில்
வணிகர் துகில்பணிகள் மிகுலோக
மதுகளையு மிடவுயா மனதில்மிகு கவலையொடு மறுகிய யரிணை
யடிகள் பணியாமுன்
நிதிபுதிய நிதியிவள வினியென்மனை மகவொடுச நிதிமுனிடுமகி
மைபெறுதுலையேறக்
கதுமெனவ ருளுமெனந லதுவெனவி சையமனது கனியமன
மகிழ்வொடிது புகல்வாரே

பதம். இராகம்-சென்ஸுருட்டி-தாளம்-ஆதி

பல்லவி.

அருந்துலை யேறினார் அமர்நீதி நாயனார் (அருத்துலை)

அநுபல்லவி.

பொருந்து மீசர் கூறிட யிருந்துயா மாறிடப்
புன்பிறவி மாறிட யின்ப மூறிட (அருந்துலை)

சரணங்கள்.

(௧) மறையவ ரடியில் வீழ்ந்துமே வணங்கிமுடி தாழ்ந்துமே
மைந்தன்மனை தானேர்ந்துமே சிந்தைகளி கூர்ந்து மே
(அருந்துலை)

(௨) ஈசர் திருவிபூதி மேல் எனதன்பு மீறுமேல்
மாசில்துலை சரியிட்டு வருமெனவே பேசிட் (டருந்துலை)

(௩) பஞ்சாட் சரத்தை யெண்ணியே பரமனை யுன்னியே
வஞ்சமில்பக் தியுமீற மனங்களி கூற (வருந்துலே)

(௪) தனிக்கோ வணமுந் தொண்டுமே சரியெனக் கொண்டுமே
தட்டிரண்டுஞ் சரியாக தொட்டது குறியாக (அருந்துலே)

(௫) தொண்டர் பெருமை மீறவே கண்டோர்புகழ் கூறவே
அண்டர்மலர்மா ரிதூறவே அருஞ்ஜன்மங்கரையேறவே ()

கலித்துறை.

தட்டிரண் டுஞ்சரி யாக வருமந் தணர்மறைந்து
மட்டிரு கோட்டு விடைமீ துமையொடும் வான்விளங்கக்
கொட்டிரு கண்க ளிமையாது கைகளைக் கூப்பிமறை
யெட்டித் துதித்து முடியா ததைத்துதித் தேத்தினரே.

கட்கா

இமா சல்வரஸு குமா ரிரமணநி கமா
தியுமதும கிமா வையுரை செய்த
ரமா வெனிலெனில்வ சமா சொலிடமுடி
யுமா கருணை பொழி
ஸமா னரகிதமு கமா வொடிசைபெறு குமா
ரஜனகபு ரமா ளசனையும தமா கநகைநய
நமா ரனலேயிடு ரமார் வர விண்ணவர்
விமா நிதஹாஹ ரமா தயையொடெனே
யுமனத் தினில்வைத் தாய் அடி யவ ரொடுமொரு
வனெ னவு நட்புற மெய்த்தாய்.

விருத்தம்.

ஞாலத்தில் போன்பர் தவமகிமை தனைநிறுத்து நண்பிறகூட்டு
மேலத்தர் மகிழ்ந்துநம துலகீந்தோம் செண்மினென விளங்கு [முன்னோர்
கோலத்திற் றிருநல்லூர்ப் பாமர்புக்க வன்பர்மனைக் குமர [னேடுஞ்
சாலத்த ராசுவிமா னத்தூற்று வடகையிலே சார்ந்தார் மாதோ.

தோட்டு.

பாலய பக்தம நோலய நித்யகிரு பாலய மாமக ராலய நேர்
வேலையு லாவுற மேவிடு பாலக ஞுலப தேசக பாலதரா
மாலய நாடு மேலய்ய நீடு மாகையி லாஸம கேசசி வா,
மாதுமை பாக நாதவ நேக மாதய வாகவென் மீதருள் வாய்.

அமர்நீதி நாயனூர் சரித்திரம்
முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸாகி அல்லது லாவணி | 1 | சந்த விருத்தம் | 1 | கேகாவளி | 1 |
| ஆர்யா | 3 | விருத்தம் | 3 | பதம் | 8 |
| தோட்டு | 1 | கலித்துறை | 3 | ஸவாய் | 2 |
| கட்கா | 1 | | | | |

வெண்பா 3 ஆ உருப்படிகள் 27.

ஆ சரித்திரம் 8-க்கு உருப்படிகள் 203.



உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# (9) *எறிபத்த நாயனூர் சரித்திரம்.

லாவணி இராகம்—இந்துஸ்தானி காபிதாளம்—ஆதி.
கண்ணிகள். ஸாகியாகவும் பாடலாம்.

(க) திருமரு வியகா விரிநதி பாயச் செழிக்கும் பணையில் நாளும்
மருவளர் செநெல்பசு மணிகொழித் திடவிண்ண மார்பதி
[யெனச்சூழும்

(உ) மாடகூ டங்களுப்ப ரிகையிடை யினிற்சூல் மஞ்சுது
[கில்போலுறையும்
ஆடரம் பைம்பையர்கள் நிறைபோன் மணிக்கொடிகள்
[அசைந்து மெத்தைமேனிறையும்

(௩) கரிகள் துறையில்மா மயில்கள் புறவிலரங் கத்தில் மின்ன
[ராடும்
நெறிகுழல் களில்வண் டாடும ணியொளிதண் ணிலவிநெ
[ளிபோலாடும்

(௪) பொன்னு டியமலே போல்புய ளு பயன்மா போர்க ளாருஞ்
[சீரார்
என்னு ளும்வளமை பெருகுந திநிதிக ளேதிகழ் கருவூரார்

(௫) ஆனிலே யெனும்பி தானச் சினகாத்தி னமைந்திடு
[மைக்கண்டர்
பானினே வகலாப் பத்தி புரியுமெறி பத்தரெ னுமெய்த்
[தொண்டர்

(௬) ஈசா டியவர்கட் கிடரியற் றுமவரை யேபுலி யெனப்பாய்
[வார்
மாசில் மறைபாசு பரசெடுத் தெறிந்து வன்கனல் போற்
[காய்வார்.

வெண்பா.

இத்தகையா ண்ண லினிது செயுநாளிற்
பத்திபுரியன் பருக்குளுயர்—சித்திபெறும்
ஏதச் சிவகாமி யாண்டார்நம் பீசர்பிர
சாதப் பணிவிடைசெய் தார்.

பதம். இராகம்—பூரிகல்யாணி. தாளம்—ஆதி.

பல்லவி.

ஈசருக் கன்பார் தொண்டேபுரிந் தாரே (ஈசருக்)

அநுபல்லவி.

காசினி புகழ்சிவ காமியாண் டாரே நேரே (ஈசருக்)

சரணங்கள்.

(க) கதிருதிக் குழுன்மூழ்கிக் கனிந்துவி பூதி
கடாட்சமி குந்தருத் திராட்ச மணிந்துஜோதி (யீசருக்)

(உ) நித்தியானுஷ் டானஞ்செய்து பக்தியாய் நாடித்த
னிப்பார் செ பிப்பாரென னப்பாரி டமுவப்பார் (ஈசருக்)

(ங) வாய்கட்டி யேநந்தா வனத்தினுட் சென் றுநல
வாஸித ஜாதிரோ ஜாதிதொ டுத்த ஞதி (யீசருக்)

(ச) கொண்டை மாலை யிண்டை சாணிலை யங்கி
குறித்துத் தொடுத்துக் கொடுத்துக் கதியையடுத் (தீசருக்)

ஸ்வாய்.

(க) சந்தத மிப்படிக் கெந்தைம கிழ்தோண்டைச்
சிந்தைம கிழ்ந்துசெ யும்பொழு தோர்நாள்
நந்தவ னத்திற்பு குந்தும லரெடுத்
துந்தனிக் கூடைநி றைந்திட வன்னுள்

(உ) கைத்தண்டத் தங்குசத் திற்புனைந் தன்பொடு
காலையிற் சாற்றவென் றேவிரை வாக
மெய்த்தொண்டர் செல்லவி வைநிற்க வன்னகர்
மேவும்பு கழ்ச்சோழ ஞர்மகிழ் வாக

(ங) வட்ட வுலகினிற் செற்றவ ரைவெல்லும்
பட்டவர்த் தனத்தைப் பாகருங் கொண்டே
இஷ்டமு டன்மாந வமிமுன் னட்பல்
வியமுழங் கநதி நீராட்டி யன்றே

(ச) செழிக்கவ லங்கரித் தேவம தங்கொள்
செயல்கண் டியாவரு மோட வெறிக்க
வழிச்செல் சிவகாமி யார்முன்சென் றேகொடு
வன்கையாற் பூக்கூடை தன்னைப்ப றிக்க.

விருத்தம்.

பறித்தவுட னிறைகூடை மலர்சிதற மேற்கொண்ட பாகர்நாடி
வெறித்திடும்மால் யானைமிசை கால்கொண்டு போவார்போல்
விரைவிற்போகக்
குறித்திடுந்தொண் டரும்பதைத்துத் தந்தியின்பின் றொடர்ந்
தடிக்கக் கூடிவந்தார்
முறித்துச்சென் றிடமூப்பாற் செலமாட்டா தாங்குநின்று
மொழிந்தார்தாமே.

பதம். இராகம்—சென்ஸ்ஜ-ட்டி தாளம்—ஆதி.

பல்லவி.

சிவதா சிவதா பவதா ரணபரம (சிவதா)

அநுபல்லவி.

தவதா ரகப்பிரும ஸத்குரு வேஸதா (சிவதா)

சரணங்கள்.

(க) தந்தியு ரித்துப்போர்த்த யெந்தாயெ ளியோர்வலி
தாஞகி யன்பாறி வானதெள் ளமுதே சதா (சிவதா)

(உ) தண்மதிக் கங்கைபுனை யுஞ்சடை யே றுமலரை
யெண்ணிக்க ரிசிதற வெண்ணுமோ புரமட்ட (சிவதா)

(ங) தஞ்சமென வேகம்புந் தனையனுக் காகக்கரு
மஞ்சனைய மேனியின் மறலியை யட்ட ஸதா (சிவதா)

விருத்தம்.

என்றுரைத்த மொழிகேட்டங் கெறிபத்தர்
தொண்டர்முன மெய்திமூளுங்
கன்றுமன லெனப்பொங்கி யானடியார்
வழிப்பகைகைக் களிறேயென்றே
கொன்றதைவீழ்ப் பனெனமழு
வெடுத்ததிவி னைவிற்சென்று கொற்றத்தந்தி

சென்றவழி நோக்கிக்கண்ட டர்த்தார்
கெம்பீரமனத் திடத்தார் தாமே.

பதம். இராகம்—பூரிகல்யாணி. தாளம்—ஆதி.

லாலனமன என்ற இந்துஸ்தானிபோல்.

பல்லவி.

மா மதகரி யதனையே வீழ்த்தார் (மாம)

அநுபல்லவி.

(ஈசர்) மலரடி களில்முடி தாழ்த்தார் (மாமதகரி)

சரணங்கள்.

(க) எங்குசெல்கி றுயென யெதிர்ந்துபுலி போலப்பாய்ந்து
பொங்குகனல் போற்கிளம்பிக் காய்ந்து (மாமதகரி)

(உ) கண்டவுடன் வெங்கனற் கட் கரி சீறிப் பதறக்
கொண்டவெறி யோடெதிர்க்கக் கோப (மாமதகரி)

(ங) ஈசர்முன்னு ரித்தவேழ மெய்தியுயிர் பெற்றுவந்த
தோஜலதி மூழ்குநாக மோ வெனு (மாமதகரி)

(ச) * துதிக்கைபெ றுமலரை மதிக்கை யிலா மற் சிதறுந்
o துதிக்கை துண்டுபடவே வீட்டி (மாமதகரி)

(ரு) பாகாங்கு சத்தைநிமிர்த் தேசடிதி யிற்சுழன்று
பம்பரம்போ லச்சூரை யாடு (மாமதகரி)

விருத்தம்.

படபடென வுடனங்கிக் கடலெனக்க தறிமலைபோற்
பாய்ந்துவீழ
வடமுறவைம் புலப்பகையை
வென்றூர்க ளிற்றின்மே லமர்ந்து தாண்டும்

---

* துதிக்கை—தோத்திரஞ் செய்கை. o துதிக்கை—தும்பிக்கை.

திடமுடைப்பா கர்களிரு வர் கோற்காரர்
மூவர்களைச் சினத்தில் வீட்டிக்
கடவுள்ருத்தி ராங்கிசமாய் நிமிர்ந்தார்கைப்
பரசொடுமங் கமர்ந்தார் தாமே.

ஆர்யா.

(க) கண்டவ ருள்ளமும் வாடிக்—கால்போ லோடி யாண்வாயில்
தனைநாடி
மண்டிய காவலர் நேரே—மனநொந் துநடந் ததிதெ
னைவாரே

(உ) சொற்றவு டன்விரை வாகச்—சோளேந் த்ரவரம ஹரா
ஜனதிவேக
முற்றாண் வாயிலில் வந்தான்—முதிர்கோ பமதா லுமே
விழிசிவந்தான்.

கலித்துறை.

இதியா வாற்செய் தரிதன்னவி சாரித் திடாதுநிற்க
மதியூக தந்திரத் தின்முத லோர்வள வன்னிலைகண்
டதிவேகத் தோடு சதுரங்க சன்னத்த ராகிநிற்கக்
கதிர்வேல னென்ன வெழுந்தான் சௌியர்சி காமணியே.

பதம். இராகம்—ஆரபி. தாளம்—ஆதி.

பல்லவி.

சினத் தொடு மெழுந் தானே சென்னிய னதி (சினத்தொடு)

அநுபல்லவி.

கனத்தக னகமக மேருவ னேகமென—வனத்தி லுயரிர தங்கொடி
கள்நிறைய—மனத்தி டைமிகுக யங்க ளொடுவிரைய(சினத்தொடு)

சரணங்கள்.

(க) வாரி யலைகளின் வாவி வருதுரக—மனேகங் கள்சு
வாரி யிடமதில் நேர்குடை களுமுரக—மெனச்சினந்து

நேரு மருவலரை யடர்த்தி டுமதி கூரிய பகழிகள்
நிரப்பிடுமிகு
நெட்டுறுதூணி ரஞ்சர்ந்தமுதுகு றக்கட்டியமா
வீரங்கொண்டவர் மருவச் (சினத்தொடு)

(உ) காங்க ளினிலயில் சிலைமழு வதிவேக—பிண்டிபா லத்தோ
மரங்கள் முசலம் வளைகமு வசியுமாகக்—கழல்களைப்பூண்
டுரங்கொள் பேரிகை சங்கொடு தாரைகள்
மருங்கு சூழ்துடி பம்பைகள் தூரிய
மொத்ததிர்ந் திட முழங்க வுயரண்ட பித்தியின்செ
விடுமண்ட
மிகவேகொண்ட (சினத்தொடு)

(௩) மாலின் மணிகள்க ணீரிட மகியதிர—நடத்தங்குசத்
தால்வெரு விடுபிளி றிடமுகில்கிதிர—சங்கங்கள்போல
வாவுப ரிகளறு மானிதமுற வழி—மேவுறு சைனிய மேலிடு
மொலிகள்மி
குந்தகடலெனமு ழங்கவதநடு வெழுந்தகதிரெனந
லங்கொள் பரியின்மிசை (சினத்தொடு)

விருத்தம்.

கடுவிசைகொண் டெழுந்தரச வீதிவழி சென்றடுபா கரொடுதந்தி
படுகளத்திற் குறுகிட்ட பகைவரைக்கா ணுனிருகைப்
படுவேழத்தைத்
தொடுபரிசி னெடுங்கண்டான் நடராஜ னடிபரவு தொண்டரிந்தக்
கொடுவினைசெய் யாரெனவே யயிர்த்திடச்சூழ் பாகரிது
கூறுவாரே.

வெண்பா.

பாரா ளரசேசின் பட்டவர்த்த னத்திடத்து
நோராய்ப் பகைவரெவர் நிற்கவல்லார்—ஆராயுங்
காலிப் பாசரிந்தக் கைமலைக்குத் தீங்குசெய்தார்
மேலிதிற்சந் தேக மிலை.

கலித்துறை.

* என்னச்சங் கக்குழை யாரன்பர் நற்குணத் தின்னியல்பார்
† மன்னச்சங் கொள்ளப் புரிபிழை கண்டன்றிவ் வாறியற்றூர்
‡ வன்னச்சங் கச்சது ரங்கத்தி னைக்கை யமர்த்திநிச
§ மின்னச்சங் கக்குரல் வாம்பரி நின்று மிழிந்தனனே.

இராகம்—சென்ஸ்ஜஞட்டி. தாளம்—ரூபகம்.

கண்ணிகள்

(க) வன்னப் பரிவிட் டிறங்கி வளவன் மன்னன் விதனித்தான் —உழை
தன்னிற் சூழ்வோரை யும்நிறுவினன் தானே கவனித்தான் —இந்த

(உ) மைக்குன் றனைய மொய்ம்பு டையவிம் மதக ரியின் முன்னே—பத்
திக்குன் றனையர் புக்குந் தோறும் தீங்கிலா தின்னே—யெனத்

(ங) தவமு டையவ னுக்கி னுரெனத் தனகத் தெண்ணினன் —இந்தப்
புவனத் தரசர் கரமிட் டிடுமெய்ப் புகழை நண்ணினன்

(ச) பக்தர் கள்சிரோ மணிய ரசனன் பரிடம் நாடினன்—நல்
சித்தங் கனிந்து திருவ டிகளைச் சிரத்திற் சூடினன்.

வெண்பா.

பணிந்தெழுந்து மெய்யன் பரேதந்தி க்கையைத்
துணிந்திடவும் பாகர்துடித்துத்—தணிந்துபட
வீழ்ந்ததுவும் வந்த விதம்சொன்மி னென்ன வன்பர்
ஆழ்ந்தி தனையுரைப்ப ரால்.

---

* என்னச்சங்கக்குழை—என்று சொல்லச் சங்கென்னும் பூடைக்காதி லணிந்த. † மன் அச்சம்கொள—அரசன் பயத்தையடைய. ‡ வன்ன,,ா சங்கச், சதுரங்க—அழகிய கூட்டத்தோடு கூடின, ரத, கஜ, துச்த் பதாதி. § மின்னச் சங்கக் குரல்—பிரகாசமானவும், சங்கையொகத் தொனியுமுள்ள சத்தம் பொருந்திய.

பதம். இராகம்—சென்ஸ்ஜுட்டி. தாளம்—ரூபகம்.

பல்லவி.

நடந்தசங் கதியே நவில்கிறேன் பதியே

அநுபல்லவி.

திடம்பெறு தந்திசெய்த தீங்காலித் ததியே (நடந்த)

சரணங்கள்.

(க) காலை வேளையிற்சிவ காமியாண் டாரே
ஏலவீ சர்க்குமல ரெடுத்தெய்த நேரே (நடந்த)

(உ) பள்ளித்தா மக்கூடையைப் பறித்து வந்தாரே
தள்ளித்தந் திபறித்துச் சதித்ததிவ் வாறே (நடந்த)

(ங) சகித்தி டாமலாண்டார் தவித்திடக் கண்டேன்
தகிக்குமக் கினிபோலத் தான்சினங் கொண்டேன் (நடந்த)

(ச) பதித்தகை யைக்கையின் பரசுவாற் றுணித்தேன்
குறித்திடாப் பாகரையுங் கொன்றுசி னந்தணித்தேன் (நட)

சந்தவிருத்தம்.

இதுசொற்ற தனைமுற்று முணர்வுற்ற வளவத்தி
னிறைசிட்ட னெறிபத்த ரெனநாடியே
மதுவுற்ற கமலத்தி ணையெனச்சொல் பதனைப்பொன்
மகுடச்சி ரமதுற்றி டவேசூடியே
விதுவொப்பு வதனப்ர பைசொலிக்க வுறைவிட்டு
மிளிர்கட்க மதனைக்கை கொடுநீடியே
அதிகைக்கொ டெனைவெட்டி விடுமிப்பி ழைபொறுக்கு
மடுமொக்கு மெனமெய்ச்சொல் புகல்வானரோ.

இராகம்—ஆனந்தபயிரவி. தாளம்—ஆதி.

கண்ணிகள்.

(க) பக்தியி னுற்சிறந் தோரே பாவிசெய்பி ழைக்குநேரே
கத்தியினு லெனைத்துண்டு கண்டுகொள் வீரே

(உ) தந்தி பாகர் செய்த தீதுக் கிந்தத்தண்டனைபோதாது
தமியேனையுஞ்சேர்க்கில் நன்ருய்த் தகுமென்றிப் போது

(ங) வந்ததொண்டர் மெய்பதறக் கந்தமல ருஞ்சிதற
மறித்துப்ப றித்ததந்தி யால்மயங் கிக்கதற

(ச) இந்தவினைக் கெல்லாநானே யேதுவாக விருந்தேனே
எந்தைசிவா பாரதத்துக் கிடோ அடியேனே

(ரு) தந்தியால்ம லர்க்குடலைச் சிந்தவீழ்ந்த தற்குடலைத்
தானேவெட்டி விட்டாற்றீருந் தண்ணளி க்கடலே

ஸ்வாய்.

(க) மெய்யுரு கித்தொண்டர் கையினில் மன்னன்
விதிர்த்திடும் வாளைக் கொடுத்திட வாங்கிச்
செய்ய வளவன் றிடமுறும் பக்தி
தெரியாது கெட்டே னெனவன்ப ரேங்கி

(உ) வாங்கிய வாளினைத் தாங்குமெ றிபத்தர்
மாவள வன்பக்திக் கஞ்சின ராகத்
தீங்குபு ரிந்தது தாமெனக் கண்டத்திற்
றீட்டுறும் வாளினைப் பூட்டினர் நோக.

ஆர்யா.

கண்டு நடுங்கின னாகக்—கடிகா விரிநாட னுடி விரைவாகத்
தொண்டர்புயத்தைய றக்கத்—தொடுவார் காவாள மேன ழுவி
வாங்கிடு மன்பரு மடைவே—மதிசோர்ந் துளம்வா டிநாடி [நிற்க நின்றிடவே
ஓங்கி யுமேவெள்ளி டையே—யுயர்சொல் லுமெழுந்த தேய தன்புடையே

பதம். இராகம்—வஸந்தா. தாளம்—ஆதி.

பல்லவி.

திருவாக் கெழுந்த துவே ஆகாயத்தில் (திருவாக்)

அநுபல்லவி.

மருவாய்த் திடுங்கொன்றை மலர்சூ டியருள்செய் யத் (திருவாக்)

சரணங்கள்.

(க) கண்ணுதல ருள்புரியக் கதிக்குமுன் தொண்டுதெரியத்
திண்ணியக ரியால்மலர் சிதறியதென் றுபெரிய (திருவாக்)

(உ) மண்ணடிய வர்களகம் வெண்ணையென வேயுருக
வெண்ணும்வ ளவன்பக்தர்கண் ணினிதாநந்த நீர்பெருகத் ()

(ங) மத்தகய மும்பாகரு மொத்துயிர்பி ழைத்தபீஷ்ட
பத்தர்கட்கு முத்திநிலைச் சித்தியினை நிலைகாட்டத் (திருவாக்)

விருத்தம்.

திருவாக்கங் கெழுந்திடவே யெறிபத்தர் வளவர்கோன்
திருத்தாள்வீழ்கத்
தருவாய்க்குங்கரதலத்தான் எறிபத்த ரடிவீழ்கத் தாமெழுந்து
மருவாய்க்கும் பேரொலியை வணங்கியிரு வரும்போற்ற
வானோர்விண்ணைப்
பொருவாக்கும் படிமலர்தூற் றிடவன்ப ரிருவருமெய்
புளகுற்றாரே.

பஞ்சசாமரம்.

(க) குன்ற வில்லி யருள்செய் திடத்தண் கூடை நிறைந்த
மலரினோ
டன்றுள் மகிழ்ந்தி டச்சிவகாமி யாண்டா ரொழுந்தங்
கிவரினோ

(உ) டணுகி நிற்க முகிலை யொப்ப யானை பிளிரிட் டெழுந்தவே
துணிவு றம்பாகர் கோற்கா ரரொடுந் துரைதாள் வணங்கி
விழுந்தவே

(ங) கண்டு மன்னன் மகிழச் சேனை கடல்போ லப்பொங்
கிக்கலிக்கவே

யெண்ட ருமுரா சங்கள் முழங்கி யிடிக்கு மூகில்போ
லொலிக்கவே

(ச) பத்த ராசன் றனைக்கும் பிட்டி பத்தி லேறிக் கண்களிக்கவே
இத்த கையுடன் பவனிவருக வெனவி சைந்தின்பங்
குளிக்கவே

வெண்பா.

மைநாக மீதில் மருவுஞ் செழுங்கதிர்போல்
கைநாகத் தாரோ கணித்திடவே—பைநாகந்
தாங்க வுடனெளிக்கத் தார்வேந்த னுள்ளமகிழ்ந்
தாங்கு பவனியெழுந் தான்.

பதம். இராகம்—கரகரப்பிரியா. தாளம்—ஆதி.

பல்லவி.

பவனி வந்தான்புவிக் கீசன் சிவ பக்தி மிகுத்த சோள மகாராஜன்
(பவனி)

அநுபல்லவி.

தவமிகு பாரிற் றழைக்குமு தாரி சங்கார் கிங்கர் களுக்குபகாரி
சைல நிகர்த்ததந்திப் பிடரேறிப் (பவனி)

சரணங்கள்.

(க) எழுகட லுந்திரண்டாற் போலே—சேனை—யெங்கினும் பொங்கி
வர மேன்மேலே தழுவியோசாடச்சாய்மரை போட
சந்திரவட் டக்கவிகை தண்ணிழ லாடத்
தாசிக ளரம்பை போல்நடமாடப் (பவனி)

(உ) நடராஜர் திருவரு ளுடி—நளினப்பதவிணை களைமுடிசூடித்
திடபக்தி கூடிச்—செழுத்திடநீடிச்
சிவகாமி யாண்டார் பக்தி தனையுங்கொண் டாடிச்
செய்ய தொண் டர்க்குப் பெரு மையைத்தேடிப் (பவனி)

(ந) நம்பிய தொண்டர்களின் சீரே—நட—ராஜனறி யறிய யெவர்
யம்புவி போற்ற வவிர்மலர் தூற்ற [நேரே
அன்புட னெறிபத்த நகமகிழ்ந் தேற்ற
ஆண்டர்நாய கனென வேதோற்றப் (பவனி)

விருத்தம்.

* பெரும்பவனி வந்துமணித் திருக்கோயிற்
புகுந்துசிங்கப் பிடாற் றூங்கி
† விரும்பவனி யாசர்பணி யாதனத்திற்
பாநுகுல வேந்தன் பத்திக்
‡ கரும்பவனி தயமகிழ்ந்துற் றுலகமெலாங்
காக்கவன்பர் களைக்காத் ○ தின்பந்
தரும்பவனின் னயவுலகை யெறிபத்தர்
காணியெனச் சார்ந்தார் தாமே.

எறிபத்த நாயனார் சரித்திரம்

முற்றுற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெண்பா | 4 | பதம் | 7 | ஆர்யா | 2 |
| கலித்துறை | 2 | பஞ்சசாமரம் | 1 | ஆ. உருப்படிகள் | 28 |
| விருத்தம் | 6 | கண்ணிகள் | 3 | | |
| சந்தவிருத்தம் | 1 | ஸவாய் | 2 | | |

ஆ. சரித்திரங்கள் 9-க்கு உருப்படிகள் 231.



* பெரும்பவனிவந்து—பெரிதாகிய நகர்வலம் வந்து. † விரும்பு, அவநி, யாசர்—விரும்பத்தக்க, பூமியையாளக்கூடிய வேந்தர்கள். ‡ பத்திக், கரும்பவன், இதயமகிழ்ந்து—பக்திக்கரும்புபோல் இனிமையான, இதயத்தோடு, மகிழ்ச்சி பொருந்தி. ○ இன்பந்தரும், பவன், நின்னய வுலகை—இன்பத்தைக் கொடுக்கும்படியான வீசனுடைய நிர்ணயமான வுலகை, அதாவது கைலயங்கிரியை எனக் கருத்து.

கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# (10) † ஏனாதிநாத நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்—இந்துஸ்தானிகாபி. தாளம்—ஆதி.
ஸாகியாகவும் பாடலாம்.

கண்ணிகள்.

(க) பொன்வரை யினில்புண்ட ரீகக் கொடிநிறுத்திப் பூவுல
கினையளிக்கும்
தன்னிக ரில்தாள வெண்கவி கைநிழற்றத் தார்புனைந்
துமெக் களிக்கும்

(உ) வளவர் பரம்பரைகள் விளங்குஞ்சோ ணாட்டினில்
வண்டறை பூஞ்சோலை
வளமிகும் மருதத்தண் பணைசூ ழெயினனூரின் மகிமைக்
கிணையோ வேலை

(ங) வேழைக் கரும்புமென்க ரும்பினுஞ் செந்நெலோங்கி
விளங்கும் வளத்தை நோ
வாழைக்கு டிதழைத்து மன்னிய வப்பதியில் மருவிவந்
தனர்தீரர்

(ச) ஈழக்கு லஞ்சிறக்க வந்தவ தரித்திடு மேனாதி நாதனார்
சூழத்தொண் டர்கட்கென்றும் உபசரிக் கநினைப்பார்
ஸகுணர் பக்திவி நோதனார்

பதம். இராகம்—ஹரிகாம்போதி. தாளம்—ஆதி.
ஸநிதோடித்தேவே என்பதுபோல

பல்லவி.

உப சரித்தாரே தொண்டரை (யுபசரி)

அநுபல்லவி.

சுபசரி தப்பிரக் யாதர் சுகுணரே ஞதிநாதர் (உபசரி)

சரணங்கள்.

(க) மன்னற்கு வென்றி வடி வாட்படைப யிற்றும்படி
நன்னயத் தொழிலிற்கொடி காட்டுமவ ரடிக்கடி (உபசரி)

(உ) தொன்மையாந் திருநீற்றுத் தொண்டின்வழி பாட்டி
லேற்றும்
நன்மைதவ ருது சாற்றும் நலம்பெறவே யென்றும்
நோற்றும் (உபசரி)

(ங) வாட்படைப யிற்றிவந்த வளந்தனையெல் லாம்பொருந்தத்
தாட்டிகர்தொண் டர்க்குகந்த தன்மையோடாக் கித்திருந்த

(ச) அதிதிகளைத் தேடித் தேடி அவர்களைக்கண் டுகொண்டாடிப்
புதியவமு தெனநாடிப் பொருந்தமுத மீன்றுங் கூடி (உப)

விருத்தம்.

எத்தினமு மிவ்வாறு தொண்டுசெய்யு
மியல்புடனிவ் வடியார்களி லங்கிநாளும்
சத்துருக்கு மூழுமிவர் தம்மையேற்றும்
தன்மையினிலமர்ந்து நின்று மொழுகுநாளில்
சத்தியமில் லாதபக்தி நெறியில்லாத தானென்ற
வகந்தைகொண்ட சூரனென்ற
பித்தனிந்த வடியார்போல் வாள்பயிற்றும்
பெருந்தொழிலில் தாயாத ஞகினனே.

வெண்பா.

சூரனென்ற தீயோன் சுகுண ரடியவர்முன்
நேரில்நின்று வாட்பயிற்றி நிற்கவொணு—நீர்மையினல்
ஏனுதி நாதர்புக ழேற்றமுற வேசகியா
னவவ னேயிகலா னன்.

ஆரியா.

ஆதவி ஞலடி யாரை—யமர்செய் துவென்றி டுவோ மெனவுநேரே
பாதக னவரைய ழைத்தான்—பரிபவ முறவவர் களொடுச
மர்விளைத்தான்.

பதம். இராகம்—மோகனம். தாளம்—ஆதி.

பல்லவி.

போர்புரிந் தான்வெகு கோரன்—இந்தப் புவியிலெ வருமிகழ் சூரன்

அநுபல்லவி.

நீர்புனைந் தசடையார் நேசமென் றுமுடையார்
நிற்றனு முத்தம மைப்பணி பக்தி நிகழ்த்திய சுத்தர்மு னக்ரம
முற்றிடப் (போர்)

சரணங்கள்.

(க) கதிரோ னெழுமமுங்கு மதிபோ லெழுந்த தீய
கரிக்குணங் களுடைய கயவன் மதியுபாயன்
சதிசெய்துங் குடிகெடத் தானெடுத் திடுங்காயன்
ஸத்குணி களைக்காணில் தயங்கி யொதுங்கும்பொன்
தன்னொடு துன்னிய பன்னக மென்னவும்
இன்னல்கள் பின்னமும் வன்மமு முன்னிய
சொன்னல்கள் மின்னிய கன்னல்கள் செங்நெலும்
அன்னிய நன்னக ரின்னவை யுன்னிய
தீது றுங்குண மள்ளர்க ளும்பல—மேத டம்புய முள்ளவ
[ரும்பலர்
வாது றுஞ்சம ரெள்ளியு றுந்தல—மீது வந்திடு கொள்ளைசெ
[யுங்கல
கத்தைவி ளைத்திடு முக்கிர் சேரவு—கிர்த்திற முற்றபு
[லிக்கிணை நேரவு
ரத்திற மொத்தந ரிக்கிணை போலவும்—உத்தம பக்தர்மு
[னக்ரம மேலவும் (போர்)

(௨) போர்க்களத் தினில் வெற்றி புரிந்தவர் வாள்பயிற் றும்
புகழ்தருந் தொழிலினைப் புரிவோ மெனவேமுற் றும்
மூர்க்கன ழைக்கவென் றும் முதிர்ந்தபக் தியியற்று
முனிவரே ஞதிநாதர் முனிந்ததற் கொப்பிச்சுற் றும்
மொய்த்திடு மெத்தவ னுத்தபு யத்தவர்
கத்திபொ டொத்தகை மெத்த வுரத்திறம்
வைத்த ரிபைத்தெறு மத்தவி றற்படை
முற்றுணர் கற்றவ ரைத்துணை பெற்றிட
வீர கண்டையெ னுங்கிளர் மணிபத
மார வென்றித ரும்படை பலவித
மேரு வென்றிடு மம்புஜ முறுமத
மீறு வெங்களி றென்றய முளமித
மொத்தவர் கச்சுமி றுக்கியு நின்றிட
வுத்தம ரைத்தெவு றுக்கியும் வென்றிட
நத்தி யவர்க்குமுன் வெட்கம கன்றிட
அத்தரு ணத்தினில் உக்கிரன் முன்றிடப் (போர்)

(௩) வீர ரிரும ருங்கும் வீசும்வாள் நுனி நாக
மின்னுல கத்தவர்நா வென்றுவி ளங்கவேக
மாரயெ திர்க்கெதிரா யடுத்தமர் செய்யத்தேக
மற்றுச்சி லர்வீழ்ந்திடு மமர்க்களத் தினிற்சாக
அந்தவ ரங்கம்வ ழிந்துநி றைந்துதி
ரங்கடல் பொங்கியி ரும்புவி யெங்கும்
விரிந்துறு மந்தா மன்றுபொ ருந்திட
வுங்கழு கின்குல முங்கத றுஞ்சிலர்
காக மங்கு விழுங்குடர் கொத்திட—வேக விந்து மருங்கினில்
[மொய்த்திட
வேகு ரங்குமி ழுந்தவர் பற்பலர்—வாகு வின்றிவி ழுந்தவர்
[சிற்சிலர்
இத்தகை யுத்தம திற்புவி செய்தத-வத்துரு வத்தின ருக்கிர
[மெய்துசெ
யிர்,க்கெழ வத்ததி யிற்பெரு மூடன்வ-வித்திற மற்றுவ
[ருத்தமும் நாடவும் (போர்)

## தட்கா

தொண்டரும் வெஞ்சமர் நின்றுமெ ழூக்தெதி ரும்ப டையின்பல
ரும்பட வும்பல முந்திக முஞ்சில ரின்சிர முங்கொய வுஞ்சில ரின்கா
முங்கெட வுஞ்செய்த ருந்தவர் நின்றிட வுங்கய வன்பரு கண்களி
னின்றுபு லிங்கமு திர்ந்திட வன்பரை வென்றிட வுந்திட மன்றிம
யங்கியொ டுங்கிந டுங்கிம றைந்துவி ரைந்தும ரங்கந்—தனை
விட்டுநடந்தே அதிவிரை வினி-லிகழ்வொடு-புறகிட் டனனென்றே

## சந்தவீருத்தம்.

அந்தவிா வொன்றுசய நந்தனில மர்ந்திடவு மங்குதுயி லின்றிமரு
[வியசூரன்
இந்துதா ரன்பரையும் வஞ்சனையில் வென்றிடுவ மென்றிருள்பு
[லர்ந்திடும யநோ
வந்திருவ ருந்தனி யி டந்தனிலு நின்றமரு வந்துசெய்வ மென்று
[சொலி விடவாா
முந்தாம மர்ந்திவரு மன்பருமி சைந்திடவு முந்தியவி டந்தனில
[மருவாரே.

## வெண்பா.

வஞ்சகன்கு றித்தவிடம் வந்தவன்பர் நின்றிடவும்
புன்செயலோன் வஞ்சம் பொருந்திடவும்—மஞ்சுளமார்
பூதி நுதலணிந்தும் பொய்யனைத் தான்மறைத்துஞ்
சாதுறும ரங்கமமர்ந் தான்,

பதம். இராகம்—கல்யாணி. தாளம்—ரூபகம்.

## பல்லவி.

எதிர்த் தானறஞ் செயவி திர்த்தானே—யெந்தை—யிடபந்தனி
லமர்சுந்தா ரிடமன்பொடு தொழுமன்பர்முன் (எதிர்த்தான்)

## அநுபல்லவி.

கதித் தாரணி யத்தில்வி டக்கினைக் கண்களிநே ரக்களியுறு
சிங்கமெனச் சொலுமவரையும் (எதிர்த்தான்)

சரணங்கள்.

(௧) கையினிற் பலகையுங் கடகமுங் கவச முமிக வணிந்து
[கொடுஞ்
செய்கையே தொழி லெனப்புரி பவன் தீங்கு புரியத்
[துணிந்து—நின்ற
பொய்யனுந் துள்ளிக் குதிக்க யெந்தப்—புவனமு மவ
[மதிக்க வந்த
கைதவன்மெய் மறந்துபாவ—மெய்திடவும்வி ரைந்து மேவ
கந்தையுடனு மெந்தையீசர்—சொந்தர்முனிலும் வந்து மூசு
(எதிர்த்தான்)

(௨) கச்சு மிறுக்கி வாட்கையுங் கொண்டு கழல்பதங் களி
[லொலிக்கத்—தொண்டர்
மெய்ச்சு மேனுநி நாதர் சிறந்து மிகும முகுடன் ஜ்வலிக்க—
[நின்றும்
வச்சிர தேகந் தனிற்கவ சமும் மருவி யுங்குது கலிக்க—
[யென்றும்
நச்சரவமு மதியு மேறு—முச்சுடர்திகழ் நயன மாரும்
நாதர்பதவி ணையினை முன்னும் மாதபசுறு மடியார்
[முன்னும் (எதிர்த்தான்)

(௩) அடியவர் வஞ்சன் றனைக்கொன் றிடவு மடிபெயர்த்
[துவந் தெதிர்க்கக்—கண்ட
கொடிய பாதகன் சமயந் தெரிந்து கூறு முடலம் விதிர்க்க
[நின்றும்
சடிதி யில்நெற்றி மறைத்த பலகை தன்னை யெடுத்து
[முன்னிலும் நிற்கக்
கடுவிரைவொட மர்ந்ததொண்டர்—வடிவுறுதிரு நீலகண்ட
னுடனிகலா னடியரென்று—படிமிசைதொழு மவர்முன்
[னின்றும் (எதிர்த்தான்)

இராகம்—குறிஞ்சி. தாளம்—அடதாளசாப்பு.

கண்ணிகள்.

(க) பூதி நுதலணிந்த பாதகன் றனைக்கண்டு போற்றியே
துதி சாற்றியே—தொண்ட
ராதர வுடனிந்தச் சாதுவினை யுங்கொல்ல—லாகுமோ மனம்
நோகுமோ—யென்றும்

(உ) நினைத்துத் தயங்கிக் கொல்லும் நிலையில்நின் றவரந்த
—நேரமே வேகுதூரமே விலகி
அனைத்து லகுமதிக்கு மமுதகு ணமுடைய—வய்யரோ பூதி
மெய்யரோ

(ந) கையிலி ருந்தவாளைப் பையவெறி ந்துநிற்கக் கண்டவன்
பித்தம் கொண்டவன்—இந்த
வையகத் திலுயர்ந்த செய்யதொண் டரைக்கொல்ல
வந்தனன்—கண்சி வந்தனன்

(ச) கொல்லவெ திர்ந்தகூர ளைல்லையில் வருவதைக்
குறித்திட்டா ரன்பு தரித்திட்டார்—இந்த
நல்லதொண் டர்வாள்கையி லல்லாத நமைக்கொல்ல நாடி
னால்—வழி தேடினான்

(ரு) வாளில்லா தவனை மாளச்செய் யுந்தோடத்தை மருவுவர்
அன்பர் சருவுவர்—என்று
நீளுமன் புறுதொண்டர் வாளையெ டுத்துக்கொண்டு
நின்றனர் பவம் வென்றனர்.

விருத்தம்.

இத்தகையா நின்றதொண்டி னியல்பி லார்ந்த
வேனாதி நாதரெண்ணந் தெரியாமுடன்
எத்திசைக்கு மிகழ்ச்சியுளோன் றனும்வைத்த
யிச்சைதனை முடித்துநிற்கத் தொண்டரான

வுத்தமரு மூவர்துவினைப் பாசந்தன்னை
    யொழிவுறச்செய்த துகட்க மென்று போற்றிச்
சத்திசிவந் தனைநினைக்க விடைமீதேறிச்
    சங்கரருந் தொண்டர்முன மமர்ந்தார்மன்றே.

ஆரியா.

ஈசர்ப தவிணையின் மீதே—யினிதார் தொண்டர் மனம்நாடி
[யப்போதே
ஆசையொ டுந்துதி செய்தா—ரடியார் மனமகி ழவே நிதிகள்
[பெய்தார்

பதம். இராகம்—பூரிகல்யாணி, தாளம்—சாப்பு.

சுத்த வடமொழியாகப் பாடவேண்டும்.

பல்லவி.

காமி தார்த்த பல தாயக கருணாகர ஹரி ஸாயக (காமி)

அநுபல்லவி.

ஸோமதரோ மாநாயக ஸூக்ஷ்ம மதே ஸுக காயக (காமி)

சரணங்கள்.

(க) மஞ்சுள கமந ஸுரநுத மதுராபுர வாஸ—ஸுக—ரஞ்சித
முநிகண ரட்சமாம் மிருதுஹாஸ [பரிஜந
பஞ்சவதன பாபசமன பாவிதஜந சூலவஹந
சஞ்சலவா நாகபரண ஸதய ஹிருதய கமல சரண (காமி)

(உ) ஸிருஷ்டி ஸ்தித் தியாதி பஞ்ச கிருத்ய—திவ்ய காரண ரூப
—சிரம்
க்லிஷ்ட பவஸா காத ரணவி சிஷ்டோ டுபப்பிர தாப—ஸ்புர
தஷ்டரூப மயஸு தேக துஷ்ட ஹாண விருஷப வாஹ
திருஷ்டித் திருத யஸமு பேத ஷஷ்டிப் ரிய ஸுமுக தாத ()

(ரு) கைலாஸா சலவரமேரு கார்முக பூத நாத—ஹர
சைல ஹிமவத் தபோ ரூப தட்சயாக பேத
த்ரைலோக்ய ஸித்தவி சேஷ ஸஜ்ஜநலா ஹிருதயநிவாஸ
தைல ரூப காலகால ஸத்வகுணநி தேஸா சீல (காமி)

ஸவாய்.

என்றுது திக ளி யம்பிவ ணங்கி யிதய மலர்—விரிந் தேசிறந்தே
அன்று கைலே யமர்ந்து விளங்கின ரானந்த மாய்த்தம்ப வம்
துறந்தே.

விருத்தம் பலசுருதி.

இவ்வாறு தொண்டுசெய்த வடியா ரான—வேனுதி நாதர்சரித்
திரமுரைப்போர்
பவ்வியமாக் கேட்போரு மிகத்தில் நேரும்—பாக்கியங்கள்
தனையடைந்து சிறந்து வாழ்ந்து
நவ்வியாரர்ந் திடுங்கைலே தனையடைந்தென்—றுரைமெந்தை
யடிமலரை மகிழ்ந்து போற்றிச்
செவ்வையுடன் ருெண்டர்கள்கூட் டத்திேைடு—சேர்ந்திவரு
மினிதுடன்வாழ்ந் திருப்பர் மாதோ

ஏனுதிநாத நாயனுர் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| லாவணி அல்லது ஸாகி | 1 | கட்கா | 1 |
| பதம் | 4 | சந்த விருத்தம் | 1 |
| விருத்தம் | 3 | கண்ணிகள் | 1 |
| வெண்பா | 2 | சவாய் | 1 |
| ஆர்யா | 2 | ஆகூ உருப்படிகள் | 16. |

ஆகூ சரித்திரங்கள் 10-க்கு உருப்படிகள் 247.

உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# (11) *கண்ணப்ப நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்—இந்துஸ்தானி காபி, தாளம்—ஆதி.

ஸாகியாகவும் பாடலாம்.

கண்ணிகள்.

(க) மாதவர் மாதவர் போதவ ராதவர் வாழ் கா ளத்தீசர்
பாதம லரைமற வாதவர் கண்ணப் பனெனும் பிரகாசர்

(உ) மலைவள நீர்வள நிலவளங் குடிவள மல்கிய புகழ்நாடு
தலவள மதிற்சிறப் புயர்கா ளத்திவரை சார்போத் தப்பினாடு

(ந) எடுப்பூர் தந்திக்கொம் புகளைச் சேர்ந் திடப்பிணைத் திடுவே
லியின் சீராம்
* உடுப்பூ ரிதமலர் தொடுப்பார்ந் தெனும்பொழி † லுடுப்பூ
‡ ருடுப்பூராம்

(ச) குன்றுவர் குழவிகள் புலிகரிக் குருளைகை கோத்துடன்
விளையாடும்
ந்ன்றிது மானின மென்றுசி றுவியர்கள் நாடியே
பிடித்தாடும்

(ரு) வெல்லுறும் வேடுவர் கொல்லெறி குத்தென விளம்பு
மோசை பொங்கும்

---

* உடுப்பூரித—நட்சத்திரங்களால் நிறையப்பட்ட †பொழிலுடுப்பூர்—சோலைகளால், உடுத்தப்பட்ட, அதாவது குழப்பட்ட ஊர்—நகரமாகிய ‡ உடுப்பூர்—உடுப்பூர் என்னும் பெயர் விளங்கியயிடம்.

சில்லரி துடிகொம் போசையு மதைமறைத் திடருவி
யொலியெங்கும்

(சு) மார்க்கர்க ளையலைத்துப் பறித்துச்சேர்த்த—நிறை வாய்விடும்
பெருமுழக்கும்
ஏர்க்கும்வா ளிடிக்குர லினுமதிர்ந் திடுங்களிற் றினங்களின
ளிமுழக்கும்

(எ நீங்கி டாதகொடுந் தொழிலுடை யார்கார் நிரைநிகர்
மேலுடையார்
தாங்கிய மரவுரி யிலையுடை யார்மே தகுவன் றோலுடையார்

(அ) வனவே டுவர்கட் கதிபன் னகனெனும் மருவும்
பெயருடையான்
மனமே நிகர்மன மாட்சி பொருந்துதத்தை மாதெனு
மனையுடையான்

(கூ) அரசுக் குரியதோர் புதலவனி லாமைய தாலே
மிகநொந்தான்
விரைசெய் கடப்பந் தாரணி செவ்வேள் மீது பக்தி
புரிந்தான்

(கo) சேவலு மயிலு முடையார்க் குப்பெருஞ் சேவல் மயிலு
நேர்ந்தார்
மேவிய பலவாம் விரதம் புரிந்துமிகு மேனியு மிளைப்பார்ந்
தார்

(கக) பருவ மாறிடினு மையன் கிருபையிருந்தால் பட்டம
ரந்தழைக்குமே
தருவனு லகுஞ்சிறி தெனமே லாம்பதந் தோன்றவின்
பம்விளைக்குமே

(கஉ) நத்தைவ யிற்றினில் வைத்தம ணிக்கிணை தத்தை கர்ப்ப
மானுள்
சித்தமதிற்கனி வுற்றுவரைக்கிறை சிந்தையு மகிழ்வானுர்

(கரு) சேர்ந்திடு மாவர் சார்தெய் வங்கட்குச் செயும்பூ சைகள்
செய்தார்
நேர்ந்த சிறுபறைகள் துடிகொம் புகளுட னிதழும்பொன்
மழைபெய்தார்

ஆர்யா.

திங்களு மீரைந் தாகத்-திருநேர் தத்தை மகிழ்வாரும் வயிர்நோகக்
கங்கைய ருக் கன் பாகக்-கடன்மீ தெழுமுழு நிலாவை நிகராக

பதம். இராகம்—ஸ்ரீ. தாளம்—சாப்பு.

பல்லவி.

தத்தையி டத்துதய மானார்—தொண்டர்—தமக்குமண் டருக்குமீ
சருக்குமிக் குறவானார் (தத்தை)

அநுபல்லவி.

சித்தம கிழ்வுகொள்ளச் சித்தூர்ம றவர் துள்ளப்
புத்தமு தத்தையெள்ளப் பொருந்தும்ப வத்தைத்தள்ளத் (தத்)

சரணங்கள்.

(க) இமையவ ருஞ்சந் தோஷிக்க—அதிர்ந்திடுந் துந்—துமியுமி
கவேகோஷிக்கத்
தமையே நிகர்க்குமன்பர் தம்மையும் போஷிக்க
வுமையாள் மருவுமீச ருடனேஸம் பாஷிக்கத் (தத்தை)

(உ) அந்தன்கண் பெற்றதையொப் பாலே—நாகனுங்கண்டு
மைந்தனை யிருகை களாலே—யெடுத்தணைக்கச்
சிந்துமை மலைமேலே திகழ்மைபோ லருளாலே (தத்தை)

(ங) வண்ணமு றும்பிள்ளையைத் தாங்க—முடியாது
திண்ணமெ னும்பெய ரோங்கச்—சொன்மினென் று
அண்ணலு ரைபோற்கூற வனைவரு மகிழ்வூரத் (தத்தை)

### விருத்தம்.

உதயமுறு மைந்தனுக்குத் தழைகள் சூட்டி
யுற்றதளர் நடையினையு நோக்கி நெற்றிக்
கிதயமகிழ்ந் திடத்தாக்கி நுகிராற் சுட்டி
யிட்டுமுத்த மிட்டுமுத்திட் டெழிலும் பார்த்துத்
தழையுமணிக் கவடிநிம்பை முத்தங் கோத்த
சதங்கையிடை தளர—நடை ததும்பி யாடும்
அழையளவில் மகிழ்ச்சியொடு நோக்கிச் சேயங்
கமுற்றார் பெற்றோர்பேரின் பமுற்றார் தாமே.

லாவணி. இராகம்—ஹமீர்கல்யாணி. தாளம்—ரூபகம்.

பஞ்ச சாமரமாகவும் பாடலாம்.

### கண்ணிகள்

உருவ மைந்த தத்தை சேய்க்கும் பருவ மைந்து நேரவே
கருவ மிஞ்சு வரியின் கன்றைப் பொருவுந் திண்மை சேரவே

மாவர் மைந்த ரொடுகு றிச்சி மனைக டோறு நாடியே
திரமு லாவு புயமல் கூறச் சேர வேவிளை யாடியே

ஞாளி கொண்டு முயல்கள் பன்றி யாளி யின்கு ருளைகளே
கோளி லாது பற்றி வெற்றி கொடுபொ ழிற்கண் வளைகளே

பொருவி டப்பி ணைந்து கட்டி மருவி யேவ ளர்க்கவே
பருவி ரேறு கருவ மிஞ்சு பருவ முந்த ழைக்கவே

திடமி குத்த புயவி ணைத்தி ரள்களை மெச்சி நோக்கியே
அடல்சூ றித்த சிலைப யிற்ற வணியை நெஞ்சு ளாக்கியே

மைந்த ரைப்பு யந்த மீஇம கிழ்ந்து முத்த மாடியே
சிந்தை மெச்சு சிலைப யிற்று தினமு மொன்று நாடியே

இனம தாய மாவ ருக்கு மிசைகொள் தூதை யேவவே
கனமு லாவு மலையின் வேடர் களுமகி ழ்ந்து மேவவே

(அ) துடிமு ழக்கி னொடும ணித்தி ரளும ணிப்பொ னொடியே
படியின் மெச்சு கரிம ருப்பு களையு மிக்க நேடியே

(கூ) உணவின் மிக்கு ருசியெ னச்சொ லூனு மண்டு தேனுமே
கொணரு முக்ய மாவ ருங்கு றிச்சி வேடர் தானுமே

(கo) வந்து நாக வரசன் முன்பு வந்து தாள்வ ணங்கவே
மைந்தன் வில்வி ழாவி யற்று மெந்த னன்புக் கிணங்கவே

(கக) மேரு வில்லு மீசர் நஞ்த மெய்த நல்கிற் றென்னவே
சாரு மூனே யமுது செய்யத் தக்க வில்லி தென்னவே

(கஉ) காப்பு மிட்டுப் புலிந ரம்புக் காப்பு மிட்டுத் துன்னவே
கோப்பு றுந்தன் குலம்வி ளங்க யோப்ப நாக னென்னவே

(கங) மகிழு மைந்த னிடமு வந்து மறவர் நல்கி வாழ்த்தினார்
இகல்செய் நாகன் மருவு தத்தை யிருவ ருங்கொண்
டேத்தினார்

(கச) மலையி னெல்ல ரிசிபுன் மூங்கில் வளரு மேன லரிசியாற்
குலவு சோற மைத்துண் ணானுங் கோதில் கந்தம்
வரிசையால்

(கரு) கனிக ளோடு தேக்கி லைக்கு ளினிய தாவ டித்துமே
புனித மான தேனி லும்பு கட்டி யேபு சித்துமே

(கசு) தினையின் மாவ ருந்தி யிய வினையு நாடி யுண்ணுவார்
இனிய தாயெல் லோரு முண்டி சைந்த நீழல் நண்ணுவார்

(கஎ) குடிசை சிற்றூர் மாவர் வேடர் குன்று ளோர்க ளொடியே
படிய யற்பு றத்து ளோர்கள் பலவு மிக்க நேடியே

(கஅ) வாழும் வல்ல வெயின ரோடும் வரையெ யிற்றி யர்களுமே
வழ்ப ரிப்ப ரிதியு முச்சி யேக வேய னைவருமே.

விருத்தம்.

பாசிலையாம் படலைசுற்றித் தொடையல் சூட்டிப்
பருங்காசின் வடந்தோற்க வடியும் பூண்டு

மாசில்வெட்சி புனைந்துவில்லா சிரிய னோர்ந்து
மற்சிலையைச் சூழ்ந்துகொம்பு துடிவே யாரு
மோசைபொங்க மரவரொலிப் போங்க நாகன்
உறுங்குறிச்சி தனைவலம்வந் துவந்தே மூநாள்
ஆசகல் மங் கலவாத்ய முழங்க வீச
* ரடிப்பித்தார் கைக்குவில்லைப் † பிடிப்பித்தாரே.

ஆர்யா.

(க) மலையரு கிற்சிலை கோடி—மருவப் பருவப் பயோத ரமுமோடி
உலையக் கருவித நீடி—யொளிர்விற் கணைதெரி துரோண
நிகர்கூடி

(உ) விற்றொ ழிலிற்கை தேர்ந்து மிளிரும் வயதுப திஞறு
முடனூர்ந்து
மற்புய வெற்பிணை கூர்ந்து மகிழ்நா கன்றனை யநக
வலிதேர்ந்து

ஸ்வாய்.

(க) தன்றளர் வுமைந்தன் றன்வளர் வுங்கண்டு சஞ்சலம் விட்டுத்த
முவினனே
சென்றது நங்குறை யென்றிது கூறிவெந் தீயப வத்தில்வ
முவினனே

(உ) நாடிய மைந்தனைக் கூடியி ருக்கையில் நாடுறும் வேடர்கள்
தேடினரே
காடுறும் வல்லமி ருகங்கள்பெ ருகிக் கலக்குவ தைசசொல்லி
வாடினரே.

வெண்பா.

வாடும் வனவேடர் மரவர் மலைக்குறவ
ரோடு மிதுநாக னுரைசெய்வா—ஞடியதன்

---

* அடிப்பித்தார்-பாதாரவிந்தத்தில் பயித்தியமுள்ளவருடைய †பிடிப்பித்தார்-பிடிக்கச் செய்தார்.

மூப்புரைசெய் தேமகனை முன்பாக்கி யென்போலக்
காப்புடையா னென்றுவப்பீர் காண்,

கலித்துறை.

மன்னு நினதுரி மைப்பெரும் வாழ்க்கையுன் மைந்தன்பெற
வின்னுளி வில்பொழு தேநல்கும் யாமிசைந் தேமெனவே
சொன்னார்கள் கேட்டு மகிழ்நாகன் றேவிக்குச் சொன்மினென
வன்னுளிற் கூற மகிழ்ந்துவந் தாள்தத்தை யாயிழையே

பதம். இராகம்—சுருட்டி, தாளம்—ஆதி.

பல்லவி.

தத்தை மாது வந்தனள் சித்த மீது வந்தனள் (தத்தை)

அநுபல்லவி.

மெத்த வளர் மூப்பி னாலே மெய்த்தளர்வி னோடன் பாலே ()

சரணங்கள்.

(௧) தலையிற் கண்ணி சூட்டியே சங்கின் மணி பூட்டியே
கலைக் கொம்பி னைத்த பணி காதுகள் புக மாட்டியே ()

(௨) மயிற் கண்டம் பூட்டியே மணிப் பீலி சூட்டியே
அயிற் பின்மான் வயிற் றரி தாரத்தில தந்தீட்டியே (தத்தை)

(௩) மாவி னெடு தத்தியே மரவு ரியுஞ் சுற்றியே
நாலு தனங் காட்டி நாக நாதன்சமு கம்நத் தியே (தத்தை)

விருத்தம்.

* வருந்தத்தை முகநோக்கி மைந்தனார்க்கு—மன்னுரிமை
யளித்தனநீ வாழ்த்து கென்னப்
† பொருந்தத்தை நீக்குறுஞ்சூர் மகளிர்ப் போற்றிப்—புனிதையு
மைந் தனைவாழ்த்திப் புகழ்ந்து செல்லத்

---

* வரும்-தத்தை முகம்-வருகின்ற தத்தை மாதினுடைய முகத்தை
† பொரும்-தத்தை நீக்குறும்-பொருந்திய, ஆபத்தை நீக்குகின்ற

‡ திருந்தத்தைத் திடுஞ்சுரிகை யுடையின் ரேனுஞ்—சிறப்புறவே
நல்கிமுன்கைப் புலித்தோல் வீக்கி
¶ யிருந்தத்தைக் காத்துவந்த தையும்விடாம லிருமென்றன்
வேட்டைக்க மருமென்றனே.

பதம். இராகம்—செஞ்ஜுருட்டி, தாளம்—ஆதி.

பல்லவி.

கண்ணே யிங்கு வந்திடீர் கட்டி முத்தந் தந்திடீர் (கண்ணே)

அநுபல்லவி.

வண்ணவர சிரி மையில் வாழ்ந்திங்குமு கந்திடீர் கண்ணே)

சரணங்கள்.

(க) பந்தரையென் போலவே சொந்தமெனச் சாலவே
சிந்தைகளி கூறச்செய்வீர் அந்தமார்க்கண் டன்போ
லுய்வீர் (கண்ணே)

(உ) நல்லதைநீர் கொள்ளுவீர் அல்லதையே தள்ளுவீர்
வல்லமையை யுள்ளடக்கி வெல்லும்போது காட்டிவிள்வீர் ()

(ஈ) வேட்டையாட நாடுவீர் வேடரைக்கொண் டாடுவீர்
நாட்டம்வைத்து லகையாளிற் றேட்டமெல்லாங்
கைகூடுவீர் (கண்ணே)

வெண்பா.

மைந்தர்க் கினிய மதியுரைக்கத் திண்ணருந்தன்
தந்தையடி வீழ்ந்துமுப சாரஞ்செய்—தெந்தையே
யொப்பினே னென்றுவிடை யுற்றுவன வேடரொடு
மம்பொழுதே சென்றார்தீ ரர்.

---

‡ திருந்தத்தைத்திடும் சுரிகை-திருத்தமாகப் பாய்ந்திடும் வாளாயுதம்
¶ இருந்தத்தைக் காத்து-இருக்கும் விஷயங்களைப் பாதுகாத்து

ஆர்யா.

(க) வேட ரொடுஞ்சுனை யாடி—மெய்த்தீ ரருமிற் கவாவி
ஞெடுநாடி
நீடும ருந்துயின் மூடி—நினைவார் புலர்கா லையேயெ
ழுமுன்னுடி

(உ) வந்திடும் வேடர்ப ணிந்தார் மலர்நே ரடியையுமு டிமீது
றவணிந்தார்
சிந்தையில் வேட்டம்நி னைந்தார் திருமே வியகோ லமேமி
கவணைந்தார்

இராகம். ஆனந்தபைரவி, தாளம்—ஆதி.

கண்ணிகள்.

(க) காலங் கரணுவார் வேட்டைக் கோலம் பூணுவார்—தோல்
கச்சி றுக்கிவாள் வீக்கியேமதன் மெய்ச்சத் தோணுவார்

(உ) சுருள்குஞ் சியின்மேலே மிளிர் சிகிபிஞ் சமதாலே—முன்
சூடிக் குறிஞ்சி முல்லை வெட்சிகள் தொடுத்துப் பின்பாலே

(ங) பின்னும யிர்க்கயிற்றால்—முருந்திடை பிணைகுன் றியுமேலே
முன்னெற் றியுற வணைந்திரு மதிநிகர் முதிர்சங் கணியாலே

(ச) குழைகள் காட்டினார்—கவடி—யிழைகள் பூட்டினார் பன்றிக்
கோடு மக்குமணி யோடு தொங்கவிட நாடி மாட்டினார்

(ரு) ஆனைத் தந்தமதால்—சிறுமணி—யால்நற் றொங்கவிட—மணி
யணிவா குவலய கங்கண முன்கை யணிந்து மிலங்கி யிட

(சு) வீரக்க ழலும்பூட்டிக்—கால்களி—லாரச்செ ருப்புமாட்டிச்
—சுரிகை
விசித்தெவ ராலு மொசித்தி டாதவரி வில்லுங் கையிற்
கோட்டி

(எ) புட்டிலு முதுகுறையக்—கணைகளு—மட்டிலா மல்நிறைய
—வேடர்கள்
பூட்டிவிட் டாரிசை நாட்டிபிட் டார்க்கெழில் பொங்கிட
மிகவிரைய

### விருத்தம்.

அலங்காரஞ் செய்தவுடன் சிறுநாணோசை-யதையிட்டார்
துடிபறைகொம் பதிர்ந்து விம்ம
விலக்காரந் நிலைகுலையக் குறிச்சியுள்ளோர்-மிகவேற்று
மொலிகம்ம வேடர்சூழக்
கலங்கார நெஞ்சுதுடுக் கிடக்கா னேகிக்
கான்பெலியூட் டிக்குறவர் தம்மைநீங்க
யிலங்காரச் சூர்மகளிர் கருணைபெற்றங்-கிருந்தார்
வேட்டத்தில் மனம்வருந்தார் தாமே.

பதம், இராகம், ஆனந்தபைரவி, தாளம், அடதாளசாப்பு.

### பல்லவி.

வேட்டம் புரிந்துமனங் களித்திடார்-பின்போர்
நாட்டத்தையுமீசர்க் களித்திட்டார்-வன (வேட்டம்)

### அநுபல்லவி.

மலைபை மிஞ்சு வலைகொண்டு மறைத்திட்டார்-கட
லலைகுன்ற வொலிகொண்டு நிறைத்திட்டார்—பல
பலகொமபு துடியும்ப றைகளும்பெ ருகவண்ட
முலையும்ப டிமிருகங்கள் மலையும்ப டிமுழங்க (வேட்டம்)

### சரணங்கள்.

(1) சிங்கங்க ரடிபுலி பொங்கியே-யெழச்—செங்கண்க
ரிகள்குன்றி ரங்கியே—வா
அங்கந்த லவுபன்றி யுங்குண்டை களொருமை-பின்தும்பு
கள்வெறிக்க வுங்கண்டு டல்விதிர்க்க (வேட்டம்)

(2) சிங்கங்களையுஞ்சுணங் கன்களை-பிடித் தங்கந்த லைக்கவுமி
மிருகங்களை-துடித்
தெங்குமி றக்கவேடர் பொங்கிச்சி றக்ககொம்பி—னனங்க
ளைக்கவிடும் பாணந்து ளைக்கவன (வேட்டம்)

## விருத்தம்.

இவ்வாறு வேட்டைசெய்யப் பருமோ ரேன
மிடும்வலையை யறுத்தேக நாணன்காட
னவ்வாறு சென்றுசிலி முகங்கடுவ-வதன்முகத்தாற்
றட்டியொரு சூழற்புக்கச்
*செவ்வாறு புகுந்திண்ண னாருங்கண்டு-செறுச்செயுடை
வாள் கொடதை வீட்டமெச்சித்
†தெவ்வாருந் திடுக்கிடச்செய் திண்ணனார்க்குச்
செப்பினா ரதற்கிசைய வொப்பினாரே.

இராகம் சென்ஸ்ஜுட்டி தாளம் ரூபகம்.

### கண்ணிகள்.

(1) நாணனும் பெருங் காடனும்பன்றி நசையினாற்புகுந்
தெடுத்தார்-‡வண்டி
னாணனும்நாணும் மேனி யதிண்ணனா ரிடத்தில்வந்
தடுத்தார்

(2) ஐய ரேவெகு தூரம் வந்ததி லதிகப்பசியினாலே-மிகாந்
தவதி யுற்றன மிதைவெ தும்பியுண் டாற்று வோமொருக்
காலே

(3) யென்றுரைத்துமெய் வருந்தி டத்தண்ணீ-ரெங்கெ
னச்சொல்ல மேலே
தன்றுதேக்கின் புறத்திற் சென்றிடிற்-றோன்று மலைக்கப்
பாலே

(4) சொர்ண முகலி நதியென் றுநாணன் சொல்ல வேதிண்ண
னாரும்-கார்
வர்ண முறும்பன் றியைநீங் களிரு-வரும்கொ டுமுன்பு
சேரும்

---

* செவ்வாறு—ஒழுக்கமுள்ளநெறி.
† தெவ்வாரும்—எந்தச் சத்துருவும்.
‡ வண்டினாணனும்—வண்டையே நாணாகவுடைய மன்மதனும்.

(5) என்ன வேதள்ளி நடந்த சைக்காத-மேகிச் சூழலைக் கண்டார்-ஈக
ரின்ன ருள்பெறுங் காலத தால்வரை-பேறு மெண் ணமுட் கொண்டார்

(6) கொண்ட துகண்டு காளத் திவரைக்-குடுமித் தேவரை நன்றாய்க்
கும்பிட் டுவா லாமென்று நாணன்-கூறி யேயெதிர் நின்றான்

(7) நின்ற நாணனை நோக்கி நீகண்ட-நிமலர் வடிவந் தோணச்
சென்று தரிசித் திடவி சைவினிற்-செல்வை யென்றன்பு பூண

விருத்தம்.

உரைத்தேக யிருவரும்பின் றொடரச் சங்க
மொலித்துமுஞ்சா லதனில்முத்த மோடு பொன்னைக்
கரைத்தேகண் டவிடமெல்லாங் கொழிக்கும் பொன்மு
கலிக்கரைகண் டதிலோர்நீ ழலிற்சற் றூர்ந்து
விரைத்தேக மணங்கொடுபன் றியைச்சு டக்கார்
மேனிக்கா டனைநிறுத்தி விதிமாலாம
வரைத்தேகத் தனியண்ணல் வாழ்காளத்தி
வரையேறி யமலருரு வங்கண்டாரே.

பதம் இராகம் கல்யாணி தாளம் ரூபகம்.

பல்லவி.

கண்டார் பெரும் பிறவி விண்டாரே-திருக் காளத் தீசரை நேசனாக் (கண்டார்)

அநுபல்லவி.

வண்டார் பொழிற் பொன்முக லிப்பெரு மாநதியுந் தாண்டிப்பவ வாரிதியுந் தாண்டிக் கணிற் (கண்டார்)

சரணங்கள்

(1) பஞ்ச துந்துமி முழக்கம் போலொலி-பரந்த தென்னென்று
கூற-நாணன்
பருவரைத் தேனி னீகளி னொலி-பரந்த தெனவன் பூர
விஞ்சுதத்துவப் படிகள்தாண்டி மேற்சி வபத மருவ
வேண்டிப்
விரைவார் தவர்போல்நாடிக்-கரைவார் படிமே லோடி
வரையார் சிவ மதைநீடி மலரார் விழியிட நேடிக் (கண்)

(2) இவர்கா ணுமுன் னகி லேசர்கண் ணிணையி-னருள்மேற்
பாயப்-பவத்
திடும் விலங்கொடிபடத்தம் மிணையில் லாவ ருளினைத்தோய
அவரு ருவினைக் கண்டு களிக்க ஆநந்தக் கண்ணீ ரதுகொப்
பளிக்க
ஆடித் தழுவியு முச்சியை-நாடிக்குழைவுற மெச்சி
-யசைந்து முகந்து விடாது
பொருந்து பவந் துடரா துறக் (கண்டார்)

(3) வெய்ய காடி புலிகள் யானைகள் மிகுத்த யேனங்கள் நாடும்
-வனத்
துய்யும் வேடர்போ லிவருந் தனிமை-யுற்ற தென்னென்று
கூடும்—அன்பு
மெய்வ ழியெங்கும் பொங்கிவழிய விழிவ ழிபக்தி மிகுந்து
பொழிய
மெய்த்தவரின் மனம்வழுவக் கைத்தவருந் தனிநழுவ
மெய்யுமறந் தவசமுறச் செய்யும்வினை முழுதுமறக் (கண்)

விருத்தம்.

*இலிங்க மதிற் பச்சிலையை நோக்கி யாவ
ரிதையமைத்தா ரெனவுமது தந்தையோடும்
‡ பலிங்க மரும் மிருகவேட்டை யாடும்போதோர்
பார்ப்பான்வந் தானவன்செய் ததுவாமென்று

*இலிங்கம்—சிவலிங்கம் ‡பல் இங்கு அமரும பலவிதமாக யிங்கு அமரும்.

†புலிங்கமுற்றும் விழிநாண னுரைக்க விந்தப்-புன்செய்கை
நீக்கி நன்கு புரிவோமென்று
Sகலிங்கமாத் தோற்காட ளிடத்தின் மேவக்
கடந்திட்டா ருழுதாக்க நடந்திட்டாரே.

பதம் இராகம் காம்போதி தாளம் ஆதி.

பல்லவி.

வான முது செய்யத் தான டந்தார் செய்ய (வானமுது)

அநுபல்லவி.

மேனி வந்தவரை விட்டி றங்கி விரை (வானமுது)

சரணங்கள்.

(1) ஓடுவார் திரும்பி நாடுவார் விரும்பிக்
கூடுவார் விழுந்து வாடுவா ரிழிந்து (வானமுது)
(2 ஓரடி முன்வைப்பார் ஈரடி பின்வைப்பார்
வாருறுங் கண்ணப்ப மனந்துணி பென்னப்பர் (வானமுது)
(3) வீழ்வர் வீழ்ந்த முடி தாழ்வர் தாழ்ந்த படி
ஆழ்வ ரீச ரடி வாழ்வர் தூய்ய வடி (வானமுது)
(4) கன்றை விட்டு நீங்காக் கறவை யென வேங்க
நின்று நின்று சுத்தி யன்று நிமிஷத்தில் (வானமுது)

கலித்துறை.

மணத்தின் செழுங்கொன்றை சூடியின் றாளை வணங்கி யன்பாற்
குணத்தின் பெயருடை யானைத்தம் முன்னிட்டுக் கொண்டுவந்து
கணத்தின் வரைவிட் டிறங்கி நல்லூனமைக் கக்கருதி
வணத்தின் கரியதங் காட ளிருப்பிடம் வந்தனரே.

லாவணி இராகம் ஹமீர் கல்யாணி தாளம் ரூபகம்

கண்ணிகள்.

(1) திண்ண னார்பொன் முகலி வாரத்-தினில்வ ருவது
நோக்கியே

---

†புலிங்கம்—தீப்பொறி. S கலிங்கம் வஸ்திரம்.

வண்ண மான காடன் சென்று-வணங்கி டமிழ் தேக்கியே

(2) உத்த ரவின் படிக் கரணி வைத்த னலை மூட்டியே
சித்தம் போலக் கூர்த்தந் தவே-னத்தை நன்றாய் வாட்டியே.

(3) அரிந்து வைத்த தசையு மாறி-யலர்ந்து லர்ந்திடப்
போதென்றான்
தெரிந்த நீங்க ளித்த ஊனதாம இத்த காரிய மேதென்றான்

(4) என்று ரைத்த நாணன் கேட்டங் கிவர்வ ரையின்மே
லினரென்றான்
இன்று மலைத்தே வரைக்கொண் டாடி—யேய டிமைபூண்
டனரென்றான்

(5) தேவருண்ண விறைச்சி கொண்டு-திரும்பி வருவே
னென்னவே
ஆவ லொடும் வந் தனரென் றுரைசெய் தான்ம னத்துயர்
துன்னவே

(6) அன்றாக் கிரங்கும் கொச்சைப் பசுப்போற்-கல்லின் றேவைச்
சுற்றினார்
நன்று நமது குலத்தின் மகிமை-நலத்தைத் தாளா
லெத்தினார்

(7) பெரிய பித்துப் பிடித்த தினிமேற்-பிரிந்தி டாதென்
றுரைக்கவே
உரியகாடன் மனத்தின் வருத்த-மோடு கண்கள்நீ
ரிறைக்கவே

(8) முன்ன ரசர்கள் போது மிலைநீ-ரென்ன வுமதைச்
செவிக்கொளார்
அன்ன வூனை யம்பிற் கோத்தங்-கனலில் வெதுப்பி
னார்மெள்ள

(9) உளனின் ருசியை யரியகாவா-லொதுக்கி யேமெல்லப்
பார்த்திட்டார்
தேனின் தித்திப்பிற் றென்னை யுதுமிழ்ந்-திடவுங் கண்டு
வேர்த்திட்டார்

(10) உமிழ்ந்த தன்றி மீதி நமக்கு-முதலி டாதென்
றெரிந்திட்டார்
அமிழ்ந்தி னார்பெரும் பயித்தி யத்திலென்-றய்ந்தி
ருவரும் பிரிந்திட்டார்

(11) அரச னிடத்தும் பெற்ற தேவ-ராட்டி யிடத்துங்
கூறுவோம்
விரைவிலெனவே டரைமுன் னடத்தி-மேவி யென்னென்று
தேறுவோம்

(12) என்ன நடக்கு மிருவர் சென்ற-வியற்கை யைச்சற்று
நோக்கிடார்
தன்னின் பசியுந் தோன்றி டாது-தசையு மீசர்க் காக்கிட

(13) இறக்கு மஞ்சனஞ் செயநீர் வாய்க்குள்-நிறைத்து
மெய்மகிழ் வாகியே
சிறக்கும் பள்ளித் தாமந் தலையில்—நிறைக்க வேவிரை
வாகியே

(14) தறுவொ ருகையிற் றேக்கி லைத்தொன்னை-தனையொரு
ருகையிற் றங்கியே
தனியுந் தனியா யிருக்கு மென்றெண்ணந்-தனைவைத்
துமிக வேங்கியே.

கலித்துறை.

நடந்தார் திருப்பொன் முகலி நதிதனை நாடிக்கரை
கடந்தார் பவத்தைக் கடந்தார் தென்காளத்திக் கார்வரைமேல்
படர்ந்தார் சிவக்கொழுந் தைக்கண்ணிற் கண்டன்பர் பண்பொடுக
வடந்தா னிலாமனத தாரமு தூட்டிட மன்னினரே.

பதம் இராகம் சுருட்டி தாளம் சாப்பு.

பல்லவி.

அமு தூட்டி னாரே யீசர்க்குத்திரு (அமுதூட்டினாரே)

அநுபல்லவி.

அமை யொரு பாகம் வைத்த அய்யருக் குருசித்த (அமு)

சரணங்கள்.

பெரும்பசி யாலி ளைத்துப் பின்னுக ருங்களைத்து
வருந்தி ஞ ரென்றுளத்தின் மருகித் தாளிற்யொருத்தும்
வன்கழ லாலே சூட்டுமலரை-யுந்தள்ளி மேலே-வழியன்பு
போல்
மருவும் வாய்நீரைக் கூட்டித் திருமஞ்ச னமுமாட்டி
(யமுதூட்டி)

(2) திரு முடி மேற்சிரங்கொள் மலர்சூட் டியே புதுக்கி
மருவு நாவா லொதுக்கி வன்பற்க ளாலதுக்கி-மகிழ்ந்துமி
ழூனைத்-தொன்னை யிலேந்தி
வரும் பக்தி தானே-பழுத்தொழுக
மதித்து வணங்கி மிகத் துதித்தெதி ராகவைத் (தமுதூட்டி)

(3) இந்தத் தசையை யீட்டி யிசைந்த கோலிற் பூட்டிச்
செந்தழ லினிற்காட்டி வெந்திட வேவாட்டித்
தித்திக்குமு னென்னக்-கொஞ்சம் ருசிபார்த்
தொதுக்கியேவன்னத்-தேக்கிலைத் தொன்னை
திமிர நிறைத்தேனென்று நிமிர வுண்ணுமீரென்று (அமு)

விருத்த.

ஊட்டினார் கசிந்து கசிந் துருகியின்ப
வுரைபகர்ந்து மேருவினை வில்லதாகக்
கோட்டினார்க் கின்னமுமு னமுதகல்கக்
குறிக்குங்கா லிரிற்கதிர்கள் சுருக்கி மெல்லக்
கூட்டினார் கலுழன்போற் பரிதி யாழுங்
குடக்கடலிற் குளிக்கவிருட் கோலவாட்டங்
காட்டினு ரிறைதனியா மெனமுன்னின்று
காத்திட்டார் கணையைவில்லிற் கோத்திட்டாரே.

பதம் இராகம் செஞ்ஜுருட்டி தாளம் ஆதி மிச்ரகதி.

பல்லவி.

ஈசனைக்காத் தெதிரே நின்றார்

அநுபல்லவி.

மாசுறும் பிறவியை வென்றார் (ஈசனை)

சரணங்கள்.

(1) மாலயன்மா லரியோர்த் திடும் வாழ்வினைப் பார்த்திடும்
மலர்க்கண்க ளிரண்டுங் காத்திடும் (ஈசனை)

(2) துஷ்ட மிருகங் களுங் கூடியே கிட்டுமென வாடியே
கொட்டிடாவி ழிகள்நாடியே (ஈசனை)

(3) சிலைக் கார்வின் னின்றிழிந் தென மலைக்காரு மேமின்ன
சித்திரவிற் கையினிற் றன்ன (ஈசனை)

(4) கானவரைச் சித்தர்தே வருங் கண்டிடா தவருங்
காணக் கிடைத் ததென் றன்பரும் (ஈசனை)

கலித்துறை.

இரியா விருளு மிரியப்பின் காலை யெழுந்துமனந்
தரியா திறைக்குநல் லூன்றேடிச் செல்லத் தகுமிருகங்கள்
தெரியா தெனக்கரம் நீட்டிக் கதிருதிக் கச்சிவகோ
சரியார் புனிதஞ்செய் தேசிவ பூசைக்குச் சார்ந்தனரே

ஸவாய்.

(1) தாசரி யாரையு மீசரெ னவெண்ணு நேசமொ டுற்சிவ
கோசரி யாரே
ஈசனை யேமணி யோசைய யொடுமன தாசையொ டுஞ்சிவ
பூஜைசெய் வாரே

(2) பூமல ருப்புன லுங்கொண்டு மெய்ச்சிவ நாமவொலியொடு
மேட்கிழ் வாகச்

சோமத ரிடம் சேமமு டன்வர வேயிகக் கூறின ரேமனம்
நோக.

(3) சன்னிதி முன்னிலை தன்னிலெ லும்பையு மன்னுமி
றைச்சியு மென்னென நாடி
துன்னிய வேடனன் யாயமி துவென வுன்னிச்சி வாவெனப்
பன்னியே வாடி.

(4) நேரினி துசெய்த பேயையும் விட்டுவிட் டேரெதி ருவுளத்
தாற் பொருத் தீரே
யாரும்ச கித்திடு வாரோவெ னமூர்ச்சை யாய்விழுந்
துகண்ணி னீர்சொரிந் தாரே

(5) என்செய்வ தென்றெழுந் தேயனும் புனோ டிறைச்சி
யிலைகளை யும்மெறிந் தாரே
வன்செய்கை நாயடி யுஞ்செருப் படியு மாற்றிய லகிட்டு
மேல்புரிந் தாரே

(6) சொர்ணமு கலியின் மூழ்கிநீ றிட்டுச் சுருக்கில்வந் தநுசி
தத்தையே மாற்றி
மன்னும்ப ரிசுத்தஞ் செய்துபின் னும்பூசை வர்க்கங்கள்
கொண்டு மனத்துய ராற்றி

(7) வந்துவ ணங்கிப்பு கழ்ந்துகா ளத்தி மகேசநுக் குத்திரு
மஞ்சன மாட்டி
சிந்தைம கிழ்வொடு மாகமத்தின்படி செய்துபை வேதித்தா
ரன்புபா ராட்டி

விருத்தம்.

இவ்விதம் பூசித் தய்ய ரிருந்தவ வனத்தி லேகச்
செவ்விய ராயபக்த சிரோமணி வனத்திற் புக்கு
மொவ்விய மிருகங்க ளைக்கண் டுவந்துகோ லால்வதைத்து
வெளவுமுன் சமைத்தி சர்க்கு வானமுதூட்டினாரே.

பதம் இராகம் சுருட்டி தாளம் சாப்பு.

பல்லவி.

ஞானநன் களித்தார்க் கூனமு தளித்தார் (ஞான)

அநுபல்லவி.

ஆனோர் பசியாறுமென் றகமுந்தத் தளித்தார் (ஞான)

சரணங்கள்.

(1) அரிந்தத சைவெதுப்பிப் பெருந்தொன்னை நிறைத்து
தெரிந்துதே னைக்கலந்து பரிந்துப சரித்து (ஞான)

(2) வழக்கப்படி பூசித்து மலர்க்கொய்பு த்தேனை
குழைத்துக்க லந்தேனென்று கூறியுந் தானே (ஞான)

(3) தேவர்க்க விதியினாற் செய்வது போலே
நாவினால் ருசிபார்த்தே னென்றன் பாலே (ஞான)

(4) சென்னெலி லும்ருசிக்குங் கன்னலைப் பழிக்கும்
இன்னமு தெனப்புகழ்ந் திருந்துப மொழிக்கும் (ஞான)

விருத்தம்.

‡பணியிணைப் *பணியாப் ?பணிந்தவெம் பெருமான்-பரிந்தருள் புரிந்திடப் †பணிசெய்
தணிபெறுந் தீரர் பகலெலாம் வேட்டைக்-காடுயே யிரவெலாங் காத்துக்
துணிவுட னிருக்கக் காடனு னாணும்போய்த் துரையெனும் நாகன்முன் புரைக்கச்
சனியமார் தேவ ராட்டியோ டியர்நா கனும்வந்தார் வனம்வந்தா ரிடமே

---

‡ பணியிணை பணம் அதாவது படத்தையுடையதை, அதாவது சர்ப்பத்தை *பணியாய் ஆபரணமாக ?பணிந்த அணிந்த †பணிசெய்து கைங்கரியம் செய்து.

வெண்பா.

பேணுமகன் றன்மனைதைப் பேதிக்க வந்ததுவும்
பூணுநெஞ்சத் தார்ந்தகுறிப் புந்தவறிக்—காணுமனம்
விட்டார்கா ளத்தீசர் மேனோக்க மாயிருகண்
கொட்டாகி ருந்தாராங் கு.

கலித்துறை.

இரும்பினைக் காய்ச்சிப் பொன்னாக்கிய வாறென்ன வீசர்பக்திங்
கரும்பினைத் தண்ணளி யானோக்க மாசும கன்றிடவே
திரும்பவும் வேடரை நாடுவ ரோவனஞ் சென்றுவர
விருமபின ராற்சிவ கோசரி யாரங்கு மேவினரே.

ஆரியா.

மேவின ரதினிரை வாக-மெய்க்கா ளத்திவ ரையேறி யெதிராக
பூவொடு புனல்கை யாகப்-பூனிதரி டம்பார்க்கவும்மெய் மனமோக

பதம் இராகம் நவரோசு தாளம் சாப்பு ஸ்யர்களு யென்ற
ஜாவளிபோல.

பல்லவி.

வாடினார் மனநொந்து மிகநைந்து (வாடினார்)

அநுபல்லவி.

வாடினா ரெதிராக மறுகி நின்றுசோரக் கண் ணிறையுநீர்
வாரத்தம்
பிறைதன்முன் பாரப் புன் னுறை பூனிறைச்சியார். (வாடினார்)

சரணங்கள்.

(1) சிவமே யிந்தவன்யாயஞ்-செய் தவனெவ னென்று
ஏக தவனோமுன் னின்றிப்பய் தன்னுனே யின்று கண்
டிடில்விடு வேனோவென்று (வாடினார்)

(2) அள்ளியே யெறிந்தாரே யே றலகிட்டுக் கூட்டித்தண்
ஜலம்விட்டங்
காட்டிக் கழுவிமுன்போற் காட்டி யழுதுபா மேட்டிமுன்
(வாடினர்)

விருத்தம்.

வாடியிவை செய்தவனைக் கண்டுநாளை-வகைசெய்வே மெனமுனி
வர் சினங்கொண்டேகி
நாடுமிடந் தனிற்பரமர் சென்றிராவில் நளினத்தோ ளிகர்சிவகோ
சரியார் முன்பு
கூடியன்பர் பெருமையெலா மெடுத்துக் காட்டிக் குறித்திடுநீர்
கொண்டசின மெல்லாமங்கு
தேடிவந்து நோக்கில்நன்றாய்த் தெரியுமென்று செப்பினர்
சொற்பனத்தி லொப்பினரே

பதம் இராகம் வஸந்தா தாளம் ரூபகம்.

பல்லவி.

தனி வரில் நொராய் நாளைத் தினத்தில் முனிவனே பாராய்

அநுபல்லவி

கனி வுட னமதன்பன் காட்சியின் மாட்சியைத் (தனிவரில்)

சரணங்கள்.

(1) இவனைவே டனென்றேநீ மனதில்நி னைத்திடாதே
கவனமு டன்பார்ங்கில்நெஞ் சகமுகங்கொ தித்திடாதே
(தனிவரில்)

(2) அன்பன்வ டிவமெல்லாம் நம்பால்வந் தடங்கும்
யின்பவ றிவுநம்மை யேயறிந் தொடுங்கும் (தனிவரில்)

(3) அவனது செயல்நமக் கானந்த மாகிடும்
அவனிரு கழல்சேய்க ளடிக்கிணை தேக்கிடும் (தனிவரில்)

(4) முனி காதால் விடுங்கங்கை போலிவ னுமிழ் நீராம்
புனிதன் றலைமலர்புங் கவரர்ச்சிக் கும்பூநேராம் (தனிவரில்)

(5) ருசி பார்க்கு மூனுயர்ந்தோர் தருமவி நிகராகும்
உசிதமு னிவர்வேதத் துரையிவ னுரையாகும் (தனிவரில்)

விருத்தம்.

இவனன்பை யொளித்திருக்கிற் காணலாமென்
றீசர் மறைந் திடவிழித்தங் கெழுந்து நாடித்
தவமுனிவ ரதிசயித்துப் பார்ப்போ மென்று
தானொளித் தினம்போலப் பூசித் தீசர்
தவவுருப்பின் பொளித்து நின்று ராறுநாளிற்
றனிவேட்டை யாடிமுன்போல் யாவுங்கொண்டு
கவனமுடன் வரநம்பர் கண்ணிற் சோரி
கண்டாரன் பருமயக்கங் கொண்டார் தாமே.

பதம் இராகம் பிலகரி தாளம் ரூபகம்.

பல்லவி.

திண்ணர் மிகவும் வாடினர் ஈசர் கண்ணிற்சோ ரியை நாடி
கண்ணிக்கூ டிடவோடித் (திண்ணர்)

அநுபல்லவி.

(1) வனஞ் சென்று வேட்டமாடியே-யாருந் தினத்திலுற்
பனங் கண்டு வேட்டம் நீடியே-யிறைக் கென்னமோ
வென்று
மனங்கொண்ட வே கமொடு தாண்டி
வந்தரனைக் கண்டிடவும் சிந்தைமயக் கந்தொடவும்
(திண்ணர்)

(2) மலர் நேர்கை யூனுஞ் சிதறவே-யலங் கோலமோடுந்
தலமேல்விழுந் துடலம் பதறவே தெளிந் தெழுந்தவுடன்
வெஞ்

சிலை வேடர்மோ சிப்பரெனவுந்
தெரிந்தேனே படுபாவி பிரிந்தேனேயெனமேவித் (திண்)
(3) தேடியும் யாருமில்லையே-யென்செய் வேனென்மனம்
வாடிப்பச் சிலையி னெல்லையே-கண்டு பறித்துக் கசக்கி
ஓடி வந்தும் பிழிந்து கண்சோரி
யொழுகச் சகியாமலுருகி யழுகப்புனல் வாரமருகித் (திண்)

விருத்தம்.

பச்சிலைச்சாற் றூம்பற்று ததனைக்கண்டு-பரிந்தினியென்
செய்வதெனத் தெரிந்துமுண வாக்கி
வச்சிலையூ னமுறூட்டு மணிவண்ணத் திண்ணர்—வையமகிழ
ப்பர் கண்ணுக்கூனம்வரக் கண்டு
துச்சமுறு மெனக்கிகண் ணிருக்க வையர்க் கொருகண்
டுன்புறலன் யாயமென வன்பின்மனித் தோர்ந்து
மெச்சிமகிழ் வாகமுன்னின் றுபசரித்தங் கிரங்கி-வேண்டி * யப்பி
னூற்கண்ணைத் தோண்டி ‡யப்பினாரே.

பதம் இராகம் சென்ஸுருட்டி தாளம் ரூபகம்,

பல்லவி.

குருதி நின்றிட மகிழ்ந் தாரே. (மனம்)

அநுபல்லவி.

கருதி யிடந்து கண்ணைப் பொருதினர் நேரே (கருதி)

சரணங்கள்.

(1) ஊனுக்கூ னிடில்நன்று யொட்டும்-என்று
தானேநி தானித்துச் சரிபார்த்துக் கிட்டும்
தேனுக்கி ணைவிழியைத் தொட்டும்-ஈசர்
திருநய னத்தினில் வைத்திடவேமுன் கொட்டும் (குருதி)

* அப்பினல் அம்பினல் ‡ அப்பினர் அற்பணஞ் செய்தார்.

(2) புயங்கள்பு டைகசுத்தட்டிப் பார்த்து-மினிப்
பயங்கர மில்லையெனப் பரிந்தெதிர் பார்த்து
நயந்துகொண் டாடினர் காத்துச்-செய்த
நன்மதி யைப்புகழ்ந்தா நன்மத்தம் போர்த்துக் (குருதி)

(3) இனிமேல் குறைச்சலெனக் கேது-வும்மைத்
தனியேவிட் டுப்பிரிந்த தால்வந்த தீது
இனி யெந்த னிடத்தில்வ ராது-ஜக
தீசரே மெனப்புகழ்ந் திருந்தாரப்போது (குருதி)

பத்தியம் இராகம் ஆநந்த பைரவி.

கண்ணிடத் திழிசோரி விண்ணிடம் பொழிமாரி
காணவே வழியவது தேர்ணுமலே
உண்ணிறைந் திடுமுவகை யெண்ணிலன் பொடுபெருகி
உருகியே வுயிரையும் பேணுமலே
திண்ணார்கின் றிடவுமவர் தன்னினன் பினையினமும்
எண்ணுலக ரியவையர் கோணுமலே
வண்ண முறு தமதிடக் கண்ணிலுறு சோரியும்
வாரவே காட்டவுட னுணுமலே
அண்ணலுந் தைரியம தாகநின் று
அருமருந் தொன்றுகை வசமிதென் று
நண்ணியவர் கையம்பு விழியிலொன் று
நாட்டலுன் றினர்வேட ராஜரன்றே.

பதம் இராகம் காம்போதி தாளம் சாப்பு.

பல்லவி.

கண்ணப்பா வெனக்கூறின ரன்பர்தன் கண்ணைப்பார்த்
திடக்காதே நில்லுநில்லென் (கண்ணப்பா)

சரணங்கள்.

வண்ணப்பா ரிடந் தோன்கண்ணும் நின்கண்
மலர்க்கிணை யாமோ சிலைக்கைக பொருந்துமென் (கண்ணப்பா)

சரணங்கள்.

1. (a) இடந்தப்பி ஞலு (b) மிடந்தப்பு மென்றே
மிடக்காற்செ ருப்பா லிடக்கண்ணி லூன்றித்
தடந்தப்பி டாமலப் பைக்கண்ணி லூன்றச் சகிக்கேமென்
றன்பர்கை தன்னைப்பி டித்தெந்தன் (கண்ணப்பா)

(2) அய்யர் தடுக்கத் தடைக்கடங் காதபே ரன்புபெ ருகப் போரா
சைபெ ருகநின் செய்யவ டிமைத் திறங்கண்டு வந்தோ
மெத் தேவரும் நின்னடி யாவாஞ் சேல்பக்திக் (கண்)

(3) பூசைபு ரிசிவ கோசரி யார்மெய் புளகுற வேதன் மகிழ்
வுறு விண்ணவர்
மாசகல் புஷ்ப மழைபொ ழியநன்
மறைகள் துதித்து மகிமை மொழியவென் (கண்ணப்பா)

கலித்துறை.

* தண்ணப்ப ராமதி சூடும் பரம தயாநிதியுங்
கண்ணப்ப ராகிய திண்ணப்பர் தாமரைக் கைப்பிடித்திங்
‡ கெண்ணப்ப ராவன்ப நம்வலப் பால்வடி வெய்திநில்லென்
† றண்ணப்ப ராதிபர் சேர்த்தார் தழுவி யணைத்துக்
கொண்டே.

மங்களம்-இராகம்-சுருட்டி-தாளம்-சாப்பு.

பல்லவி.

மங்க ளஞ்ஜய மங்களம் சந்த தமும்மங்களம் நய மங்களம்

---

(a) இடந்து அப்பினுலும்—தோண்டியப்பினுலும்.
(b) இடந்தப்புமென்று இடத்தைவிட்டு நீக்குமென்று.
* தண் அப்பு அரா—குளிர்ச்சிபொருந்திய, கங்கையையும், சர்ப்பத்தையும்.
† எண்ணப் பரா அன்ப எண்ணும்படியான, சிரேஷ்டம் பொருந்திய அன்ப.
‡ அண்ண ப்-பரா-அதிபர்-நெருங்கிநிற்கும், பார்வதிக்கு நாயகர்.

அநுபல்லவி.

மங்கைதன் பாகருக்கு மறைமொழி யோகருக்குங்
கங்கண நாகருக்குந் துங்கவை போகருக்கும் (மங்களம்)

சரணங்கள்.

(1) தொண்டர்க ணேசருக்குஞ் சொரூபப்பிர காசருக்கும்
அண்டர்வி சுவாஸருக்கும் அணிகாளத் தீசருக்கும் (மங்)

(2) வனவந்தி வண்ணருக்கு மகிழுமுக் கண்ணருக்கும்
தின * மன்ப ரெண்ணருக்கும் செயும்பக்தித் திண்ணருக்கும்

(3) மழவைச்சி தம்பரஞ்சொல் வளரும்பெருங் கவிக்கும்
தழைக்கும்க ருணைசெய்ச தாசிவர்க்கும் சிவைக்கும் (மங்)

கண்ணப்பநாயனார் சரித்திரம்.

முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆ லாவணி | 2. | ஸவாய் | 2 |
| லாவணி. அல்லது பஞ்சசாமரம் | 1. | வெண்பா | 3. |
| ஆர்யா | 4. | கலித்துறை | 5. |
| பதம் | 14. | கண்ணிகள் | 2. |
| விருத்தம் | 13. | பத்தியம் | 1. |
| மங்களம் | 1. | ஆ மொத்தம் | 48. |

ஆ சரித்திரங்கள் 11-க்கு உருப்படிகள் 295.

* அன்பர்-எண்ண-ருக்கும்-அன்பர்கள் எண்ணும்படியான வேதமும்.

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிச்சிற்றம்பலம்.

# 12 குங்கிலியக்கலய நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்-கல்யாணி. தாளம்-சாப்பு
(பஞ்சசாமரமாகவும் பாடலாம்.)

(1) பூமருவிய மணிகளையலை யால்மகிழ்ந்தெங்கும் வீசியே
தாமருவியெக் களித்துக்கொழிக்குந் தண்புனல்சல ராசியே.

(2) போலும்பொன்னி நாட்டில்மிருகண்டு பாலர்க்காயன்பு சாலவே
காலனையடர்த் திடும்நம்பர்திகழ் கடவூரிற்கதிர் போலவே

(3) விளங்கும்வேதியர் குலத்திற்சிறந்த களங்கமில்லாத வாய்மையார்
உளங்கனிந்தன்ப ருபசரித்தமு துணவிக்குமனத் தூய்மை யார்

(4) சைவமுத்திரை தரிக்குமன்பரைச் சம்புவென்றகத் துன்னு [வார்
நைவரும்பொழு தினும்பரசிவ நாமங்களையே பன்னுவார்

(5) ஈசர்கைங்கி ரியமின்றிக்கன் விடத்தும் வேறொன்றும் புரிந்திலார்
மாசிலீசன்றாள் பூசிப்பதன்றி மற்றைவழக்கந் தெரிந்திலார்

(6) நிகமாகமசாஸ் திரத்தினுட்பொரு ணிமலாடியென் றோர்ந்துளார்
தகைமைசேரீசர் திருவடிகளைச் சார்ந்திடவன்பு கூர்ந்துளார்

ஆரியா.

இத்தகை மேவிய சீரா
 ரிசைமே வியகலை யனுமெ னும்பெயரார்
அத்தர் பணிவிடையி னேரே
 அடியார் மகிழுவி வர்போலெ வர்செய்வாரே.

பதம்—இராகம்-கமாசு. தாளம்-சாப்பு.
(மாநினீ மனஸ் யாலகாரகதே என்ற ஜாவளி போல)

பல்லவி.

முத்திவிரும்பி பக்திபுரிந்திட் டார் ஜீவன் (முக்தி)

அநுபல்லவி.

நித்தியாநித்யவஸ் துவிதென் றறிந்திட் டார் ஜீவன் (முக்தி)

சரணங்கள்.

(1) அமிருதகடேசர் தாளோடி
 யமிதஸித்திகள் கூடியே (முக்தி)

(2) பாபரகித ராய்க்குங்கிலிய
 தூபமீசருக் கூட்டியே (முக்தி)

(3) கலையனுரும்விற் சிலையினுரென்று
 நிலையனுரெனப் போற்றியே (முக்தி)

(4) நம்பரிடத்தில் வாசஞ்செய்திட
 வன்புடன்வாஸங் காட்டியே (முக்தி)

ஸவாய்.

(1) *காலயி லும்பணி யாரத்தி னுர்க்கு
 மெக் † காலேயி லும்பணி யார்வமதாகி

---

* காலயிலும்-காற்றைப்புசிக்கின்ற †எக்காலேயிலும்-எப்பொழுதும்

(a) வெலையி லாமைபோ லேந்தடக் கெமறு
வேலையி லாமையிவ் வேலையாகி

(2) வேதனை சேர்சொலும் வேதிய னன்புற
வேதனை நன்மனத் தாலுமுன்மூன்று

(b) சோதனை யட்டவர் சோதனை செய்திட
வாதனை யாமன மீதுநை வாரே

பதம். இராகம்-பியாகு. தாளம்-ஆதி.
(தொடிமங்தெடபாதலாவே என்ற இந்துஸ்தானி போல)

பல்லவி.

பக்தி சற்றும்விட்டி டாரே

அநுபல்லவி.

மித்தை மாயைமூடிடு மெனு விமர்தானை நாடும் (பக்தி)

சரணங்கள்.

(1) பஞ்சம் வந்தகாலுமே நெஞ்சம் மலைவிலாதுமே
மிஞ்சும் பணைகள்முற்றுமே விலை
கிஞ்சித்தாய் விற்றுமே (பக்தி)

(2) பணிதி விலைகள்புரிந்தும் கணிதியாகப்பொருந்தும்
மணிசேர் காவிகள்விற்று மிகத்
துணிவுடனே பற்றும் (பக்தி)

(3) கலையா வடிமைநீக் கினர் சொலையார் வேதவாக்கினர்
கலையார் பொருளறிந் தவர்
நன்மைக் கலையனு குஞ்சிவ (பக்தி)

---

(a) சமுத்திரத்திலுள்ள ஆமைபோல்
(b) சோதனை-மூன்று கோட்டைகளை அதாவது திருபுரங்களை.

வெண்பா.

* செய்ய வருமைச் சிறுவர்களும் பத்தினியும்
† வெய்ய வறுமையினுல் மெய்தளர்ந்து—நைவதையும்
பாராத நண்பரையே பார்த்து மனைவியருஞ்
சோரா வுரைப்பர்முன்வந் து

இராகம்-நாதநாமகிரியை. தாளம்-ஆதி.

கண்ணிகள்.

(1) பொறுமை யுள்ள யெந்தன் றரும வுருவே கிருபை
பொருந்திய பிராண நாதா—யிந்த
வறுமை யாலே படுஞ் சிறுமை பொறுக்க வென்னுல்
வசமோ தெரியாதா

(2) மழை காணுத பயிர் வாடுவ துபோற் சிறு
மதலைகள் படுந் துன்பமே
பழையப டிக்கதிதி களைக்கண்டுப சரிக்கப்
பாவிக்கு மோ வின்பமே

(3) கொள்ளித் தேளின் கொடுக்காற்
கொட்டல் போலும் பசியாற்
குழந்தைகள் மிக வாடுதே
அள்ளிப் போடுஞ் சோறுக்குந்
தண்ணீர்க்கு மேக்கமுறு
மவதியாற் களை போடுதே

(4) சா முணர்ந்து விக்க லெடுத்து மூர்ச்சை யாகித்
தானே விழிகள் சுற்றுதே
வாமிப்ப டிக்குமுன்னம் வாங்கிவந் தோமோ மெத்த
வயி றடிக் கடி பற்றுதே

---

* செய்ய அருமை-செம்மையான அருமையுள்ள.
† வெய்ய வறுமை-கொடுந்தரித்திரமுள்ள.

(5) கொடிய பாபி யுமிந்தக் குழந்தைக ளின்றுன்பத் தைக்-
கூசாமற் பார்ப்பா ளோ
அடியவர் புகழ்ந்திடு மன்பரே யிந்தத்துன்ப
மதைச்சகிக் கநா ளோ

ஸ்வாய்.

(1) அய்யர் மனைவியர் வெய்ய கொடுந்துய
ராலுமெ லிந்து கரைந்தன ரே
துய்யா டியில் விழுந்து மயங்கி மெய்
சோர்ந்தன்பு கூர்ந்து வரைந்தனரே

(2) நாளிரண் டாகியும் பிள்ளைமு கத்தினை
நாடிலீ ரென்று தவித்தனரே
வேளைக்கு தவுமிம் மங்கிலிய ங்கொண்மி
னென்றுசொல் லிக்கைகு வித்தனரே

கலித்துறை.

‡ பொன்னு ணெடுந்திரு மங்கிலி யங்கையிற் போற்றிநல்கி
X மின்னு ணெடுநிற்க வேதியர் நெற்கொள வேசெலவே
அந்நா ளொருவன் பொதிநிறை குங்கிலி யங்கொடிவர்
முன்னல் வாயிது வென்னென்று கேழ்க்க மொழிந்தனரே.

இராகம் இந்துஸ்தானி-காபி. தாளம்-அட தாள சாப்பு.

கண்ணிகள்.

(1) வேதியரேவணிக ஜாதிவியாபாரி ஸஞ்சாரி சொல்லும்
வித்தகரே கேளும் முத்தி யாளும்
கோதில்லாத நன்மை மாதவரே சும்மை வெண்மைக்
குங்கிலியப் பார மென்றுகூற

‡ பொன்னுணெடு-பொற்கயிறுடு X மின்னுணெடு-பெண்ணாணத்தோடு

(2) ஈசரன்பு செய்ய வாஸமிகு மாகில் மோகித்
தேர்க்கலாமென் றய்ய ருரைசெய்ய
தேசிகனுங் கேட்டுச் செப்புமறை
யோரே நேரே யேது
செய்வீர்பொன்னுக் கென்ன மொழி பன்ன

(3) மங்கிலீய மீயக் குங்கிலியப் பொதியே
நிதியே யென்ன
வாங்கினுரென் னய்யர் மகிழ்செய்ய
அங்கம்பூரித் திடவே யணுகும்பவங்கள்
விடவே யடைவே
யாகுமில்லை மறந்தா ரனைத்துந் துறந்தார்

## வெண்பா.

சாலிமறந் தார்நல்குந் தாலிமறந் தார்பாக்ய
சாலியுநா னென்னக்கூத் தாடினுர்—மேலாம்
பெரும்பேற்றை விட்டுப் பெறுப்பேற்றை நச்சி
விரும்புவரோ வென்றுரைத்து மே.

## ஸ்வாய்.

(1) மங்கிலி யத்திற்குக் குங்கிலி யச்சுமை
வாங்கினர் தோளினிற் றுங்கினர் நேரே
பொங்கியே யானந்த பாஷ்பம்வி ழிகள்
பொழியமெய் ரோமம்பு ளகுறுவரே

(2) ஆருற்ற செஞ்சடை யாரத்தர் கோயிற்பண்
டாரத்திற் சேர்த்தனர் தீரத்தி னுரே
தாரத்தை மைந்தர்கள் வாரத்தை யும்மறந்
தாரத்தையார்சொல்லு வார்சித்தி யோரே

பதம். இராகம்-பியாகு. தாளம்-சாப்பு.

## பல்லவி.

வந்தித்துப் பசித்தார் ஈாமாமிருதஞ் சிந்தித்துப் புசித்தார் (வந்)

அநுபல்லவி.

சந்தவு மைநேசரை யெந்தை யீ ரட்டேசரை (வந்தித்து)

சரணங்கள்.

(1) கறுத்துப் பவத்தையும்வே ரறுத்துப் பெரும்பசியைப்
பொறுத்தீஷ ணுத்திரயத்தை வெறுத்துக்க
ருத்திருேடும் (வந்தித்து)

(2) அவத்தைப் போக்கிப்பெருந் தவத்திற்
றேக்கிச்சொலுந்
துவத்தை நீக்குப்பா சிவத்தை
நோக்கித்தனி (வந்தித்து)

(3) மலையை நாணிபெறுஞ் சிலையெ ணுவளைத்த
நிலையி னுரைமறைக் கலைய ஞர்துதித்து (வந்தித்து)

ஆர்யா.

இத்தன் மையமே வினரே
யிவர்தம் மனையினை யுமீசர் புநிதுறவே
மெய்த்தன் பொடுசெய் திடவே
மிகவே யுபர்வா கியேயி ளங்கிடவே

பதம். இராகம்-பியாக். தாளம்-ஆதி. மிசிரகதி.

பல்லவி.

அத்தருள் செய்தோங்கவே குபேரன்நிதி
வைத்தனன் கலிநீங்கவே (அத்தர்)

அநுபல்லவி.

எத்திசையு முள்ளபன்னெண் ஸித்தர்தேவர் மாலயர்க்கு
மெட்டாத தாளர்வீ ரட்டானம் வாழுமெங்கள் (அத்தருள்)

சரணங்கள்.

(1) விண்ணவர்ப திகளும்வெட்க அடுக்கடுக்கா
நண்ணுமுப்ப ரிகைகள்மிக்கச் சொர்ணகுடங்கள்
எண்ணிலாது கதிரொளிக்க விளங்கிவாஸ
மெங்கினிலும் பரிமளிக்க வகிற்புகைகள்
வண்ணமுறு மேகங்கள்போ
லெண்ணிலாது கும்புகும்பா
வானிலுற வேயிந்த்ரன் மானசபை
மானவன்பார்க் (கத்தாருள்)

(2) குவைகுவை யாகப்பொன்களும் நவையில்லா
நவமார்ந வரத்தினங்களும்
செவையாகி யநகைகளும் பாத்ரங்களும்பு
தியதாப்ப லவகைகளும்
எவைகளு மேருவென வேகுவித்தி ருக்கப்பசு
வின்கூட்ட முங்கன்றுக ளின்கூட்ட மும்
பெருக (அத்தாருள்)

(3) பல்வளங்க ளுஞ்சிறக்கவே கருணைசெய்து
நல்லவர கம்நிறக்கவே
செல்வருடன் ருய் கிரங்கவே மயங்கிமூர்ச்சித்
தேதனைவி ழுந்துறங்கவே
நல்விரதர் மனைச்சொற்ப னத்திலுரைத் திடமன
நாடியெழுந்து பார்க்கக் கூடிநிச
மாகமகிழ்ந் (தத்தாருள்)

ஸ்வாய்.

(1) கண்டுவ ணங்கிப்ப ணிந்தினு நந்நீல
கண்டா ருளென்றுட் கொண்டனர் தாமே
எண்டிசை யும்புகழ் தொண்டரா நண்பர்க்
கினியவ முதட்டச் செய்தன ராமே

(2) இவ்வித மிக்குறச் சைவசி காமணி
யீசர்தங் கோயி லிருக்கவுந் தேடிச்

செவ்விய நவ்வியர் பவ்விய ரொவ்விடத்
திவ்விய மாயிதைச் செப்பினர் நாடி

(3) அன்பனே நீமெத்த வெம்பசி யாலிளைத்
தாயில மேகிப்பா லன்னமுண் டாறி
யின்புணர் வாயெனுஞ் சொல்லுணர்ந் துமறுக்
கிற்பிழை யென்றஞ்சி யேகினர் தேறி

வெண்பா.

* மனையா தெனமயங்கு மய்யர் புகழ்சேர்
† மனையாற் றெரிந்துபுக்கு வன்ன—மனையாயீ
தென்ன புதுமையென வீசர்செய லென்றுரைக்கத்
தன்னகத்தில் மிக்கமகிழ்ந் தார்.

பதம். இராகம்-அடாணா. தாளம்-ஆதி.

பல்லவி.

களித்தா ரின்பத்திற் குளித்தார் வளர்கலையனார் கலையனார் (களித்)

அநுபல்லவி.

அளித்தா ளெனும் பாலகர்க் காயெமனை
யடர்த்தா ரருளால்வரு நிதிகண்டு (களித்)

சரணங்கள்.

(1) பன்மணி யால்விளங்கு மாடங்க ளையும்பொற்சு
தன்மைபோ லிலங்கும் கூடங்க ளையுநோக்கிக் (களித்)

(2) இருளைநீக் கிவிளங்கும் பொருளையு மிறையவ
ரருளையு நாடிமிகத் தெருளும னத்தார்மெத்தக் (களித்)

(3) பூவுல கத்தவருந் தேவுல கத்தவரும்
மேவுதற் கரும்பொருள் யாவையு நாடியகங் (களித்)

* மனை—வீடு. † மனை—சம்சாரம்.

(4) இருமையுந் துறந்தவ ரொருமையைக் கண்டுநம்பர்
அருமைய தாயளித்த பெருமையை யெண்ணி யெண்ணிக்
(களித்தார்)

விருத்தம்.

ஈசர்திரு வருளைக்கைக் கைகூப்பிப்
பணிந்துபணிந் தெழுந்துநம்பர்
மாசகலுங் குணங்கடமைச் சுருதிகளி
னுலும்சை வாகமங்க
ளோசைபெறு மொழியாலுங் கோஷித்துத்
துதித்தேற்றி யுவந்துதொண்டர்
நேசமிகும் விருந்தரொடு மிருந்தமுத
மருந்தினர்நன் னெறிநின்றாரே.

ஆர்யா.

(1) ஸந்தத மமிருக டேசர்
சரணத்வயபுண் டரீக நிஜதாஸர்
சிந்தையு வந்தன் பரையே
சிவவென் றமுதுசெ யவேசெய் திடுவாரே

(2) a அதிதியி லாநா ளுமிலை b
யதிதியு மிலையற் பமான c திதியுமிலை
நதியணி பவரரு ளாலே
நண்ணினர் சிவபக் தியோரு மனதாலே.

ஸ்வாய்.

(1) நித்யமு மிப்படி யற்பின்மி குத்தவள்
விற்பனர் மெய்நிழ லொத்திட நேரே
சித்தமதிற்கனி வுற்றும னைத்தொழில்
பக்தியு றச்செய்தி டத்திகழ் சீரே

a விருந்தினர். b கெட்ட திதி. c செல்வம்.

(2) நாளும்பொ ருந்தினர் நீளுந்தி ருப்பனந்
தாளிற்சி வம்வளை வாகின தாலே
சோளநி லத்திறை வேழங்கள் சேனைகள்
சூழவந் திசரை மீளமென் மேலே.

கலித்துறை.

நோக்க வெண்ணி முயன்றெச் சரித்து நிமிர்ந்தில தாற்
போக்க முற்ற வாசன் மயங்கிப் பிழையென்செய் தேன்
தீராக் கவலைக் கெனையாட்செய் தாய் சிவ மேயெனநைந்
தோராக் கருத்துடன் மேயதைக் கேட்டன்ப ரோடினரே.

பதம். இராகம்-பூரிகல்யாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

விரைந்தோடி னானன்பி னார் சகித்திடாமல் (விரைந்)

அநுபல்லவி.

கரைந்தே யுருகிப்பெருந் * கற்றாவைப் போலநாடிக்
கண்ணுத லினைத்தேடி வழியைக்கூடி (விரைந்)

சரணங்கள்.

(1) * கால்கதி யைக் † கால்கதி யாக்கிச் சிவபெருமான்
‡ கால்களின் கதிநோக்கி வினையைப்போக்கி (விரைந்)

(2) ¶ விருப்பநந் தாவடியர் திருப்பனந் தாளைக்கூடிப்
பொருப்பின்வில் லைத்தேடி நேர்செயநாடி (விரைந்)

(3) விதியோ யெவர்செய்திடுஞ் சதியோ யென்றுகருணை
நிதியைக்கண் டாவல்தீர மிகுமன்பூர (விரைந்)

---

* தாயைத் தேடிய கன்றைப் போல.

* கால்கதி—காற்றின்கதி. † கால்கதி—கால்வாசியானகதி. ‡ கால்கள்—பாதங்கள். ¶ விருப்ப நந்தா அடியர்—விரும்பும்படியான கெடாத அடியையுடையவர்.

விருத்தம்.

அய்யர் வரவை நோக்கிவிரைந் தழைத்தல் போற்கொ டிகளாடத்
துய்ய மலர்மா மழைபெய்து சோலை களெலாஞ் சிரமசைத்துச்
செய்ய கனிக ளுதவிவிருந் திடுவான் றிருப்ப னந்தாட்புக்
குய்ய வானோர் திருவுருக்கண் டுற்றுப் பணிந்தங் கெழுந்தாரே.

பதம். இராகம்-முகாரி. தாளம்-ஆதி.

பல்லவி.

ஸகி யாமல் நொந்தார் தரைமேல் விழுந்தார் (ஸகி)

அநுபல்லவி.

விகிருத ருரு விளைக்கண்டு மெத்தவும யக்கங் கொண்டு (ஸகி)

சரணங்கள்.

(1) கோபமோ யெவர்மேல் மன்ஸ் தாபமோ புவியி லுள்ளோர்
பாபமோ வறியேனென்று தாபதர்ம யங்கிநின்று (ஸகி)

(2) தேவர்வணங் கப்பெற்றிடு மூவர்வணங் கவுற்றிடுங்
கோவின்வலை விளைநாட மேவுங்கண்ணீ ராறுயோட (ஸகி)

(3) மேருவில்வ ளைக்கும்போது நேரில்நின்ற விறை யென்ன
காரியங்கண் டோயிப்போது நேரில்நின்றி டாததென்ன ()

விருத்தம்.

இவ்வித முருகிநின்றங் கெழுந்துவெள் ளிடைவந்தய்யர்
தெவ்விலா தடக்குமன்னன் சேனைவெங் கரிகளோடு
மொவ்விய திருப்பணிக்கங் குற்றுநேர் படாமைநோக்கிச்
செவ்வியர் விதனித்துள்ளந் தியங்குவார் மயங்குவாரே.

வெண்பா.

வாடி மயங்கி மறுகியுரு கிப்பணியை
நாடிவந்த சேனையொடு நால்வாய்கள்—கூடி
முயன்றெய்த்து வீழ்ந்தவதன் மூர்ச்சைகண்டு தாமு
மியன்றவருந் தம்பொருத்தா ரே.

பதம். இராகம்-ஹமீர்கல்யாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

சங்காரை நேரே தங்கிடச்செய் தாரே சிவ (சங்கா)

அநுபல்லவி.

ஸங்கடமில் லர்மலே ஸ—ரவர சிவ (சங்கா)

சரணங்கள்.

(1) இலிங்கம தனிதற்பூங்கச் சிட்டதின் மேலே சொலுங் கயிற்றாலே
சொலுங்கயிற்றாற் பிணைந்ததினாற் சிவ (சங்கா)
(2) அக்கயிற் றுடனன்பின் பாசமும் பூட்டி
நற்களத்தில் மாட்டி யன்புபாராட்டிச் சிவ (சங்கா
(3) இயானைசே னையின்றுய ரெனக்குமொவ் வாதோ
ஆனயித் தேகம் போனால் நலமெனச் (சங்கா)

வெண்பா.

ஈசருநே ராகவண்ட மெல்லா மிகநேராய்
மூசிவிழுந் சேனைகளு மோதிவிழுந்—தேசுபெறுந்
தந்திகளுங் கார்கண்ட தண்வனம்போ லுங்தொண்டர்
சிந்தையெல்லா மேநிமிர்ந்த தே.

விருத்தம்.

கண்டத்திற் பூட்டியெங்கள் கலையனு ரொருமைப்பாட்டின்
அண்டர்நா தனையிழுக்கு மதுவரை பொறுக்கு மோமும்
மண்டலத் தவருமார்க்க வானவர் மலர்கள்மாரிக்
கொண்டல்போல் பொழியவீசர் குனிப்புரு நிமிர்ந்தவன்றே.

ஸவாய்.

(1) இன்னபு துமையைக் கண் டவய் யரென்
னிறையேகு றைதீர்ந்த தென்றன்பி னுடி
மன்னும்பு வியில்வி ழுந்துவி ழுந்து
மறைமொழியாற் றுதி செய்யவுங் கூடி

(2) ஆனந்த பாஷ்பங்க ளால்நனைந் தேமிகு
மன்பினிற் கச்சோள மன்னவ னோடித்
தானந்தி கழுமி றையைப்ப ணிந்தய்யர் தந்துணைத்
தாளைவ ணங்கினன் கூடி.

ஆர்யா.

கூடிவ ணங்கிம கிழ்ந்து குணமே வியகலை யனர்பு கழ்நினைந்து
நாடிம னதினில்ம தித்தான்-நாவின் பயனிது வெனு நனிதுதித்தான்

பதம். இராகப்-கானடா. தாளம்-ஆதி.

பல்லவி.

யானே தங்கள் பெருமைதெ ரியாதவ னேனேன் (யானே)

அநுபல்லவி.

ஞானஸா காகிரு பாநிதி யேகலைய னரேயென்
பிழைபொறுப் பீரே யிப்போது நேரே (யானே)

சரணங்கள்

(1) அபகீர்த் தியெனைவந் தடையா மற்புரியுந்
தபமேப ழுத்துவந்த தாவந்தீ ரென்றறியா (யானே)

(2) எந்தவு லகிலுண்டு யிந்தக்கண் காட்சி தந்தீர தற்குநீரத்
தாட்சி தாட்சிசெயும் (யானே)

(3) அருந் *தவர் வாழ்மேருவைப் பெருந் † தவ ராக்கி
‡ யிருந்தவர்க் குத்தவரிட் டேனெனு மலாக்கியும் (யானே)

விருத்தம்.

திரிபுரங்கள் வேவுறவை திகத்தேர் மேவிச்
செழும்பொன்வரை குனித்தார்செந் நிலையைக்காண

---

* தவர்—தபஸ்விகள். † தவர்—வில்லு. ‡ இருந்தவர்க்கு—இருந்த பேருக்கு.

வுரிமையுடன் செய்ததற்கிவ் வுலகிற்கைம்மா
றுளதோசே டனுஞ்சொல்ல வலதோ மாலும்
பெரியமண் ணுண் டதனினுங்கா ணுதசெய்ய
பெற்றிபெறு மடிகளையன் பர்களையன்றித்
தெரியவெவர் நேர்காண வல்லரென்று
செப்புதுதி செய்துமகிழ்ந் தேத்தினரே

ஆர்யா.

(1) அரியவ ரிணையடி போற்றி
யானர் மணமகி ழவேமி கவுமேற்றி
யுரியதி ருப்பணி யாற்றி
யுயர்வா னசிறப் பதாக மலர்நாற்றி

(2) வாஸமி குந்திட வெங்கும்
மறையோ விடவிய மனேக வொலிபொங்கும்
நேசர்கள் சூழ்தா நேரே
நேவ தனமிஞ் சவேசெய் வித்தாரே.

வெண்பா.

அடைவிற் பெருஞ்சிறப்பை யாற்றி வளவன்
விடைபெற்றுத் தம்பதியை மேவத்—தடையின்றி
நங்கலைய னர்சிலது நாளங் கிருந்தரனை
மங்களஞ்சேர் தோத்திரஞ்செய் வார்.

பதம். இராகம்-எதுகுல காம்போதி. தாளம்-சாப்பு.

(கீர்த்தியாகவும் பாடலாம்.)

கண்ணிகள்

(1) சந்த்ர சேகரா ஸுந் தரசுபாகரா
மந்த்ர ஸாகரா உ மாமனோகரா

(2) நாக பூஷணா பக்த ராக சோஷணா
யோக போஷணா மித்யா போக தூஷணா

(3) கருணை நோக்கினீ ரபக் கியாதி நீக்கினீர்
தரும வாக்கினீ ரெனைத் தன்ய னாக்கினீர்

(4) கலக நீங்கவே வுல கையெலாந் தாங்கவே
நிலையி னோர்நின் றீர் கன்னற் சிலையன் றனைவென் றீர்

(5) அடியர் பெருமையை வெளி யாக்கு மருமையைப்
படிய றியச்செய்தீர் க்ருபை யடிமை மீதுபெய்தீர்

விருத்தம்.

இவ்விதந் துதித்தங் கிருந்தவர் விடைகொண்
டேகியே திருக்கட வூர்க்குச்
செவ்வியர் புக்கு வமுதக டேசர்
திருவடி பணிந்துறு நாளில்
திவ்விய ஞானப் பிள்ளையா ரினிய
செழுந்திருத் தாண்டக வரசோ
டொவ்வியங் கெழுதல் கேட்டெதிர் சென்றங்
குவந்தடி களிற்பணிந் தனரே.

வெண்பா.

பணிந்தெழுந்தா னந்தப் பரவையிட மூழ்கிக்
* கணிந்தாவி யங்கிகண்க ளானார்—இணங்குதிரு
மேனிநேர் கண்டதினு மிக்கமகிழ் வாகியமைத்
தானவுப சாரஞ்செய் தார்.

பதம். இராகம்-ரீதிகவுளை. தாளம்-சாப்பு.

பல்லவி.

உபசரித் தாரே தபசரி தருமகிழ்ந் (உபசரித்தாரே)

அநுபல்லவி

சுபசரி தற்குமனத் தூயர் நேயமொடு (உபசரித்தாரே)

---

* கண் இந்து இரவி யங்கி கண்களானார்-சோம, சூரியாக்கினி யென்னும் நேத்திரங்களை யுடைவர்.

சரணங்கள்.

(1) கண்டேனே காட்சி தங்களருளாற் கொண்டேனே மாட்சி
தொண்டனி லத்திற்பாதத் துணைவைத்தீர் தாட்சியேதென்

(2) இருவினை நீக்கி யெனையுந்தொண்டி லொருவனென் றாக்கி
யருளினீரென்
றருமலர்க் கைகளா லடிவணங் கிநோக்கிநின் (றுபசரித்)

(3) ஆதன மிட்டுப் பரிகலத்தின் மீதனம் வட்டித் தறுசுவையோ
டேதமில் மருந்தைமட் டிடுமினி யவிருந்திட் (டுபசரித்)

விருத்தம்.

* அருங்கலைய னுருபச ரித்ததையு
மெயன்பையுங்கண் டானந் தித்துக்
† கருங்கலைய னுமிவர்க் காணில்மெழு
காவரெனக் கருதி யோர்ந்து
‡ நெருங்கலைய னுதரவோ டிகழ்குழலார்
மண்பொன்மய நீத்தோர் செல்லப்
¶ பெருங்கலைய னார்நிகர்பூ சுராரன்பிற்
பிரியாதார் பிரிந்தா ரன்றே.

ஸவாப்.

(1) ஆளுடை யபிள்ளை யாருநன் னாவுக்
கரசும்பி ரியவ ருத்தமுற் றாரே
நாளுமெ மிருதக டேசர்க்குத் தொண்டி
னலத்தின்மி குத்ததி ருத்தம்பெற் றாரே

---

* அருங் கலையனார்-அருமையாகிய குங்குலியக் கலையனார்.

† கருங்கலையனாரும்-கருங்கல்லை யொத்தவரும்

‡ நெருங்கு, அலை, யனுதரவோடு-நெருங்கும்படியான இருட்டை ஆதரவன்றியிருக்கும்படி

¶ பெருங்கலையனார்—பெருங்கலையையுடையவர், பிரமனென்றுவது சோமனென்றுவது கொள்க.

(2) நேர்ந்தப ணிவிடை யோர்ந்துசெ யும்பக்தர்க்
ஈந்தனர் தம்பதம் சார்ந்தனர் நேரே
வாய்ந்தசி வபெரு மானரு ளால்திரு
மாமலை புக்கினர் மாமறை யோரே.

பலசுருதி சந்த விருத்தம்.

இச்சரி தத்தைவி ருப்பொடு மெச்சி யிணைச்செவி யுய்த்தவ ரிடமேவுந்
துச்சரி தத்தையொ ழித்தடி யார்க்கினி துற்றப்ரி யத்தினை யடைவார்கள்
உச்சரி த்தப தத்தினை யுற்றத னுட்சில பற்பக லதின்மேவி
யெச்சரி தத்தக ணத்தொடு நற்கயி லைப்பதி புக்குமருவுவாரே.

குங்கிலியக்கலைய நாயனார் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| லாவணி | 1 | கண்ணிகள் | 3 |
| ஆர்யா | 5 | கலித்துறை | 2 |
| பதம் | 10 | விருத்தம் | 7 |
| ஸவாய் | 7 | சந்த விருத்தம் | 1 |
| வெண்பா | 7 | ஆ உருப்படிகள் | 43 |

ஆ சரித்திரங்கள் 12-க்கு உருப்படிகள் 338.

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 13 மானக்கஞ்சாற நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்-மாஞ்சி. தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

(1) சீர்பொருந் தியகஞ்சா றூரினில் வாழுஞ்
செழிப்புறும் வேளாளர் குலத்திலென்னாளும்

(2) ஏர்பெற வுதித்தறம் வளர்த்திடு நிதியா
நிதம்பொருந் தியவேந்தர்க் கிருஞ்சேனு பதியார்

(3) திருந்திய தன்னீழ லெனவென்று நீங் கா
திருக்கும் பத் தினியோடி சைபெறும் பாங்கா

(4) மருந்தினின் னமுதினை விருந்தர்கட் களிப்பார்
வளர்பிறை யெனப்பத்தி விளைதாக் களிப்பார்

(5) இத்தகை பொருந்திய திருமனை மகிழ
நத்தின் வைத் துதித்த முத்தெனத் திகழ

(6) வித்தகம் பெறவோர்கன் னிகையினைப் பெற்றார்
வினையுறுசீர் தழைவுற மிகச்செழிப் புற்றார்

பதம். இராகம்-மாயாமாளவ கௌளை. தாளம்-ரூபக சாப்பு.

பல்லவி.

மனது மகிழ்ந்தார்

அநுபல்லவி.

வனமார்ம களைப்பெற்று மனையுட்கஞ் சாரு (மனது)

சரணங்கள்.

(1) கொஞ்சநாள் மகவில்லாக் குறைவிலீ சனைத்துதித்
தின்சொல்ம னைவயிற்றி லேமக வுதிக்க (மனது)

(2) பிறவித்து யாநீங்கப் பெருஞ்செல்வ மோங்க
நிறையும் பயிர்க்குமழை குறைவில்லா ததுபோல் (மனது)

ஸ்வாம்.

(1) அன்பர்ம கிழ்ந்திட வின்பமி குங்கிள்ளை
யஞ்சொற்பு தல்வி வளர்பிறைபோல
பம்பும ணப்பரு வம்பெற நாளின்
பயிற்புறக்கேட்டு மிகுமகிழ் சால

(2) பாங்குபெ றுமேயர் கோன்கலிக் காமற்குப்
பண்புறுந் தங்கள் புதல்வியைச் சாரத்

தேங்கமழ் மன்றல்செய் விப்பிரொன் ருன்றோர்கள்
செப்பிட வொப்பினர் மானக்கஞ் சாறர்

ஆர்யா.

இசைமொழி யைக்கூ றிடவே
பிருமன் றலினு ளின்மேவ நேரிடவே
இசைபக்தர் களொடு நாம
விக்கார்மதனை நிகாரர் கலிக்காமர்

வெண்பா.

மன்றலுக்கு வந்திடுமுன் மானக்கஞ் சாறர்பக்தி
யின்றன் பெருமை யினைத்தெரிய—நன்றருளைச்
செய்யவெண்ணி யீசர் திருவுருமா றிக்கொடன்பர்
உய்யும்வணம் வந்தா ருவந்து

பதம். இராகம்-பியாக். தாளம்-ஆதி.
(சாகிஸபையாபன சித்ர என்பது போல)

பல்லவி.

மாவிர தியர்போல வேவிரை வினிலீசர்
வந்தாரே மன துவந்தாரே

அநுபல்லவி.

மாவின் பத்திேனுடும் வழிகூ டியெங்கள்
மானக்கஞ் சாற ரிலந்தேடிக்—கொண்டாடி (மாவிரதியர்)

சரணங்கள்.

(1) நெற்றியிற் றிருபுண்டர மிகச்சொலிக்கச்சிர
நிற்க வென்புமணி களுங்கலிக்க
பற்றுங்குண் டலங்களும் பணிதிமாலை யென்பாக
பணிந்தன்பர் தாம்பலிக் கமிகஜ்வலிக்க (மாவிரதியர்)

(2) சர்ப்பமாலையைநீக்கி யுயர்யோ கப்பட்டை
தனித்தோ ளிலுமயிர் வடமுமேக

முப்புரி நூலுந் தரித்தித மாகப்-பூதி
பொக்க ணமாக்கட்டிக் கொடுவேக—மொடும் (மாவிரதி)

(3) படிகம ணிச்சூத்தி ரங்கையி லிலங்கத்தினங்
குடியாக வேமறைக் கோவணந் துலங்க
வடிகொளுத் ரியம தன்மீதிலங்க மறைத்தாள்
பஞ்சமுத்ரை யைத்-தரைக்கு ளூன்றித்துலங்க (மாவிரதி)

(4) செம்மேனி விபூதி யுத்தூளி தம்பெருக வன்பர்
தம்மிரு வினைகளுந் தாங்கருக
நின்மலர் நே யமனம் நேயம்போ லுருகத்
தன்மவு ருவங்கண்டோர் தாமனந் தம்பெருக (மாவிரதி)

ஆரியா.

வந்திடு மாவிர தருமே—மானக்கஞ்சா றர்வாழ் வை மிகுபெருமை
சந்தத மேவுற நேரே—தாமுட் புகுதவெ திராகி மனதருமே.

பதம். இராகம்-சென்சுருட்டி. தாளம்-சாப்பு.
(நன்னுகாவவே என்பதுபோல)

பல்லவி.

உப சரிதஞ் செய்தாரே

அநுபல்லவி.

தபத்தி னுயர்மா விரத ரைக்கண்டு
சந்தித்துப்பணிந் (துபசரிதம்)

சரணங்கள்.

(1) தேவ ரீரிங் கெழுந்த ருளிய தினமே ஸுதினந்—தன்ய
னூனே னென மேன்மை பொருந்தும் (உப)

(2) கண்கொள் ளாத காட்சி யைப்பெற் றுக்கனதை
[கொண்டேனே
யிரு வினை களையும் விண்டேனே—யெனவுப (சரிதஞ்)

(3) இவ்வி லஞ்செயுந் தவப்ப யனென விணைப்ப தத்தாளை
சிரத்தில் வைத் துவைத்து மவ்வேளை (யுபசரிதம்)

வெண்பா.

உபசரிதத் தோடு முவப்பெய் திவந்த
தபசரிதர் தம்மடியிற் றாழ்ந்து—நிபுணர்
வினைய மொடுநிற்க விரதியரு நோக்கி
யினைய வுரைசெய்வ ரே

பஞ்சசாமரம்.

(1) மங்க ளக்கு றிப்பி தென்ன வகைசொல் வீர்கஞ் சாரரே
யிங்கென் மக்களுக் கினிய மன்ற லென்ற னா திதீரரே
(2) உங்க ளுக்கு மங்கலங்க ளுண் டாகவென் றும் யோகரே
உங்கள் னிகையை மணக்கோ லத்துட னிங்க
ழையும்வி வேகரே
(3) என்று கூற பன்றல் மகளை யினித ழைத்து வந்தனர்
அன் று மங்ஙனம் பணிய நோக்கி யதிதி மிக்கு வந்தனர்
(4) மின்னி டையின் கூந்த லைக்கண் டென்னய்யரும்
வியந்தனர்
நன்ன யமிக்கு மூல்பூ ணும்நூற்கு நலமென்றிடவே
நயந்தனர்
(5) ஈச ரடியார் குறிக்க விழைந்த தேந லமதா மென்னவே
மாசில் கன்னிகைக் கூந்த லையுடை
வாளினுற்றுணுக் கென்னவே
(6) மங்க லக்கனி யென்றெண் ணுமல்
மகிழ்ந்தடியொடுங் கொடுத்திட்டார்
எங்கி னும்புகழ் பூர்வ புண்யத்
தின்ப யன்கையி லெய்திட்டார்
(7) ஏற்ப வர்போலென் னய்யர் மறைந்தங்
கிமயமாமலை மகளொடும்
மேற்பண் விடையிற் றோன் றப் பூமழை
மேதி னியெங்கு மூடிடும்
(8) படிவிண் ணவர்கள் பொழிய நிற்கப்
பரமருருவங் கண்டனர்

அடிக ளிற்ப ணிந் தெழுந்து மனத்து ளடங்காவானந்தங்
கொண்டனர்

(9) பரவ சத்தொடு மருங்கி னிற்கநம் பரமான்பநின்பயிலன்பை
விரைவி னில்யாரு மறியச் செய்தோம்நீ விடுபெ ரும்பிற
வியின்றன்பை

ஸ்வரம்.

(1) என்றிது கூறியு மீசர்கை லாயத்தை
யெய்திட மானக்கஞ் சாறர்ம கிழ்ந்து
நின்றிட யிவ்வணம் யாவுங்க லிக்காமர்
நெஞ்சமு ருகிடக் கேட்டுப்பு கழ்ந்து

(2) மேயசி வானந்த மெய்திட மின்னுட்கு
மெய்க்கருங் கொண்டலெ னத்திரளாகி
யேயக ருங்குழல் மெத்தவ ளரவு மீந்தனர்நங்கலிக்
காமற்கன் பாகி

பதம். இராகம்-ஸாவேரி. தாளம்-ஆதி.

பல்லவி.

மாதை மகிழ்வாகக்கலிக்காமர் மன்றல்புரிந்துகளித்தார்
யின்பவாரிதி யிற்குளித்தார் (மாதை)

அநுபல்லவி.

மாதயை மேவுகஞ் சாறர்சுற் றத்தாரொடும்
வானமகிழக்கன்னிகா தானமாக நல்கவந்த (மாதை)

சரணங்கள்

(1) பூமல ராலெங்கினு மிசைந்த பந்தர்கள்துன்னப்
பொருந்து மணியிழைத்துத் திருந்தும் பீடத்தில்மன்ன
மாமறை யவராசீர் வதித்திட வெகு
க்ஷேமமு றயாவருந் துதித்தி டத்திரு (மாதைமகிழ்)

(2) பல்லியத் தினொலிக ளண்டகோ ளத்தைமுட்டப்
பாவையர் கள்மங்கலம் பாட மிகவுமிஷ்ட
மல்கும் பெரியோர்கள் சூழ்ந்திடத் திரு
மங்கலத் தினைப்பூட்டித் துங்கமுடன் வாழ்ந்திட (மாதை).

(3) பூமழை களுடனே பொன்மழை யுஞ்சிறக்கப்
பொழிந்து வருங்கவிஞர்க் கிரு நிதி யுநிறக்க
வேமகிழ் வாயிசை யோங்கவே நல்கி
நேமமு றுமில்லறந் தாங்கவே யெழில்பொருந்து (மாதை)

ஆரியா.

தம்பதி யாமன நாடித் தம்பதி மேவிமி கவேநல் லிசைதேடி
அன்பர்க ளுக்கமு திட்டா ரைம்பொறி யாறின் மனதே
கிடவுமொட்டார்

பலசுருதி விருத்தம்.

மகளின்கூந் தலையெண் ணுது வரும்பக்தர்க் கரிந்துநல்கும்
புகழின்கஞ் சாறர்செய்யப் புனித மாஞ்ச சரிதந்தன்னை
மிகவிரும் பினர்கேழ்ப்போரின் மேதினி யின்பமூழ்கித்
துகளறும் கைலைமேவிச் சுகம்பெற்று வாழ்வர்மாதோ.

மானக்கஞ்சாற நாயனார் சரித்திரம்.

முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆ லாவணி | 1. | ஆரியா | 3. | விருத்தம் | ட. |
| ஆ பதம் | 4. | வெண்பா | 2. | ஆ | 14. |
| லவாய் | 2. | பஞ்சசாமரம் | 1. | ஆ சரித்திரங்கள் 13க்கு | |

உருப்படிகள் 352



உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 14 * அரிவாட்டாய நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்-மாஞ்சி. தாளம்-அடதாள சாப்பு.

கண்ணிகள்.

(1) வேலைசூழ் புவிமெச்சு சோலைக் ளேயும்
விரிமலர் நிறையுங்கர் விரிநதி பாயும்

(2) ஆலைக்க ரும்புஞ்செந்நென் மணிகளை விளைக்கு
*மாலைக்க ரும்பிடுந்தா மரைபொங்கித் திளைக்கும்
(3) பணைகணி றையுஞ்சோழ நாட்டினிற் பெருசீர்க்
கணமங்கலமெனவே காசினி புகழூர்
(4) அந்நக ரத்திலுயர் வேளாளர் குலத்தில்
நன்னய மாயவதா ரஞ்செய் தோர் நலத்தில்
(5) கருணையா லோட்சிக்குந் தன்மையிற் ‡றாயர்
தருணத்த ருள்வோரபி தானமுந் 0தாயர்

ஆர்யா.

இவர்செயல் யாதெனி லுருசித்
திடுமாவடுகீ ரையோடு மெல்லரிசிப்
பவனார் நல்லுண வாகப்-பரிவாய் நிதமீ குவார்வி
னைகளேக

பதம். இராகம்-ரீதிகௌளை. தாளம்-ஆதி.

பல்லவி.

மிகு மாவ லொடுமன் புவிளைத்தார் பக்தியுந் திளைத்தார்
வெம்பவங் களைத்துளைத்தார் யீசர்க் கின்பமாயுழைத்தார் (மிகு)

அநுபல்லவி.

அகமே மிகமகிழ்வாயன்பாடி யானைக்கண்
டுபசரிப்பா
ரன்பினாலென்பிரான் றிருப்புகழ்விரிப்பார்
அபிதானங்க ளுச்சரிப்பார் (மிகு)

சரணங்கள்.

(1) புவியோ ரடி யாகப்பெரும் புதுமைபொருந் திடவளர்ந்தும்
புகழ்சே ரரிபரு மேனமா ப்புடவியூற படப்பிளந்தும்
அவயேபெ றத்தளருருப்மயக் கங்காட்டும் பொன்னம்பலவ

---

* மாலைக்கரும்பிடும்-சாயங்காலவேளையில், அரும்பாகவாகும்.

‡ தாயர்-மாதாவின் குணத்தையுடையவர் 0 தாயர்-தாயர் என்றநாம
முடையவர்.

ரடிநற் கமலத் திணையைத் தினம்நினைவார்
இதயம்பொருந்தப்புனைவார் (மிகு)

(2) நிதியிற் புகழ் † தனதன் சிவ நேச ரிடத்திற் ‡ றனதன்
பதிகத்தவ ரவருக்கு பசரித்து வணங்கிடும்புனிதர்
நதியைப்புனை a சடையார்க் கின
நாடுந் தொண்டினிற் (b) சடையார்
நாடொறும்பொருளைக் கூடுறுநன்னடையார்
நட ராஜருக்கன்புடையார் (மிகு)

(3) கைவேதனை பாரா தட்டுக் கதிக் குஞ்சம்பா வரிசியொடுங்
கடுவுண்டவாய்க் கழதாமா வடுவுங்கீரையு முதவிடும்
நைவேதனம் புரியநட ராஜர்க்குத் தப்பா தளிப்பார்
நாடொறும் வேலையாத் தேடியே மனங்களிப்பார்
பேரா னந்தக்கடற் றுளிப்பார் (மிகு)

விருத்தம்.

(c)உலக்கை பற்று மூலக்கையினுற் குத்திடுந்தண்
டுலத்தையுமா வடுவையுங்கீ ரையுநாடோறும்
வலக்கைகொடு மெடுத்தேந்தி நடராஜர்க்கு
மகிழ்ந்துநைவே தனத்திற்கீ வாரநாடி
நிலைக்கையிலை யார்சோதித் திடமாவுண்ணும்
நிலைபெற்ற விளங்கனிபோற் செல்வங்குன்றக்
கலக்கமிலா மனத்தர்முன்போல் வழுவாத்தொண்டு
காட்டினுர்பெரும்புகழை நாட்டினுரே

பதம். இராகம்-செஞ்ஜுருட்டி. தாளம்-ரூபகம்.
(மனஜாலகளித என்ற ஜாவளி போல.)

பல்லவி.

பண்டுபோற்றொண்டு செய்தாரே (களி)

---

† தனதன்-குபேரன் ‡ தனதன்-சொந்தமாகவுள்ளவன்.
(a) சடையார்-ஜடாபாரத்தையுடையவர் b சடையார்—சளைக்காதவர்
(c) உலக்கை-மலைபோலப்பலத்தையுடைய.

அநுபல்லவி.

கொண்டு நடம்புரி சரணரைக்கண்டு கொள்ளநினைத்தவ
ருள்ள மொத்து நேரே

சரணங்கள்.

(1) கூலிக் கறுக்குஞ்சம்பாவரிசிநடக் கொற்றவர்க் காக்கிட
வளிப்பார்-மட்டை
நீலநெல் லரிசி யன்னத்தைத் தாமுண்டு நித்திய
மூமனங் களிப்பார் செழிப்பார் (பண்டு)

(2) கதிக்கும் பக்தியை யறிந்து வயல்கள் கார்விளைக்
காமலே செய்ய-நன்று
மதிக்குந் தில்லையம் பலத்தர் நலத்தின் வண்மைசெய்
தாரெனும் உண்மை மனங்கொண்டு (பண்டு)

(3) நல்ல புண்ணியம் பழுத்த தென்றன்பர் நாவி
னுல்மிகத் துதிக்க-மிக
வல்ல போறி வாற்ப சிக்களை மாறிடப் பேரின்ப
மீறிடத் தேறிடப் (பண்டு)

(4) சற்று மாகார மின்றி மனையார் தவித்துப்
பல்கீரை சமைத்து-மிக
நற்ற வர்க்குமுன் பளித்துப் பின்புண்டு
நயக்குங் காலத்து வியக்க வமைத்துப் (பண்டு)

(5) இப்ப டிக்கின்னுட் கழிக்கப் பல்கீரை
யின்வேர் தீர்ந்திடக்கண்டு-கரு
மைப்ப டிகுழல் மனையன் பாலுற்று வார்த்திடு
நீரையு முண்டுமனங் கொண்டு (பண்டு)

ஸ்வாய்.

(1) * இப்படித் தாயவி தப்படித் x தாயர் தினப்படி 0 தாயக
மாத்தொண்டு செய்ய

---

* இப்படித்தாய-இந்தவிதமாக. x தாயர்-தாயரென்யவர். 0 தாயகமா-சினேகிதமாக.

மைப்படி கண்டர்ப டித்தா மாவழக் கப்படி
நைவேத னத்திற்குத் துய்ய

(2) மாவடு வோடுஞ்சம் பாவின் ரிசியும் பாவுஞ்செங்
கீரையு மாவலா வல்ல
தேவதே வர்க்குநம் தாயர்முன் பாய்க்கொடு சென்றிடப்
பஞ்சகவ் யந்தனை நல்ல

(3) மனைவியர் கைக்கொண்டு பின்சென்றிடத்தடு
மாறிய தாயர்கை யேறியதாய
வினையநைவேதனஞ் சாதன நீள்கம ரிற்கொட்டக்
கண்டுப தறினர் தூயர்

வெண்பா.

வெய்ய வெடிப்பினில்நை வேதனத்தின் சாதனங்கள்
கையினின்று கொட்டிக் கவிழவே-துய்ய
§ மனத்தரச்சம் பாவரியும் வாளைக் ‡ கமலா
னனத்தர் களம்பூட்டி னர்

பதம். இராகம்-சகனா. தாளம்-சாப்பு.

பல்லவி.

வாளினாற்கழுத் தரிந்தார் தொண்டின் வகையெ
லாந்தெரிந்தா ரறிந்தா ரரி (வாளி)

அநுபல்லவி.

நீளும் பிறவி வே. ரறுக்க வேசம்பா நெல்லைய
றுத்திடும் வல்லக்க ருக்கரி (வாளி)

சரணங்கள்.

(1) சேயசெங் கீரையு மாவடு வுமரி சியும்வெ
டிப்பினுட் சிதறக்-கண்டு

---

§ மனத்தர் மனத்தையுடையவர். அச்சம்பா அரியும் வாளை-அச்சம்பா நெல்லையறுக்கும்படியான அரிவாளை

‡ கமலானனத்தர்-தாமரைபோன்ற முகத்தையுடையவர்

நேயர்ம னத்துவென் னேயம தாகவே
நெக்குரு கியுடல் பதறத்தாயர்
ஆயவன் பர்வினை யுதரக் கள மரியும்
போதுசெங் குருதி பிதிர (வாளி)

(2) மனையர் கூடையைப் பிடிக்க வுநில்லா
மற்றவ றிக்கொட்டக் கண்டு-நல்ல
வினைய ரம்பலத் தாசி னுக்குநை வேதநிப்
பில்லாதை விண்டு-யினி
யெனையிவ் வுடலைக் கொண்டு-பயன்
என்னவென் றேயெங்கு மன்னுமு னைத்தண்டும் (வாளி)

(3) ஈசா முதுக்கு பயோக மில்லாதே யேதுக்கங்
கேபோக வேணும்
மாசக லத்தொண்டு முற்றுந டத்தவ
கையில்லா மாசுடல் பூணும்-உயிர்
நேசத்தி லென்பய நாணு-மென்ன
நெஞ்ச முத் தத்தொடும்
வஞ்சமி லார்கோணும் (வாளி)

விருத்தம்.

(a) கருக்கரிவாள்(b)கொடுகருக்குக் கருக்கெனவே வறுக்கவன்பர்
கையின்மூன்று
திருக்கறிவா ரறிந்திறுகப் பிடித்துவிடு விடெனுமொழி
(c) செவிக்கின் பூர
வருக்கறிவாய் மையர்பொன்னம் பலத்தாசர்
மாவடுவ தனைக்க டித் (d) தன்

---

(a) கருக்கரிவாள்-கொடுகருக்கரிவாளைக்கொண்டு.

(b) மூன்றுதிருக்கறிவார் - ஸோம சூர்ய அக்கினியென்று மூன்று நேத்திரங்களினுல் அறிபவர்.

(c) செவிக்கின் பூர் அவருக்கறிவாய்மையர்-செவிக்கின் பழுரும்படியாக அந்த நாயனார்க்கு அறியக்கூடியஸத்தியமாயுள்ளவர்.

(d) அன்பருக்கு அறியவாய்ந்திட-அன்பருக்கு ஞானவொளிபொருந் தும்படியாக

பருக்கறிவாய்ந் திடக்கமர்நின் றெழுந்தார்
தொண் டி லரிடமன் பழுந்தார் தாமே

பதம். இராகம்-பியாக். தாளம்-ஆதி.

பல்லவி.

எழுந்தார் நடேசர் செழுந்தொண்டர் நேசர் (எழுந்தார்)

அநுபல்லவி.

தொழுந்தாயர்க் குப்பவத்தி லழுந்தாமல் முத்தி
தொடுத்துக் கொடுக்கப்பருவெடிப்பிற் கிளம்பி நத்தி (எழுந்தார்)

சரணங்கள்.

(1) கடுக்கென மாவடுவைக் கடித்திடு மோசை
காட்டியன் பர்கையினைப் பிடித்திடும் போதே
அடுத்ததொண் டர்மெய்புள கிதமுற மாதே
வருமன்று ளாடும்பதத் துணைகாட்டிக்கமர்மீதே(எழுந்தார்)

(2) ஆனந்த பாஷ்பங்களு டம்பெங்கும் பெருக
அன்பர்வி னைகளினங் குரங்களுங் கருக
ஞாலமில் லேனல்குஞ்சிற் றுணவையும் பருக
நாடும முதெனக்கொண் டென்று நே யநருக (எழுந்தார்)

(3) அன்ப நினைச்சோதிக்கக் கமரினிற் கவிழ்த்தோம்
அரசிவ டுக்கீரையை யமுதாகக் களித்தோம்
இன்பந்தந் துனதிரு வினைகளைத் தவிர்த்தோம்
எமதுல கில்நீமனை யிருந்திட வளித்தோ மென்(றெழுந்தார்)

வெண்பா.

தாயனையார் கண்டந் தனிலவரிவாட் பூட்டியதால்
தாயரை யேயரிவாட் டாயரென-வேயுலக
மெல்லாங்கொண் டாடுமன்பர்க் கேற்றவரம் நல்கி
யெல்லாம்வல் லாரெழுந்தா ரே

பலசுருதி விருத்தம்.

ஈசனார் மணிவிடையி லெழுந்தருளத் தாயர்தம தில்லாளோடும்
வாசமார் கையிலைபுக்கு மகிழ்காதை யினைக்கேட்போர்
வளருமாயுள்

நேசமார் மனைமைந்தர்நிறைசெல்வங்கல்விபொறை நீங்காதுற்றுட்
பாசமுறு மிருவினையும் நீங்கிப்பின் பரசிவத்தின் பதஞ்சேர்வாரே

அரிவாட்டாய நாயனார் சரித்திரம்
முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆக லாவணி | 1. | விருத்தம் | 3. | ஆக உருப்படிகள் | 12. |
| ஆர்யா | 1. | ஸவாய் | 1. | ஆக சரித்திரங்கள் | 14-க்கு. |
| பதம் | 4. | வெண்பா | 2. | உருப்படிகள் | 364 |

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 15 * ஆனாய நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்-இந்துஸ்தானி காபி. தாளம்-ஆதி.
ஸாகியாகவும் பாடலாம்.

கண்ணிகள்.

(1) பூமா துலவும் புகழ்ப்பழ நாட்டிற் பொருந்திய மங்கலவூர் மருவும்
கோமா மகிமை விளங்கிடு மாயர் குலத்திற் பிறந்து நலம் பொருவும்

(2) செய்ய மறையாற் றுதித்திடு நீறு செழித்திடு நீதி திகழ் நாயனார்
வையம் புகழ்ந்திடு மானா யான்பு வளரும் சிவபக்தர் மேனே யனார்

(3) விண்ணதி தண்மதி நண்ணுஞ் சடைதிக ழண்ணலார் குஞ்சிதத் தாமரையார்
பண்ணுல வுமனத் தாமரை யார்நாம மெண்ணித் தழும்புறு நாவினராம்.

பதம்-இராகம்-கமாசு-தாளம்-ரூபகம்.

பல்லவி.

உதயமா கியிலங் கினார் ஆனாயனார் (உதய)

அநுபல்லவி.

இதயத்தன் புதுலங்கி னார் ஈசனருளால் (உதய)

சரணங்கள்.

(1) திரிகர ணங்களினுந் தில்லையி னடத்தைய
ருரியதாட் டுணைநம்பி யுலகிலென் றுமுய்ய (உதய)

(2) மெய்த்திரு மேனிதிரு மேனியி லகநாடி
நத்தும் பசுக்களைசட் சித்திட வென்றேதேடி (உதய)

(3) ம்ருகங்கள் செய் துயர்தீர்த்து விளங்கும்புற் கற்களிற்
சாய்த்து
பொருந்தப்பொ ருக்கமேய்த்துப் புல்லும்வினை களைத்
தேய்த்து (உதய)

(4) கருப்பசுக் களுமிளங் கன்றுத்தாய் களுமுளம்
விரும்பும்பாற் பசுக்களும் விளங்கிடக் கனங்கொளும் ( )

ஸ்வாய்.

(1) இப்படி வாழ்ந்திடு நாளினி லோர்நாள் இசைத்திடுங்
கோலுடன் பந்தர்கவுட
மெய்ப்புறு மாவினி னங்களைக் கானகத் திற்பரிய மோடு
மேய்த் துப்புகழ் கீட

(2) கந்தமி குந்திடும் கொன்றைமரந்தனைக் கண்டுப ரமருரு
வென வெண்ணிச்
சிந்தை மகிழ்ந்ததைத்தெ ழுந்தையும் வேணுவிற் சந்தப்பொ
ருந்தவா சித்தனர் கண்ணி

பதம். இராகம் கானடா. தாளம்-ஆதி.

பல்லவி.

குழலிசை செயதா னாயனார் ஈசர் கழலிணையை
மறவாத் தாயனார் வேய்ங் (குழலிசை)

அநுபல்லவி.

பழைமை பொருந்து சாரசர மெங்கினுஞ் செழிய
பண்ணமுத மழையை நண்ணி யெங்கும் பொழியக் (குழ)

சரணங்கள்.

(1) இசைக்கும்சு ருதிதப்பி டாமற்ப குதிவித திகளின் பேதந்
தெரிந்து திகழ்மந்தர மத்திமம்
அசைக்குந் தாரம் ரா கத்தின் ஆகத மனுகத மானவழியி
னுத்தமம்—கதிபொருந்தும்
தசவித குணந் தேக்கி யவகுணம் பத்தும் நீக்கித் தகும்வாதி
ஸம்வாதி யநுவாதி விவாதி தூக்கில்
விசையன்றி நாதமத்தியில் வாழுமா நந்தமாகிய-சங்கர னைந்
தெழுத் தைநிரு வாகி யோதிமகிழ் வாகிமிதுமன்பாகிக்
(குழலிசை)

(2) வண்டெழு விரல்களைத் தாவிப் பிடிப்பதுபோல்
வைக்குந் துளையின்வழி வளிமைப்போக்கி யிடமேற்
கண்டுமெலி வித்தும்சமம் புரிந்தும்வலி வித்தும்யாரும்
கனியுமா னந்தம்ஜனித் திடவுண்டு செய்து நேரும்
பண்டின்சாத் திரப்படி தப்பாம லேகீதம்
பரவும நுரத்திலைந் தெழுத்தைக்க லந்துநாதம்
திண்டரு மதுரத்த முதங்கலந்து
தெரிந்துதொண்டா தரம்வைத்துப் புகழ்
பொருந்த வன்பொடு கவனித்துத் திகழ் (குழலிசை)

(3) வாயில்வைத் தப்புல்லருந் தாமற்ப சுக்கள் நிற்க
வசுக்கள்தாய் முலையில்வாய் வைத்தப டியிருக்க
மேயுங் கானகள்மான் மயிர்கள் சிலிர்த்துருக்க
மேவிம யில்கள்புட்கள் கூவா மற்பெருக்க
மேயுமிவ் வுலகோரும் வானுல கோருஞ்சூழ
விருந்தேவ மின்னார்மனம் பொருந்திமய ங்கித்தாழ
ஆயும்விஞ்சையர் கின் னரர்கள் விமானம் வாழ
அன்புடனேப ரனுனந்தித்திட யின்புடனேயுல
கோர்வாழ்ந் துய்த்திடக் (குழலிசை)

(4) உருக்குமி சையமுதத் தார்க்காரணங்கள் மூன்றும்
ஒத்துப்பாம் பும்மயில் மீதுறச்சிங் கத்தின் முன்றோன்றும்
கரிக்குழாங் கள்மான்வரிப் புலியைத்த மூவருநான்றும்
கதிக்குமி ரைச்சல் நீக்கிக் கானரு விகள் கான்றும்
தருக்களுங் கொம்பசையா திருக்கப்பட்ட தருவும்
தளிர்க்கமங் குல்கள்முழங் காமற் கூடிமருவும்
பருத்தவ லைக்கடலு யோசையின் றிப்பொருவும்
படிகா னித்திட வடியர்கள் சூழப்
படியேழிற்பல வுயிர்களும் வாழ்கக் (குழலிசை)

ஒலி.

(1) இவ்வா றுவேணு கான மிசையா லிம்மகி வானச்
செவ்வாய்ப் பாவிட ஞான திவாக ரனையொப் பவார்நன்
னயமான (தேவ தேவ) மகாதேவா

(2) நடரா ஜர்செவிக் கேற நலவமு தெனவன் பூர
திடமார் வெள்விடை மீதே தேவியுடன் றோன் றினார்க
ணப்போதே (தேவ தேவ) மகாதேவா

பதம். இராகம் பியாகு. தாளம்-ரூபகம்.
(நின்னிடபாஸி யென்பதுபோல)

பல்லவி.

தில்லையில் வாஸர் திகழ்நடராஜர் ஒல்லையில்
கருணைசெய் துவந்தாரே (தில்லை)

அநுபல்லவி.

தொல்லை மறைமுனிவர் விண்ணவர் முதலானோர்
எல்லையிற் றவஞ்செய்து தோணுமாலே
சேர்ந்தின மறியார் சார்ந்தகைம் மறியார்
தொண்டரி சைமீது மனங்குறியாய்த் (தில்லை)

சரணங்கள்.

) பேரிசை கேட்டிட வொலியால் பெருங்கடலின்
பெற்றிபெ றவேயும்பர் கணநாதர்

பேசித்து தித்திடாமல் கைகட்டி வாய்புதைத்துப்
பெருஞ் சித்திரம் போலுறப் பிரக்கி யாதத் (தில்லை)

(2) கலையாரும் வெண்மதியும் வெண்டும்பை வெண்ணதியும்
கலந்துபொன் ஞர்சடையின் மீதிலங்க
மலைமாதோர் பாகம் வைத்தினிதாக
வளர்வெள்ளி மலைபோலும் விடையேகத் (தில்லை)

(3) அன்பனே நின்னிசையில் நமதைத் தெழுத்தையு
மமைத்துக்கா ணித்திடவே கேட்டுவந்தோம்
யின்பதுசால வேயிந்தக் கோலத்
தெய்துநம் ஸபையிலென் றநுகூலத்-தொடும் (தில்லை)

ஆனய நாயனுர் சரித்திரம்
முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆக லாவணி 1 | ஸவாய் 1 | ஆக உருப்படிகள் | 6 | | |
| பதம் 3 | ஒவி 1 | ஆக சரித்திரங்கள் 15க்கு உருப்படிகள் 370 | | | |

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

## (16) *மூர்த்தி நாயனுர் சரித்திரம்.

லாவணி-இராகம்-மாஞ்சி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

(1) சீர்மன்னி யகுடிகள் சிறந்தோங்கி நீடும்
நீர்மன்னு முகில்நெடுந் துகில்போலமூடும்
(2) தண்டலை திகழுந்தண் பணைகளி லேயும்
(a) வண்டலை யுஞ்செழுந்தேன் மடைவழி பாயும்
(3) கன்னல்செந் நெல்கள்மணி பின்னியே செழிக்கும்
கதிர்கணி றைந்தவுடுக் கணங்களைப் பழிக்கும்

(a) வண்டலையும் - சங்குகளலையும.

(4) நன்னயஞ் சேர்பொதிகை நறுஞ்சந்த மணக்கும்
மன்னுங்கு ளிர்தென்றல் செந் தமிழொடு மணக்கும்

(5) பாண்டிமின் வதனவொப் பாகவே யிலங்கும்
வேண்டுப்பெ ரியோரெல்லா மிக்கவே துலங்கும்

(6) பொன்னுல ககமொப் போ b பணி யுலகும்
சென்னிவ ணங்கிப் c பணி செயும் d பணி யிலகும்

(7) e செய்யுட் சங் கங்களெங்குந் திரண்டூர்ந்தங் கொலிக்கும்
f செய்யுட் சங்கங்களெங்குஞ் செழித்திடக் கலிக்கும்

(8) தோடுக மழ்பங்கயத் தோட்டிலின் மேலாள்
நாடிவ ளருமந்த நங்கைபோல் மாலாள்

(9) யாழிசை குயிலிசை நவில் சுரும் பிசையும்
g ஏழிசை பாடவெங்கு h மிசைந்திட i விசையும்

(10) திகழூ நக ரமின்னுஞ் சிவபெரு மானே
மகிழ்தென்னன் மருகனு மகியிணைத் தானே

(11) யாண்டுளசங் கத்தொருவ ராகின ரென்று
லீண்டுரைக் கத்தகுமோ விசைபணி நன்றாய்

(12) மும்மைப்பு வனங்கட்கு முதன்மைமூ தூரே
நன்மைமிகு மதுரை நகரத்தின் சீரே.

ஆரியா.

அப்பொற் பதிவாழ் தரவே—யணிமா வணிகர்த வமேழு திர்வு
பெறவே
மெய்ப்பொரு ளன்புரு வானார்—மிளிர்நா மழுமூர்த் தியா ரெனு
மானார்

---

(b) பணியுலகு-நாகலோகம். (c) பணிசெயும - பணிவாகச் செய்யும். d) பணி - பணிவிடை. (e) செய்யுட் சங்கங்கள் - வயல்களில் சங்குகள். (f) செய்யுட் சங்கங்கள் - பாவினங்களால் விளங்கிய வித்துவச் சங்கங்கள். g) ஏழிசை - சப்த ஸ்வரங்களோடுகூடிய கானம். (h) இசைந்திட - பொருந்திட. (i) இசையும் - கீர்த்தியும்.

வெண்பா.

பிஞ்சுமதி குஞ்சரவப் பிங்களநற் செஞ்சடையார்
மஞ்சுலவுங் கூடல் வளர்பெருமான்—நெஞ்சமகிழ்
j சந்தப் பணிவிடையார் தாமாத லான்மகிழ்ந்து
k சந்தப் பணிவிடை செய்தார்

பதம். இராகம்-பூரிகல்யாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

சந்தனப் பணிவிடை நிதஞ் செய்தார்

அநுபல்லவி.

நிந்தனைப் பெரும் பிறவியை யெய்தார் (சந்தனப்)

சரணங்கள்.

(1) முந்தவழு திக்கோலம மைந்துலகாள் சுந்தரேசர்
மூர்த்தியார்க்கு மூர்த்திநாய னாரே (சந்தனப்
(2) காலையிலெ ழுந்துமூழ்கிச் சாலவிபூ தியணிந்து
கந்துமனத் தைந்தெழுத்தை யோதிச் (சந்தனப்)
(3) a அத்தமலை வில்லார்க்குச் b சித்தமலை வில்லார்நாடி
முத்தமிழ்ம லைத்தேய்வைத் தேடிச் (சந்தனப்)
(4) பட்டுவெண்டு கிலால்வாயைக் கட்டிப்பனி நீர்தெளித்து
மட்டில்லாப்பச் சைக்கர்ப்பூரஞ் சேர்த்துச் (சந்தனப்)

ஸ்வரம்.

(1) கேளுந்து ணையும்ப தங்களு மீசர் கிளரடித் தாமரை யே
யென நாடி
நாளும்பு ரிதொண்டு முட்டின்றி யன்பர் நடத்துமன் னுளில
டத்துடன் கூடி
(2) வண்டமிழ் நாட்டை வடுகக்க ருநட மன்னவன் சூழ்ந்துவ
ளைத்தன னுகி

(j) அழகிய பணிந்த விடபத்தையுடையார்.

(k) சந்தனத்தாலாகிய பணிவிடை.

(a) அத்தமலைவில்லார்-தங்கமலை, அதாவது: மகமேருவை வில்லாக வுடையவர். (b) சித்தமலை வில்லார் - மலைக்காத சித்தமுள்ளவர்.

திண்டேர்க ரிபரி தானைக ளாற்றென்னன் சிந்தைக லங்
கத்து ரத்தவுமேகி
(3) மன்னக ரந்தனி டந்தெரி யாதுற மாமது ராபுரி யைக் கை
ப் படுத்து
மன்னுமுன் னுந்தெரி யாதவன் மூடப்பா வஞ்சம தாகக்
கொடுங்கோல்தொ டுத்து

**விருத்தம்.**

தீயவனுங் கொடுங்கோன்மை செலுத்த வெண்ணிச் சங்கற்பித்
திடச்சா மைப்போர்
பேய்வனையப் படுதலென வருகவந்த ராற்சூழப் பெற்றுநீற்றின்
மாவளத்தின் றண்வனத்தைக் குறைத்திடுங்கு டாரியென
மதுரையென்னும்
தூவளஞ்சேர் கலைமதிக்கோர் கரும்பணிநே ரெனக்கொடுங்கோற்
றுறை நின்றானே

பதம். இராகம் தனுசரி. தாளம்-ஆதி.

**பல்லவி.**

அடியார்க்கி டர்செய்திட லானானே யீசர் (அடியார்)

**அநுபல்லவி.**

குடியாச்ச மணர்கையிற் போனானே யீசர் (அடியார்)

**சரணங்கள்.**

(1) c மலைத்தவரை நாடி நிலைத்தவர் போற் கூடி
d மலைத்தவ ரார்சினத்துக் கும்வழி தேடிச்சிவன் (அடியார்)
(2) e கருங்கல்லி னெஞ்சன் f நெருங்கல்லின் வஞ்சன்
கங்கை திங்கள் சூடிய தாள்களைத் தஞ்சம்புரி (அடியார்)
(3) ஸாதுஜனர் நேரா நீதிவழி யோரான்
பூதிநெற்றி யைச்சித்தி ரத்தும்பா ராணிறை (அடியார்)

(c) மலைத்தவரை - மலைக்கக்கூடிய தன்மையுள்ளவர்களை, அதாவது சமணர்களை. (d) மலைத்தவரார் - மகாமேருகிரியை வில்லாக வுடையவர். (e) கருங்கல்லின் - கருங்கல்லைப்போல. (f) நெருங்கல்லின் - நெருங்கிய யிருட்டையொப்ப.

(4) g சிந்திதார்த்தி h சிந்தச்செய் சித்தி
ஸாந்தரேச i மூர்த்தி யைத்தொழு j மூர்த்தி யெனும் ( )

வெண்பா.

எள்ளி யடியார்தொண் டியற்றவிடர் செய்துமதைத்
தள்ளி நறுஞ்சந் தனக்காப்புத்— தெள்ளு
மனத்தடியார் போனடத்த வல்லார்யா ரந்தி
வனத்தர்பெரு மைக்குமளா வாய்

ஸ்வாய்.

இச்செயல் கண்டும னச்சின ளுகிப தூர்ச்சன னச்சர வத்தினை
யென்னை
மெச்சடி யார்க்கிட ரைச்செய நெஞ்சினு ளச்சமில் லாதவ
ருச்சித வன்னை

பதம்-இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

விடைமீது வந்தார்க் குச்சந்தப்பணி விடைசெய்து வந்தார்

அநுபல்லவி.

கடைபிச காதவர் தடையிலாமலே வெள் (விடை)

சரணங்கள்.

(1) படர்மூர்த்தி சாலு மூர்த்திபாகத் ருடபக்தி யாலும்—
வருத்தமெண்ணு—தடைவேதொண் டுமேன்மேலும்
தடையிலாதுசெ யக்கைபிலே போலும் (விடைமீது)

(2) காலையி லெழுவார் நித்யானுஷ்டான வேளையில் வழுவார்
சாலச்ச பாட்சிகாந் தனைத்தொழுவார்தர்ம மெனத்தழை
வார் பணி (விடைமீது)

(3) அடைப்பணி போலும் மனத்தின்மன்ன னடத்தினை
மேலும்—செலுத்திவரக்
கிடைத்தயட் டுமுட்டின்றி நடத்தினர்மனத் திடத்தினர்
பணி (விடை)

---

(g) சிந்திதார்த்தி-நினைக்கக்கூடியவரின் மனோவியாதி. (h) சிந்தச்செய் - சிதரச்செய்யும்படியாக. (i) மூர்த்தி - உருவம். (j) மூர்த்தி மூர்த்தி நாயனார்.

கலித்துறை.

தெள்ளு மதுரத்-தமிழ்ப்பாண்டி நாடெனுஞ் சேயிழையாற்
றள்ளு (a) மரச (b) னரசனெ னப்படுந் தன்மையவே
யுள்ளும் புறமு நிறைவஞ்சந்த ரேசர்மெய் யோங்குசந்தங்
கொள்ளுந் துறையுந்தடுத்தான் பெருங்கொடுங் கோன்மன்னனே

லாவணி இராகம் மாயாமாளவகௌளை-தாளம்-ஆதி.

கண்ணிகள்

(1) தீய வஞ்சனுயிர் மாய வந்தாக சியமுந் தெரியாமற்—கொடி தெனமன
தினிலுங் குறியாமற்—றொண்டர்—சித்தம்வருத்திய பாவி குண்டர்
பொய்த்தவத் தினிசு மேவித்—தினம்
தீங்குபுரிந்தனன் வேங்கையினும்வஞ் சினத்தின் கடுங்கோவி

(2) அருக ருரைக்குமொழி யாவையும் வேதம தாநம் பியுந்தானே—தனதுகுல
மானம் பொருந்தானே தேவா லயச்சிறப் பிணக்குறைத் தான்
பிர்ம்மா—லயத்துரத்தினைக் கரைத்தான் அடியவர்க்கட் கிடை
ரைச் செயமெய்த் திடசித் தனெனப் பெயர்த்தரித்தான்

(3) கொடிய பாவியிது செயவே யன்பருளங் கொதித்து வாடியே—சந்தனத்
தொண்டு—குறித்து நாட்டியே—நிதி—கொண்டெங் கெங்கும் குண்டெடன்
றன்பின் குன்றுந் தேடியே
கடிநகர் பற்றிக் காங்கெனச் சுற்றிக் கைக்குட் சிக்கா
தெய்த் துக்கா காரா வாடியே

(4) கொளுமிடங் களெல்லாந் தடையாக வுளமும் வெதும்பியே
கண்களிநீர்—குளம்போற் றதும்பியே—யொன்றுங்
கூறிடாதுகெட் டுயிர்ப்பி னேடுமறுகிக் கொதிக்குங் கும்பியே
உளமிகத் துடிப்பா ருடம்பின்வேர் வடிப்பார் உறுதித் தொண்டைக்.

---

(a) அரசன்-வேந்தன் (b) அரசன்-ரஸமில்லாதவன்.

கருதிச் சிந்தித் துயர்நத் துவம் வைப்பார்.

வெண்பா.

a மத்தமிக்கும் கொன்றை மலர்ச்சடையார்க் கன்பர்கதி
b ரத்தமிக்கு மட்டு மனைந்துலைந்து—முத்தமிழ்சேர்
கூடற் சிவபெருமான் கோயிலுக்குட் சென்றுமன
நாடற் கரிதியற்றி னுர்.

பதம். இராகம் இந்துஸ்தானி. காபி-தாளம்-ஆதி மிசிரகதி.

பல்லவி.

முன்கை யினைத் தேயவுரைத்தார்

அநுபல்லவி

பொங்கும்பவங் களைக்கரைத்தார் (முன்)

சரணங்கள்.

(1) நட்டம்புரி வார்க்குச் சாத்தி யிஷ்டம்பெறப் பணிந்தேத்தி
முட்டின்றவந் தானுமென்கைக்கு
முட் டிலையென விரைவொடு கலுமுரை பட (முன்)

(2) குருதியெங்கும் வழிந்தோடக் கருதுமன மொத்து நாடப்
பரிதிநிகர் மேனியுமாடப் பா பரப்புட னுரத்தொடு
மரைக்க வியர்க்க (முன்)

(3) அன்பர்கைந ரம்பினுடி முன்பருந்தென் பினிற்சாடி
பின்புமுளை பற்றுமட்டுமே-யதி பிலத்துட னிமுத்திமுத்
தமுத்தி வலுத்த (முன்)

கேகாவளி.

(1) தவாத தவருமெ யவாவொ பூயமினிர் திவா கரனையொப்
பவார்கு ருதியொடு மிவாறு செயவா லவா யண்ணலும்

(2) பொறுக்க முடியா துருக்க மொடுமன் பருக் காமகிழ்ந்
c திருக்கு மறியா d ரிருக்கு மறியா ரருட் சேரவே

பதம், இராகம் சுருட்டி. தாளம்-ஆதி.

பல்லவி.

திருவாக் கல்லிடத் தெழுந்தது கேட்டுநிறுத்
தினரே யன்பினுர் கேட்டுத் (திரு)

---

(a) மத்தம் - ஊமத்தை, அல்லது மதங்கொடுக்குமது. (b) அத்தமிக்கும் - அஸ்தமனமாகும். (c) மகிழ்ந்திருக்கும். மறியார் - மகிழ்ந்திருக்குமானை யுடையவர். (d) இருக்குமறியார் - வேதத்தாலுமறியக்கூடாதவர்.

அநுபல்லவி.

மருவாய்க் குங்குழல் மீனாக யனிமன மகிழும் பிராணேசர்
ஸுந்தரேசர் (திரு)

சரணங்கள்.

(1) நீயன் பின்றுணி வாவிது செய்திடல் நிறுத்து வாயய்யா
உன்றன்
றாயமனம் வருந்துந் தீயுனின் றிரவிலே தோகநி யடைவன்
மெய்யா பாரென்று செய்யத் (திரு)

(2) அகத்தில்வ ருத்தந்தீர மாற்றலன் கைக்கொண்டமண்
ணளைத்துங் காக்கவு—மிந்தச் (திரு)
சகத்திரு ளொழிக்குங் கதிர்போற் றுண்டர்மேற் கொண்ட
சினத்தைத் தீர்க்கவும் செவிகேழ்க்கவும் (திரு)

(3) வேண்டு மட்டும்புவியை யாண்டு பின்புநம்பணி விடைசெய்
தின்பமே

(4) யாண்டும்பொ ருந்துநம துலகெய்தெ னக்கருணை நாடி
யன்பர்மேல் தயவா மேன்மேல் (திரு)

விருத்தம்.

(a) இவ்வண்ணந் திருவாக்கங் கெழுந்ததுகேட் டஞ்சியன்
ரியைந்துநிற்கக்

(b) கைவ்வண்ணப் பணிவிடைபால் வாசமெலாங் கலந்தொப்
பங் கமழவுறஞ்

(c) செவ்வண்ணத் தத்தமது தேய்ந்தபுண்ணு மாறியொளி
திகழும் பொன்போல்

(d) மெய்வண்ண மாகினர்மெய் மூர்த்தியா ருலகமகிழ்
சீர்த்தியாரே

ஸ்வாய்.

(1) இங்கிவை நிற்கவன் ஞளிர விற்சம ணின்புகல் சார்வடு
கக்கடு நாடன்

---

(a) இவ்வண்ணம்—இந்தவிதமாக. (b) கைவண்ணப் பணிவிடை—
அழகாகிய கையால் சந்தனம் அறைக்கும் பணிவிடை. (c) செவ்வண்
ணத்து அத்தம்—சிகப்பு நிறத்தோடு கூடிய இரத்தம் வழியுங் கை,
(d) மெய்வண்ணமாகினர்—அழகாகிய பழய சரீரத்தை அடைந்தனர்.

பொங்கழல் மன்னவ னுளுமு டிந்தன பொற்புறு
தொண்டர்துன் பம்பற ந்தோட
(2) சங்கரன் சார்பில வர்க்குநெ டுங்காற்ற மைத்திடு மெய்வாழு
மைப்பினு மீதே
மங்குலிற் றோன்றிட றையுமின் போலல வா வென்று லகம்
புகழவப் போதே
(3) தொண்டர்க ளிக்கவ சுீத்த மேலோர் துறக்கம் விரைவில்
செல் தொல்வழக் கேய
கண்டக னுமந் கோரவ ழிகா கத்திடை வீழக்க டிதுயிர்
மாய

கலித்துறை.

மூற்றுங் கொடுவினை செய்மன் னவனெனு முண்மரத்தைப்
பற்றுங் கொடிய வையமாதர் வெம்பிப் பரதவிக்க
வற்றுன்பந் திரப் புரைகா லையிற்கதி ராதவனுஞ்
சுற்றுங் கடலில் மூழ்ந்தான் பின்பாயதைச் சொல்லுவனே

பதம்-இராகம்- இந்துஸ்தானி-காபி-தாளம்-ஆதி.

பல்லவி.

அரசனுக்கிம விதி யனைத்துமுடிப் பித்தார்

அநு பல்லவி.

அரசனுக்கோ ரநின் மைமையால் வாடி (அரச)

சரணங்கள்.

(1) உரைதே வமைச்சரெல்லா மொருங்குறக் கூடி
உற்ற மனதிற்கடங் காமையால் (அரச)
(2) மைபங்கூழ் குடிகளிமற பரிபிருந் தானும்
மங்குல் மறைவிருப்பல் போலுமே (அரச)
(3) தங்கு பாநில்லாச் சகமுமி ரின்றி
மங்கிய வெற்றுடலுஞ் சாலுமே (அரச)

ஆரியா.

பல்வகை பினுமுள காடிப்—பாரோர் கள் தவித் திடாத வகைதேடி
மைமவரை யனையமெய் காக—மதனைக் கொணர்வீ ரெனுமு
னதிவேக

மொடுபாகன்கொடு வந்தான் உயர்நான் முறையர்ச் சனுதி
கலையுந்தா
னடைவே செய்துப சார—மதனுல் மகிபா ளவேய ரசின்னேரம்

கலித்துறை.

கைக்கொடு தூக்கிப் பிடர்மிசை வைத்திந்தக் காசினியை
மிக்கவுங் காக்கக் கொணர்வா யெனமத வேழக்கண்க
ளொக்கதிர் வெண்டு கிலாற்கட்டி யேவிய தன்பிறகே
புக்கவுந் தேடிப் புனிதரைக் கண்டுடல் பூரித்ததே.

பதம். இராகம்-சகானு. தாளம்-ஆதி.

பல்லவி.

நாய னரைப் பிடரின் மீது நாடித் தாங்கியதே மூர்த்தி (நாய)

அநுபல்லவி.

தாயென வுலகுக் கருள்புரி சோமஸுந்
தரேசர் க்ருபையால் நரேச னெனவெங்கள் (நாய)

சரணங்கள்.

உரல்க ளின்சுவடு படவதிர்ந் ததைே பொடுமா மதில் சூழ்க்
கூடல்
புரமட ருங்குகள்க டைகள்மடங் கள்குளிர் பொழிற்பு குந்து
நாளுந்—தவர்
மருவுங் கன்மநய னங்களைமூடி மனக்கண்ணி றைஜெளி
தனைநாடித்
தெரியுஞ் செயல்போலெங்குந் துருவியே கூடித் தேடிக் கோபுர
வாயில் ஓடிக் கண்டங் குறவாடி (நாய)

விருத்தம்.

இரவின்கண் ணெழுந்ததிரு வாக்குணர்வா
லெம்பிரா னினிது நோக்கம்
பெருகருளா மெனிவிந்த வயந்தாங்கும்
பெரும்பெருமை பெறுவனென்ன
வரியதொ ண்டர் திருக்கோயிற் புகுந்துநின்ற
வரைத்துதிக்கை யதனுற்றூக்கி

மருவுபிடர் மிசைதாங்கு மளவிலுதித்
திடுங்கதிர்போல் வயங்கினாரால்.

ஆர்யா.

துன்பக் கடலில மிழ்ந்துந்—துணையில் லுயிர்கட வியாது
தவிவந்தும்
பம்புமருங்கல மென்னப்—பயில்தொண் டரைநா டினார்கள்
மகிழ்துன்ன
நன்மதி சேர்மந் திரிமார்—நாடித் தொண்டரி ருதாள்ப
ணியவுந்நேர்
பன்மணி சேர்கடல் போலே—பதியோர் மகிழ்கொண்
டவோதை மிகமேலே

பதம். இராகம்-ரீதிகௌளை. தாளம்-ரூபகம்.

பல்லவி.

ந்திமீதெ ழுந்தருளினார் தாயனார் மூர்த்தி நாயனார்
மகிழ்பெறுந் (தந்தி)

அநுபல்லவி.

ந்திவான்பி றைச்சடையனார் பேரருளினார் மனத் தெருளினார்
திடத் (தந்தி)

சரணங்கள்.

1) சங்கங்கள் தாரைகள்நாதிக்கப்—பேரிகைமிரு
தங்கங்க ளண்டங்கள் பேதிக்க—முழங்கப்பல்வி
யங்கள்நாகசு ரங்கள்கீதந டங்களெங்கெங் கினுங்கதிக்க
வுலகந்துதிக்கத் (தந்தி)

2) பாலலைபோற் சாமரைபோடப்—பாவாடை குஞ்ச
மேலலையச் செங்கதிர்மூடக்—கவிகைநிழல்
சாலமுழுமதி போலநிலவிட யேலவே வாழ்த் திசையொலி
நாட—மிகக்கொண்டாடத் (தந்தி)

3) கஞ்சகர்வி ருதுகள் கூற-விணையமதி விஞ்சுமமைச் சர்மகிழ்
வூறச்—சுற்றிலும்வாக்
கொஞ்சமதிக்குண்டர் நெஞ்சகந்திடுக்கிட் டஞ்சப்பெருமைநி
றைஞ்சுலகஞ் செழிப்பார்—துயரொழிப்பார் (தந்தி

விருத்தம்.

மதகரிநின் றிழிச்சிமலர்த் தொங்கல்புனை முடிசூட்டு மணிச்
சாலைக்குள்
இதமிருந்த மனத்தினரைக் கொடுபுகுந்த ரியணையினிற் சிறக்க
வேற்றி
நிதமுமொரு மதிக்குடைக்கு ளமைதாமுற் றுலகமெலா
நீடுகாக்கும்
விதமுறநற் செயல்புரிந்தா ரரிந்தார் மிக்குறுமேன்மை
தெரிந்தார்தாமே.

லாவணி, இராகம் ஹமீர்கல்யாணி. தாளம்-ஆதி.

கண்ணிகள்.

(1) திசைவே திகளின் மங்கல வாகுதி செயவன் னிமை
வளர்ப்பித்தார்
இசைவே தியர்நூ லால்வளைந் தரும்பத் தினிற்கங் கை
யைப்பூ ரித்தார்

(2) மந்திர யோகி நிறுத்தவு மங்கல மாதர்க டமைநோக்
கினரே
சிந்தையிற் சிவமே பொருளெனத் தெளிமூர்த் தியர்செப்
புனை தாக் கினரே

(3) பொய்ச்சம ணீங்கி மெய்ச்சைவ மோங்கிப் புவியர சுபுரிவே
னென்றார்
மெச்சிய மைச்சரிவ் விதஞ்செய நினையன்றி வேறியா
ரெனப்பணிந்து நின்றார்

(4) வையந் தாங்கிட வெனிலபி ஷேகம் வயங்கொ ளித்திரு
நீறே
செய்ய கலன்க ளய்பன டையாளந் திகழ்சடை முடியதன்
றே

விருத்தம்.

என்றநல்லு ரையைய நன்கறி யமைச்ச ரினிதுகேட் டுவந்துநின்
னருளே

நன்றென வியந்து நற்றவ வேந்தர் நாடிய குறிப்பினிற் சார்ந்தங்
கொன்றிய நீழல் போலவே யரசா ளுரிமைக்கங் கியல்பின
வுய்த்தார்
அன்றுதொட் டிசையக் கொடுங்கலி பறக்க வன்பரு மரசு செய்
தனரே
ஸவாய்.

(1) எங்கினும் பொங்கின மங்கல மார்பல் லியங்கள்மு ழங்க
விளங்கதிர் போலே
துங்கமி குமன்பர் திங்களின் மேலுய ருங்கன மார்சிக ரங்க
ளிணுலே
(2) மேலுயர் பொன்மலை சாலவ னேகங்க ளாலவிர் மானங்கள்
பான்மிளிர்ந் தோங்கும்
கோலமுறுங்கோயில் சூழவ லம்வந்து கொங்குல வுங்கய
வின்கொடி தாங்கும்

**வெண்பா.**

சுபராட்சி பாகத் தமர்ஸுந்த ரேசர்
சுபமா ரிணையடிகள் தோயத்—தபமார்
சடைமுடியிற் சூடியய்யர் தண்ணளிபெற் றண்ண
லடைவுடனே யிப்புவியாண் டார்.

பதம். இராகம் தோடி. தாளம்-ஆதி.
பாபரிதோரோ வென்பதுபோல,

பல்லவி.
பூப ரிபால னஞ்செய் தாரே (பூப)

அநுபல்லவி.
பாப ரஹித மூர்த்தி யாரே (பூப)-

சரணங்கள்.

(1) மாதனத் தாலனைமலிம் மாதனமேவ
நீதமதிக் கவிகை (a) சுலாவ மோதிளங்காற்சா மரையுலாவ ()

(a) சுலாவ - சுற்றிவர.

(2) மந்திரி மார்குறிப்பின் வைகியே நாடச்
சிந்தியா மண்போய்ச் சிதறி யோட வெந்தைசைவநீ றிலகி
நீடப் (பூப)

(3) கண்ணுதல் வாய் நூற் பதம் நிறைந் தோங்க
வெண்ணீறு டன்கண்டிகையுந் தாங்கத் திண்ணக்கலி தேய்ந்
தோய்ந்தங் கேங்கப் (பூப)

(4) ஏலக்குழ லாரிடத் தாசையை நீக்கிச்
சாலப்புலன் தெவ்வடர்த் துப்போக்கி யேலவனைத் துங்கம்
மிடத்த தாக்கிப் (பூப)

விருத்தம்.

இவ்வண்ண மகியரசர் பணிந்தேற்றிக் கப்பமிடு மியல்பதாகச்
செவ்வண்ணத் திருச்சந்தப் பணிவிடையும் வழுவாமல் தினம்
நடாத்திப்
பைவண்ணப் பணிமுடிதாங் குலகமதை நீடூழி படக்காத் துப்பின்
மைவண்ணக் கண்டாடித் தாமரையிற் றெண்டர்நிதம் வைகினரே

பலசுருதி விருத்தம்.

சீர்த்தியார் ந்திடவே சைவஞ் செழித்துநீ டூழிபல்க
மூர்த்தியா ராசியற்று முதன்மையாஞ் சரித்தி ரத்தைப்
பார்த்தியார் படிக்கினும்மின் பமுறக்கேட் கினும வர்க்கிங்
கார்த்தியா மெவையு நீங்கி யானந்தத் தினிது வாழ்வார்.

மூர்த்தி நாயனார் சரித்திரம்
முற்றிற்று

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடலாவணி | 2 | விருத்தம் | 7 | கேகாவளி | 1 |
| ஆர்யா | 3 | பதம் | 9 | ஆகமொத்தம்உருப்படிகள் | 34 |
| வெண்பா | 4 | கலித்துறை | 3 | ஆக சரித்திரங்கள் 16க்கு உருப் | |
| லாவணி | 4 | கண்ணிகள் | 1 | படிகள் | 404 |

உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# 17 † முருக நாயனார் சரித்திரம்.

இராகம்-மாஞ்சி. தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

(1) தாதவிழ் பூமலர் தாங்குமென் குழலார் தடமலை மகளொரு
மேனியி னிழலார்
பாதிம திபுனலுந் தரித்திடும் வேணி பணியும்ப ரவும்பரன்
பதிவுறுங் காணி

(2) சோதிரூ ழுமௌ லிச் சோழநன் னாடு துலங்கும் பொன்
னியில்வளர் சோலையாற் கூடும்
மாதவர் வசிக்கும்நன் மடங்களும் பலவும் மருவும்பூம்
புகலூரொன் றொருபதி குலவும்

(3) அப்பதி யிலிலங்கு மணியாநந் தனங்கள் அரன்பணிக்
கிசைவுறு மகிற்பூவி னினங்கள்
செப்புமப் பதியினிற் செனித்திடும் தகையார் செழுமறை
யவர்குலத் தினில்முன்னும் வகையார்

வெண்பா.

மாமகிழு மின்பமுயர் மாமுருக னாரெனவோர்
நாமமுற்றுத் தொண்டருமென் னுளுமுயர்-க்ஷேமமதால்
மேலாம் பதவியுற மெய்ஞ்ஞானத் தானுயரும்
சாலவருந் தொண்டுபுரிந் தார்.

பதம். இராகம்-நாதநாமகிரியை. தாளம்-அடதாளசாப்பு.

(செவியாத்ஸா லூனே என்ற வர்ணமெட்டு)

பல்லவி.

தொண் டியற்றினார்

அநுபல்லவி.

மண்டுப வமகற்றித் தொண்டர்மு ருகனர் (தொண்)

சரணங்கள்.

(1) திருப்புக லூர்ப்பரமன் திருப்பணிச் சடைமீது
திருப்பள்ளித் தாமமும் சாத்தித் (தொண்)

(2) உதயமுன் னெழுந்துநீ ராடிநித் யாநுஷ்டானத்
தனையுமு டித்து நடித்துத் (தொண்)

(3) கோட்டு நிலம்நீர்கொடித் தோட்டும லரெடுத்து
நீட்டுமா லைகள்தொடுத்துத் (தொண்)

(4) கண்ணிக ளும்பிணையல் களுந்தொடை யல்சமைத்து
அண்ணல்மு டியிலமைத்துத் (தொண்)

(5) அர்ச்சனை செய்துமஞ்சக் காத்தை யோதியஞ்சி
மெச்சும் புகழும்விரியத் (தொண்)

விருத்தம்.

மறைகள் முதலாம் ஞானமதை மகியோர்க் களித்தம் மகிதலத்தை
முறையா வீன்ற வுமைமுலைப்பால் முற்று மயின்ற சம்பந்த
இறைவர் நண்ப ராகித்தொண்டு மிபற்று முருக னர்தலத்தைக்
குறைவில் லாமற் செய்துமின்பம் குளித்தார் மனமெக்
களித்தாரே.

லாவணி.

(1) அன்னவ டிவமு மேனவ டிவத்த மாரிப் ருமனறிதற்
கரிதா
நன்னய மார்வர்த்த மானத்து வீசனை நண்பிற்று நித்தன
ரன்பிற் பெரிதாய்

(2) இத்தகை யாத்துதி செய்துபுக லியி னிற்பிள்ளையார்தம்
மணத்தினில் நேரே
சுத்தருஞ் சேர்ந்து கையிலேக்கி றைவன் துணைமலர்
போற்றிடத் தோன்றிடு வாரே.

பலசுருதி விருத்தம்.

முருகனர் சரிதந்தன்னை முனிவறப் படிப்போ ரின்பம்
பருகிடக் கேட்போர் மேலாம் பதிகளை யடைந்து வாழ்க்கை

பெருகிடக் களித்து நின்றெப் பேறினு மமர்ந்து மாசு
குறுகிட வான்றாள் போற்றிக் கொண்டுமெக் களிப்பர் மாதோ.

முருக நாயனுர் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| கண்ணிகள் | 1 | விருத்தம் | 2 |
| வெண்பா | 1 | லவாய் | 1 |
| பதம் | 1 | ஆ | 6 |

ஆ சரித்திரங்கள் 17-க்கு உருப்படிகள் 410.

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 18 உருத்திரபசுபதிநாயனுர்சரித்திரம்

பஞ்சசாமரம்.

(1) பொன்னி நாட்டுத் தலங்க ளினின்மிகு போற்று யர்ந்திடு நகாமாம்
மன்னுந் திருத்த லேயூரெ னும்பெயர் வாய்ந்தெதன் னகர்க் குன் சிகாமாம்

(2) மறைய வர்வேள்வி வான ளித்திட மலர்ச்செ றிசெழுஞ் சோலேயே
நிறையுந் தேனே யளிக்க வீசர் நிகழ்பஞ் சகவ்ய வேலேயே

(3) ஆன ளித்திடத் தான தர்மம் அநுதி னம்நீதி நேர்மையும்
மேல்ந லத்துட னன்ன கர்தரும் மேதி னிக்குயர் சீர்மையும்

ஆர்யா.

(1) இம்மகி மைபொருந் தியதோர்—இனிதூ ரதில்வே தியர்குல மதிலணிதோர்

இன்மைப் பசுபதியாரே—யெனவுயர் பெயருற் றிசைதொண்
டுறுவாரே

(2) மறையே யுருவொடு வந்தார்—மனமீ துயர்சுரு தியின்னி
சையுவந்தார்
கறையின் கண்டனர் மகிழக்—கதிதரு தொண்டுதனையேசெய்
தனர்புகழ.

(3) கரைமே வியகம் பலையுட்—கடுவொலி கறங்க வறையுறு
வண்டொலியும்
நிறைகரு வரால்கள் பிறழும்—நிரைநெடு கயனீ ரிடைசெய்
தஞ்சலியும்.

பதம். இராகம்-கமாசு. தாளம்-ஆதி.

பல்லவி.

பக்திபொ ருந்தினரே சிறந்தனரே

அநுபல்லவி.

முக்திபெ றுமதியார் மூர்த்திப சுபதியார் (பக்தி)

சரணங்கள்.

(1) செங்கம லமென்தடத் தினிற்கழுத் தளவிட
விங்கித ரிருந்திட யிசையமர்ந் திருந்திடப் (பக்தி)

(2) உச்சிமேற் கைகுவித்து உருத்ர மும்ஜபித்துப்
பித்தர்ம கிழநத்தும் பேரின்ப மும்பொருத்தும் (பக்தி)

(3) நீரினுள் நெருப்பென்று நிகழ்ந்திட மனம்நின்று
மாரணி யவர்க்கென்று மங்கமர்ந் திடவென்றும் (பக்தி)

(4) திருமலர்ப் பொருட்டிருந் திருந்தவ னையொப்பாரும்
மருவும றைக்குயரு மானருத் ரம்பகரும் (பக்தி)

விருத்தம்.

உருத்திரமே பகர்வுறலால் உருத்ரபசு பதியாரென் றுலகோர்
மெச்ச
வருத்தியொடு மான்மகிழ வநுதினமப் பணிவிடையா லமர்ந்தா
ராகக்

கருத்தினரென் றீசரெணிக் கமலமெனுந் தங்கமுற்கா ளாக்குமந்த
நிருத்தனர்முன் பிருந்துதிற மாம்பதத்தில் நிலேவுறவே நின்றார்
மாதோ.

பலசுருதி ஆர்யா.

இந்தவி தந்தொண் டமரு—மிசைபசு பதியா ரின்கா தையி
லெவரும்
சிந்தைபொ ருத்திட நேரே தெளிவுறு மிகபா லகமுறு
வர்கள்சீரே.

உருத்திர பசுபதி நாயனுர் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| பஞ்சசாமரம் | 1 | பதம் | 1 |
| ஆர்யா | 2 | விருத்தம் | 1 |
| | | ஆக | 5 |

ஆ_ சரித்திரங்கள் 18-க்கு உருப்படிகள் 415.

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 19 † திருநாளைப்போவார் நாயனுர் சரித்திரம்.

(அண்ணுமலை செட்டியார் காவடிச் சிந்தில் சந்தவரைகந்தருக
நாதா என்ற வர்ணமெட்டுப்போல.)

கண்ணிகள்.

(1) சீருலவும் பொன்னிவள நாடு—தனில்—செழித்திடுங்
கொள்ளிடமுங் கூடும்-அதில்
செழுமணி களைத்தந்தம் திரைக்காத் தால்முகந்து சேர்க்கு
மரை களார்க்கும்

(2) அந்நதியிற் பாயும்பணை சேரும்-பழைய ஆதனூரென்
ஒருபதி யாரும்—அதில்
அகண்ட வொளிபெருகி நிகழ்ந்திடுந் திருநீற்றி லணையுந்
தொண்டு பிணையும்

(3) பழனங்க ளிற்கருப்பஞ் சாறே—பாய்ந்து—பழந்தொளி
யாக்கவுறுஞ் சேறே—உழுதும்
பகட்டேர் கொழுக்கிழித்து மகட்டுறுஞ் சாலில்வரால்
பாயும் வந்துதோயும்

(4) சேற்றலவன் கணங்கரு வுயிர்க்கும்—செழும்—செங்க மலங்
களுமுருகுயிர்க்கும்—செறி
தேன்கள் பொழிந்து விரை திகழ்தளி ரொடுதருச் சேரும்
வானி லாரும்

(5) அத்தருக்க ணின்றசைக்கத் தேனைப்—பொழியு—மலங்கிருத
மாகவருஞ் சோனை—பெருக
அதுபுனன் மழையல தலர்மது மழையோவென் றறியும்
பூஞ்சோலை செறியும்

(6) பாளைவிரி மணங்கமிழ்ப் பைங்காய்த்—தெங்கின்—தாளதிர
முட்டிடக்கி டங்காய்ப்—பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழமிதப் பப்பலாவின் தேனே
(a) உகளும் தானே

(7) நந்தனம லிரெங்கெணு நகமழும்—அதின்—னறை மயவண்
டினமுண்டு முமிழும்—திசையின்
நாற்புற முமாடங்கள் மேற்புறத் தின்புயலை நாடும்
மகிழ்வோடும்.

நொண்டிச்சிந்து

நந்தனார் சரித்திரத்தில்

(ஐயேவொரு சேதிகேளும் என்ற வர்ணமெட்டுப்போல)

கண்ணிகள்.

(1) இத்தகைமை பெற்றவளமும்—பழன மின்பமுடன் நகர்சுற்றி
யேற்கும் வளமும்

---

(a) உகளும்—பாய்ந்துவிளையாடும்.

எத்திசையு மெச்சவுழுதும்—தொழிலில் ஏற்றமுறு
குழுவினர் நின்று மொழுகும்

(2) மலமகல் புலைப்பாடி—மருவும் மனைகளின் கூரைகளை முற்று
மூடிக்
குலவிய சுரைக்கொடியும் பார்ப்புட்—குலவுங்கு
ரைத்துநாயும் வந்துபடியும்

(3) வகைகளு மக்களுறங்க—நிழல் மன்னுமருதங்கள் நின்று
மெங்கும்பிறங்க்
மிகையுறுங் கடைஞர் செயல்—செயவேண்டி—விழிக்கக்க
தறும்யாம வாரணத்தி யல்

(4) பெங்கும்விளங் கிடநாடிப்—புலைய ரின்பமுயர் காஞ்சிநிழல்
பம்பக்கூ டிப்
பொங்குமானந் தமுங்களிக்க—நெற்குத்தும் பொழுதுசெய்
திடுமின்பப் பாட்டுமொலிக்க

(5) புள்ளுந்தண் புனற்கலிக்கும்—பொய்கையினில் பூங்குவளை
நீங்கமது வேங்க நிலைக் கும்
கள்ளுண்டு களிதூங்கப்—புலைச்சியர்கள் கறங்கும்ப
றையடிக்கு மொலியோங்க

(6) இத்தகைவ ளங்கள்பொருந்தும்—சேரி யினிற்கொரு
கூவிளமா மன்னத்திருந் தும்
சத்திசிவத் தினில்விருப் பார்—மதிநிதம் சருவுநந்
தனரொன்று ருவரிருப்பார்.

பதம். இராகப்-சங்கராபரணம். தாளம்-சாப்பு.

பல்லவி.

பக்திபு ரிந்துசிறந் தார் இந்தப் பாரினைசதுறந்தார் (பக்தி

அநுபல்லவி.

சுத்தநிஷ் களங்கமாம் ஜோதிஸ்வ ரூபமான
நித்தியவஸ் துவைத்தேடி நிமலநந் தனர்நாடி (பக்தி)

சரணங்கள்.

(1) சேரிக்கு ளதிபரா நின்று—பண்ணைத் திறத்தொழி
லிலுழு
நாரிபா கர்க்குரிய நயத்தொண்டு றுதியென்றும்
கூறும்பே ரின்பவழி கூட்டுமார்க் கமேயென்றும்

(2) ஈசரா லயங்களெங் கெங்கும்—நாத மிசையும்பே ரிசை
முழங்கு
மாசறு தோலுக்வி மதுரவி சையிணங்கும்
ஓசைவீ ணையாழ்தந்திரி யுதவுட னம்விளங்கும்

(3) எங்கள ரன்மகிழ்ந்து களிக்க—அன்ப ரினியகோ
சங்கரர் பேரன்பின் தண்ணளியிற் குளிக்கப்
பொங்குமா னந்தக்கடல் பொங்கிவந் துகொப் பளி

(4) ஆலயங் களெங்கெங்குஞ்சென்று—அங் காணுர்ஸந்
வாயில்
ஆலமுண் டோனுமங்க ளனவா தங்கழன்று
ஆடிப்பா டிக்கொண்டாடி யறுவை ரிகள்வென்று

வெண்பா.

இந்த விதந்தொண்டு மியற்றித் திருப்புன்கூர்
நந்துசிவ லோக நாதரடி-யுந்துதித்து
நந்தனா ரின்ப நயம்பெறுதற் கன்புறுவைத்
தந்தநக ரிற்குமனைந் தார்.

விருத்தம்.

திருப்புன்கூர்ச் சிவலோக நாதனையே நந்தனார் வேளைவெ
அருத்தியுற நந்திமறைத் திட்டதிரு லவர்விலக வானையன்
வருத்தமொடு வேண்டிநிற்க ஈசர்மன மகிழ்ந்தவர்தாண்

திருத்தமொடு தெரிசனைசெய் திடநந்தி தனக்கிதனைச் செ

பதம். இராகம்-சென்ஸ்ஜுடுட்டி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

நந்திகேச சற்றேவிலகு நந்த னந்தந் தெரிசனை செய்ய (நந்தி)

அநுபல்லவி.

சிந்தை மகிழ்ந்து நந்த னம்மை சேவை செய்யவு மாவ
லுற்றதால் (நந்தி)

சரணங்கள்.

(1) ஆநந்தக்கண்ணீர் பெருகிச்சொரிய வகவிதழ் மரைபூத்து—நம
தடியி ணைகளில் நிறைய மகிழ்ந்து மநுதி னமதிற்
சேர்த்து—மபி
மானமுடனே குதித்து—நம்மை மனதுவந் திடத்துதித்து
நிற்கும்
மோனமு டைய ஞானியென் றெண்ணு முக்த னித்தனென்
றுற்று மதித்து (நந்தி)

(2) ஒரும தியினு லிருவி னைமூன்று யுறும லங்களை வென்று—
அவர்க்
குரிய நான்காம் பதவி யடைய யுண்மைப் பொருளி
தென்று—நம்மையே
கருது மனத்தைப் பொருந்து மன்பர் கவலை விலகத்
திருந்து நம்
கருணை யளிக்கச் சிறந்து பொருந்து கருவி யுருவ மெனவுந்
தெரிந்து (நந்தி)

ஆர்யா.

சங்கர னிவ்வித மறையத்-தனிநந் திகேச னிடம்வி லகிட மறையத்-
துங்க மிகுநந்த னரே-சுந்தரர் தரிசன மதே செய் திடுவாரே.

பதம். இராகம்-கானடா. தாளம்-ஆதி.

பல்லவி.

தெரிசனஞ் செய்தார் இருவினை கொய்தார்

அநுபல்லவி.

நறுமல ரடிகண்டு நந்தன ரின்பம்கொண்டு (தெரி)

சரணங்கள்.

(1) தேனவிழ்த் திடுங்கொன்றைச் செழுமலர்த் தொடையும்
திங்களும் ஸுரநதி திகழும்பொற் சடையும்
தீனர்கட் களியளித் திடும்நற்கட் கடையும்
செந்திரு மாலுருவம் ஜனித்தவெள் விடையும் (தெரி)
(2) தேவர்கள் போற்றும் பாதா சிவலோக நாதா
த்ருபுர பேத விநோத சின்மய நீத
ஆவலா யெற்குனளி யளிக்கலா காதா
ஐங்கர தாதயென வறைந்தன்பின் போதர் (தெரி)

ஸ்வாமி.

(1) என்றுதெ ரிசனஞ் செய்திடும் நந்தனர் ஏர்வையு றுங்குளம் நேரிலென் றெண்ணி
யென்றின்வி ழிக்கடை யாருள் முன்னிட வின்புறும் நன்குள மாகவே பண்ணி

(2) கோயில்வ லம்வந்து கொன்றைம திச்சடைக் குன்றவில் விஸந்நி தானத்த மர்ந்து
நேயமொ டுந்தொழு தாடிக்கொண் டாடித்தன் இன்பந கர்க்குள ணைந்தனர் வந்து

(3) அப்பதி நின்றுசி வப்பொருள் மேவு மபற்பதி யெப்பதி யாவிலு மேவி
ஒப்பில ரன்கழ லற் பொடு போற்றி யவர்ப்பதி மேவினை ரொப்பிமே தாவி

கேகாவளி.

முதம்பெ ருகிவரு சிதம்ப ருவிமதி யிசைந் தன்பரும்
சிதம்ப ரமதனை யடைந்தி டவெனுநி னைவுங் கொண்டனர்.

விருத்தம்.

இரவுகண் டுயிலாராகி யிசைந்திடப் புலர்ந்த தற்பின்
உறவினர் தம்மைவிட்டு மொருங்குறு மனத்த ராகிப்

பொறுமையாத் தில்லைநாளைப் போவனென் றுரைத்து ரைத்து
திருவிசற் பத்தில்நெஞ்சம் நிலைநிறுத் தியுறு மாதோ

பதம். இராகம்-பியாகடை. தாளம்-சாப்பு.

பல்லவி.

நாளைப்போ வேனென்று நாளைக் கழித்ததினுல்
நலமென்னெ னநவின்றனர்

அநுபல்லவி.

வாளைப்ப ழித்தவிழி யாள்பழி யாள்மயக்கின்
வலைக்குட்சிக் கிநின்றுக வலைக்குட்பட் டுழுழன்று (நாளை)

சரணங்கள்.

(1) ஐம்புலன் களையா னவர்பணி யிற்கமைக்க
அத்தொழி லிற்பொருந்தா தறுவை ரிக்குட்சிக்க
வம்பாமெ ழுபிறவி மருவிம யங்கியெய்க்க
வாஸனை மேவிடநல் வழியில்நின் றுதியக்க (நாளை)

(2) ஒளியிலா விழியினை யுற்றமாந் தர்கள்போல
வும்பா னான்பணிக் குதவா வுடம்புமேல
வெளியுறும் பாலைநில மேஜல மெனச்சால
வீண்மதி யினைநம்பி விடிலென்னென் றிடச்சீலர் (நாளை)

வெண்பா.

இந்தவித மன்பர்சொலி யின்பமுறுந் தம்பதிநின்
றந்தணர்மூ வாயிரவா ன்புபொருந்-துந்தரமாம்
அம்பலத்தில் நந்த னருத் தியொடு வந்தணைய
வம்பலத்து ளோர்களறிந் தார்.

ஆரியா.

அம்பல மேவிய நநத-ஞர்தங் கடையர்கு லமான துபொருந்த
வின்புறு மாணைபு மமைய-யினையா துருகிய றைவார்து யருபிணைய

பதம்: இராகம்-காம்போதி. தாளம்-ஆதி.

கண்ணிகள்

(1) முந்தைவி திப்பயனோ முதிர்தவத் தின்குறைவோ
முக்கணன் சோதனையோ வினையோ
யெந்தவி தத்திலோநான றிகில னெந்தையா
னிணையடிக் குநாளாகா தெனையோ

(2) கைக்குட்சிக் கியகனி வாய்க்குக்கிட் டாதவொரு
கதையினிற் கொப்பும்வகை காணுதே
பொய்க்குமிச் சடலத்திற் புலையனு மாப்பிறந்து
புன்செய லாலோவென்று தோணுதே

(3) மல்குந்தண் ணீர்வளமும் வயலுஞ்செந் நெல்வளமும்
மற்றும்வ ளமும்சேருந் தில்லையே
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்விப் புகையெங்கும்
பறந்திடு மும்பர்நக ரெல்லையே

(4) குன்றனை யமாளிகை தொறும்கு லவும்வேதிகை
ஒன்றிய மூவாயிரத் துறுமறை யோர்
மன்றுள்ந டம்புரிந்த மருமான் கழல்மலர்
மருவிக்கிட் டித்தொழாத தென்குறையோ

(5) மறையோர்செய் மறையோசை வழங்கும்வாத் யத்தினோசை
மன்றுளொ லிக்குங்கண்டா மணியோசை
குறைவில்லா திருசெவிக் குட்புகுந் திடக்கோயிற்
குட்செல விடுக்குதே யெனதாசை

(6) கஞ்சன்மு தலமரர் களிக்கநின் றுடும்பதம்
காணக்கா தலென்மனம் கலக்குதே
புன்ஜட லமாமீனப் புலையனு வந்ததனுற்
போற்றவொண் ணுமலதை விலக்குதே

(7) எந்த விதத்தில்மன் று ளிணங்குந டேசன்பத
விணைமலர் களைச்சிர மணிவேனோ

சுந்தர னருளன்றி வேறுமற் றொருவரின்
துணைகொண்ட நுதினமும் பணிவேனே.

கலித்துறை.

இந்தவி தந்தொண்ட ருஞ்சொல்லித் தில்லையி னெல்லைவலம்
வந்துப ணிந்து மிரவிற் றுயிலா வகையுளரா
எந்தவி தம்நட ராஜனைக் காண்ப தெனவிருக்கச்
சுந்தரன் சொற்பனத் திற்றன்மு றுவலிற் சொற்றனரே.

பதம். இராகம்-வஸந்தா. தாளம்-ஆதி.

பல்லவி.

அன்பனே யிதுசெய்கு வாய் உனை யாதரிக் குமதி லுய்த்வாய்

அநுபல்லவி.

துன்பவி னைவிலக்கித் தூரத்தியே யோட்டும்
இன்பமார் வழியில்நீ யிசைந்திடக் காட்டும் (அன்)

சரணங்கள்.

(1) தில்லைமூ வாயிரத்தோர் சேர்ந்துதீ வளர்த்துத்
தேடியு னையழைத்துத் தீயினிற் குதித்து
ஒல்லையில் வாவென்றவ ருரைப்பார்முன் னுதித்து
ஒழுங்குடன் வரில்பதங் கிட்டிடு மதித்து (அன்)

(2) தீயின்மூழ் கியெழுயிச் சென்மமும் விலகிச்
செம்பொன்மே னியில்முந்நூல் தெரிந்திடயிலகி
யேயும்பே ரின்பக்கட லிற்றுளித் தலகில்
இனியதொண் டர்க்குள்முன்னி விருப்பீரிவ் வுலகில் (அன்)

அபங்கு.

(1) அன்பருக் கிதுரை பன்ன- அதில் அகமகிழ்ந் தன்பரு மின்னத்
துன்பம்வி லகினதென் றுவந்தார்-ஜன்மத் தொல்லைப்ப
வக்கடலைத் துறந்தார்

(2) ஈசனந் தனையிட மேகித்-தீ யெழுப்பியன் பருக்குறவாகி-நம்
நேசரா மன்பரை யழைத்துத் தீயில் நெருங்கிவி
மூச்செய்திடிற் பிழைத்து-மன்பர்

(3) இன்புறு வரென்ற ரனறைந்த-மொழி யின்றிற்கிணங்
கிமறையோர் நிறைந்த
கும்புடன் தீவளர்த்தன் பரையே-நெருங்கிக் கூப்பிட
வந்தன்பரு முறையே

(4) தில்லை கரிற்றென்பு றத்தே-வளர்த்த தீயணைந் தநந்தனு
ருரத்தே-மகிழ்ந்
தெல்லின்க திரின்றியின் வலமே-சுற்றி யீசன்க ழல்நினைந்து
நலமே-தர

(5) வென்றடி யவர்தீயில் விழுந்தார்-என்றும் எழுபிறப்
பதனிலு மழுந்தார்
ஒன்றுமெய் யினில்முந்நூல் முடியே-வேணி யுறுமுனி
வடிவுறும் படியே-வந்த

(6) தொண்டர்செம் மலருறுந் தாதா-யென்னத் தோன்றிவந்
திடவிண்ணில் மீதார்
அண்டர்கள் மலர்மழை தூவ-அவை யகிலவு லகெங்கெணு
மேவ

வெண்பா.

இத்தகையார் தொண்ட ரினைமறையோர் போற்றிநிற்க
மெய்த்தவரும் கோயில்வலம் மேவிவந்து-நர்த்தனஞ்செய்
எந்தை நடராஜ ரின்பதங்கள் போற்றியன்ப
ரந்தரமா மின்பமடைந் தார்.

பதம். இராகம்-பூரிகல்யாணி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஈசர் பதத்தி லமர்ந்தார் ஏற்கு மிருவினையைபுந் துறந்தார் (ஈசர்)

அநுபல்லவி.

பூசுரர்வடி வுடனெங்க ளன்பர் புன்செய விகழ்ந் திடத்திட
வின்ப (ஈசர்)

### சரணங்கள்.

(1) தில்லை யந்தணர்கூட்டம்—மற்றும் ஜனங்களு மிக நாட்ட
—முடன்
எல்லையில் நின்றும் பார்க்கத் தெரியா தேக வெளியா
யிணங்கு மூரிய (ஈசர்)

(2) குஞ்சித பாதத் தாலே—யீசன் குலவு நர்த்தன மேலே
செய்யும்
ரஞ்சித நடம் புரிந் திடுமின்ப நயங்கண் டருகில் ஐயம்கொண்
டுருகி (ஈசர்)

(3) பொன்னு மொளியு ஞ்சால—நறும் பூவும் மணமும் போல
அன்பர்
மன்னுஞ் சிவமு மொன்றே யாகி மகிமை பொருந்தத்
திகழும் யோகி (ஈசர்)

### பலசுருதி விருத்தம்.

நந்தனார் சரிதந் தன்னை நயமொடு படித்துக் கேட்டுச்
சிந்தைமா மகிழ்வோர்க் கிந்த ஜன்மத்தின் பேறுமற்று
மந்தமா வுலகிற்கேற்கு மரும்பத மடைந்துஞ் சுற்று
மெந்தமா வினையுநீங்கி யினிதுட னிருப்பர் மாதோ.

நந்தனார் சரித்திரம் முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| காவடிச்சிந்துக்கண்ணி | 1 | விருத்தம் | 3 |
| நொண்டிச்சிந்து | 1 | கேகாவளி | 1 |
| பதம் | 6 | கண்ணிகள் | 1 |
| வெண்பா | 3 | கலித்துறை | 1 |
| ஆர்யா | 2 | அபங்கு | 1 |
| லாவாய் | 1 | ஆ௳ | 21 |

ஆ௳ சரித்திரங்கள் 19-க்கு உருப்படிகள் 436.

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 20 * திருக்குறிப்புத் தொண்ட நாயனார் சரித்திரம்.

லாவணி. இராகம்-ஹமீர் கல்யாணி, தாளம்-அடதாள சாப்பு.

கண்ணிகள்

(1) துதிக்குந் தொண்டை நாட்டில் கம்பை நதித்தடத்தினி லீசனைப்
பதித்திடவுமை பூசிக் கவெள்ளங் கதித்துப் பொங்கிநேசனை
(2) மோதிடுமெனத் தழுவக் குழைந்த ஜோதி மெய்யுருவான
ஓதியமறை துதிக்க மேவ வுயருங் காஞ்சி மாநகர் [வன்
(3) வாழு மேகாலியர்குலஞ்செய்த மாதவமென வுதித்தவர்
ஆழும் பவத்தின் கடலைச் சுவற்றி யடர்வினைகளைச் சதித்தவர்

ஆர்யா.

அடியார் தொண்டனில் வழுவா-சலதிற் சிலதும னதார வேதமூ வார்
வெடியுமுனே துயிலெழுவார்—விமலர்திருக்கோ புராதியைத் தொழுவார்

பதம். இராகம்-ஆநந்த பைரவி. தாளம்-ஆதி.

பல்லவி.

புரியுந் தொண்டின் சீரே யதன் மகிமை தெரியவல்லவர் யாரே
(சிவபெருமான் மகிழநேரே) (புரியும்)

அநுபல்லவி.

மருமலர்ச் சோலைதிகழ் காஞ்சிபுரம்மருவு (மதிக்கு மேகாலியர்
குல நிதியென வுதிக்கு மாவன் பருமன துருகியே) (புரியுந்)

சரணங்கள்.

(1) திருமா லுலவி வளர் புயமால் வருந்தி முனம்
தேடிக்கா ணாதபதம் நாடிப் பொருவில் மனம்
உருவா மூன்று மொத்துப் பரிவாயங் கறுதினம்
(உவந்து கருதிவி டாமலொ ருபடியாய் உணர்ந்த டியவர்க
ளிடம் கடைப்பிடியாய்) (புரியுந்)

(2) தமதுமும் மலவழுக் ககற்றவு பாயந்தேடிச் சத்திமி
குத்தசிவ பக்தர்க ளைக்கொண்டாடித்
தமைநேரு மவர்துகி லழுக்கெடுத் துமுந்நாடித்
(தப்பிவெ ளுத்துவு லர்த்திய டித்துத விப்ரிய மொத்துரி
தப்படி யிப்படிப் (புரியும்).

(3) குறிப்பறிந் தேவல்புரி குணத்திறு லன்பர் திருக்
குறிப்புத்தொண் டரெனப்பேர் நவிற்றும னத்தின்வரும்
வெறுப்பெவ்வ ளவுமின்றிப் பொறுத்துச்செய் தொண்டி
லொரு.
(a) (விதமேகருத்து வைத்திடச் செனியா (b) விதமே
கருத்து வைத்திடத்தனி யாய்ப் (புரியுந்).

வெண்பா.

இவ்வணநா டோறுந்தொண் டின்வழுவா தன்பர்செய
மைவண்ணக் கண்டர் மகிழ்ந்தருள—நைவண்ணத்
தாதலரா மாதவர்போ லையர் தனிக் காஞ்சி
மூதூர்க்குட் சென்றார் முயன்று.

பதம். இராகம்-சங்கராபரணம். தாளம்-ரூபகம்.

பல்லவி.

சோதித் தருள வந்தார் சொல்ல துலாதுல மாதவர்போ
லன்பரைச் (சோதித்)

(a) ஒருமாதிரியாகக் கர்ப்பத்தில் பொருந்தி (b) மறுதரம ஜனிக்காதபடி எண்ணங்கொண்டிட.

அநுபல்லவி.

மே தகுமன்பர்க் குதவிபுரிய வெறுப் பில்லாத்திருக் குறிப்புத்
தொண்டரைச் (சோதித்)

சரணங்கள்.

(1) வழுப்ப டாவண்ப ரகந்தை யொழிக்க மடித்த கந்தையை
யெடுத்து—யாரு
மழுக்கை யழுக்கால் மாய்த்த வியல்பென் றறிய வெளுத்துக்
கொடுத்துத்—தொண்டி
னழுத்த முலகோர் காணக் கண்-டனைவ ரும்பக்தி பூண-மிகப்
பழுத்த மேனியாத் தோணப்—பக்தி (பாவனையோ
ருளநாணப் பூவினிலன் பரையாணச்) (சோதித்)

(2) (a) மாதரை யுன்னுருக் கருளும் பதங்கள் (b) மாத-
ரையினிற் றோயப்—பதப்
போதரைக் கண நிலைப்பின் றிநடம் புரிகு றுநடை யேயக்
—காஞ்சி
மூதூர் மருகில் நாடி நம்பர் முதுமை காட்டித் தள் ளாடி
—மனத்
தாதரவொடுங் கூடி யயனனமென மிகவும்நேடி யறியாவுரு
வினர்தேடிச் (சோதித்)

(3) தொண்ட ரிசைபோல் மெயில்வி பூதித் தூளிதம் மிகச்
சொலிக்க—வதிற்
கொண்டல் படிந்த தென்ன வழுக்குக் கோலக் கந்தையும்
சலிக்கச்—சீதம்
டண்டுங் காலத்தை நோக்கி மாரி வடந்தை யாலுமுண்
டாக்கி—வைத்துக்
கொண்டு வெயில்முன் தேக்கி யெறிக் (குங்குணமா
முனமாக்கித் தங்குதொண்டர் வினைபோக்கிச்) (சோதித்)

கேகாவளி.

(1) அருந்த வரைநேர் பெருங்க ருணையே பொருந் தன்பர்நேர்
விரும்பு ப்ரிய மார் மருந்த னையதொண் டருங்கண் டனர்

(a) மாதரை—பெண்களை. (b) மா-தரை—பெருமை பொருந்திய பூமி.

(2) கடந்த பொருளென் றுடன்ப ணியமுன் படர்ந் தார்வினை
நடந்து செலவே திடங்கொள் தவரி னிடங் கூறினர்

இராகம். ஸ்ரீ தாளம் ரூபகம்.

கண்ணிகள்.

(1) அடியே னூழியஞ் செயும் படியாக் கந்தையைத் தந்தால்
அழுக்குப்போக் கிவெளுத்துக் கொடுப்பே னென்றார்
குடியார் பெருவண்ணாரே கொடிய குளிராற் றேடக்
கூடாக் கந்தையை நின்முன் கொடுக்கே னென்றார்

(2) கொடுக்கேனென் றதவரைக் கும்பிட்டு வாய்புதைத்துக்
கொண்டுப ரிதாபத்தோ டிதுகூறுவார்—தாங்கள்
உடுத்தகந் தையைச்சுத்த மாக்கிக்கொ டுக்கில் நாயேன்
எடுத்தஜன் மம்சுத்த மெனத்தேறுவார்.

(3) செப்புமொ ழிகேட்டய்ய ரொப்பிக்கொ டுக்கக்கந்தை
யைப்புழுக் கியழுக்கை யெடுப்பீரா—நீர்
இப்பாரு மறையுமுன் றப்பாமல் தப்பியதை
வெப்பம்பெ றவுலர்த்திக் கொடுப்பீரா

(4) என்றவ சனங்கேட்டு நன்றென விசைந்தன்பர்
வர்த்துக்கந் தையைக்கையி லேயெடுத்தார்
யின்றுத வாதேதற்கிழுத் தேகத்திற் கிடருமெய்
யிடுஞ்சோக மும்நீர்தந்த தெனக்கொடுத்தார்.

வெண்பா.

(c) இருங்கந்தையைத்தம் மிருவினை நெல்வித்துக்
கொருங்கந்தை யொப்பாக வுன்னிப்—பருங்கந்தை
மானுமொய்ப பினார் சிரமேல் வைத்தி லத்திலுற்றமதி
மானுண்மகிழ்ந் தேயிது செய்வார்.

(c) பெருமை பொருந்திய கந்தைத் துணியைத் தம்முடைய இரு வினையாகும் நெல்லான வித்துக்குப் பொருந்தும் அந்தை நிகராகப் பொருந்தி பெரிய தூணைப்போ லுயர்ந்த தோளினையுடையவர் சிரம்மேல் வைத்து.

பதம். இராகம்-சுருட்டி. தாளம்-ஆதி.

பல்லவி.

கோதி லாதவன்ப னீதுசெய் தனர்திருக் குறிப்புத் தொண்டனார்

அநுபல்லவி.

மாது பிரியார்க்கடித் தொண்ட ரிடத்திற்பக்தி
வைக்கும் மிண்டனார் மனதிற்சற்றுங் (கோதிலாத)

சரணங்கள்.

(1) (a) குளக்கண்ண ரைமதிக்கு முளக்கண்ணைத் தரைக்கணங்
கூடமறவார்—நிறை
(b) குளக்கண்ண ரைமட்டுஞ்சென் றழுக்கடி யடித்தன
ொழுக்கம் பெறுவார் (கோதி)

(2) சற்று நேரமுவர் மண்பிடித் தூறிட வைத்துத் (c) தப்புவார்
மிக
நெற்றிவெ யரொழுகப் பற்றும்பி றவிகளில் நின்றுந்
(d) தப்புவார் (கோதி)

(3) உள்ளாவி சுகம்பெறத் தள்ளாவி ரதர்நன்று வெள்ளாவி
யிற் (e) புழுக்குவார்—சற்று
மெள்ளாம லில்லறத்தைத் தள்ளாமற் பவங்களைக்
கொள்ளாம லே (f) புழுக்குவார் (கோதி)

கலித்துறை.

விரைவாப் புழுக்கி வெளுத்துலர்த் திப்பத்தி மெய்த்தவர்மெய்
சரைவாய்ந்த தால்நடுக் கெய்துமென் றேதகை தங்கவுண்மை
யுரைவாயர் நல்குவ மென்ன முயல்வு மேசரெண் ணத்
திரைவாயின் மொண்டுமை நீங்காது பெய்யச்சிந் தித்தனரே.

---

(a) குளக்கண்ணரை—நெற்றிக்கண்ணையுடையவரை. (b) குளக் கண்—அரைமட்டும்—தடாக்த்திடத்தில் அரையளவு. (c) தப்புவார்—வெளுப் பார். (d) தப்புவார்—தப்பிப்போடுவார். (e) புழுக்குவார்—அவிப்பார். (f) புழுக்குவார்—நீக்குவார்.

பதம். இராகம்-நாட்டைக் குறிஞ்சி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

தனியே புலம்பினர் சொல்லிந் தனைக்குஞ் செய்யுந்தீ விணைக்கு
மாளாகி னேனெனத் (தனியே)

அநுபல்லவி.

கனிவு டனன்ப ரிடத்தி லுடுத்தக் கந்தையை யோர்த்தத
கந்தையென் றே நன்றே வெனத் (தனியே)

சரணங்கள்.

(1) நேய ரிடத்திற் றுகிலேற் கும்போதா காயம் நின்மல
மாச்சுதே—நம்பீ
யேய தைவெளுத் துதவு வேனென்ற சாயம் வெளுக்துப்
போச்சுதே—யென்ன
மாய முன் செய்யும் விணை யோ மழு மாரர் செய்த சோ
தனையோ—வெனத்
தாயி னுமன்பர்க் குதவி டாமல்மை தண்ணீராப் பொழியக்
கண்ணீர் வழியத் தொண்டர் தன்னம் (தனியே)

(2) இடைவி டாமற்கண் ணுறைந்தி டக்கூட விடைவெளி
யின்றிப் பெய்யுதே—பகற்
கடிகை யுஞ்செலச் செலமைக் கொண்டல் களுங் நிறைந்திருள்
செய்யுதே—யென்ன
நடைபி சகிடலாமா சொன் னு ணயமிப்படிப் போமா
ஊழிக்
கடையி லிப்படிப் பெயுருமன் பாதைக் கண்டேனேபாவி
விண்டே னுவி நிற்காதெனத் (தனியே)

(3) அழுக்க டியடித் தவுடன் னிழ லதனிற் காயவைத்தே
னில்லையே—ஐயா
பழுத்த வுடம்பு குளிரால் நடுக்கப் படுமென் றெண்ணுமற்
சொல்லையே—நீஇ
வழுத்த மாயுரைத் தேனே—மிக வஸத்ய னென்றெனத்
தானே—யாரும்

வழுத்தி டயிது வரைக்குஞ் செய்தொண்டின் மதிப்பிழ
ந்தேனே தளர்ந்தேனே யெனவன்பர் (தனியே)

ஆரியா.

(1) மெய்த்தவ சிக்கிட ராக்கும்—வினையே னுயிர்வைப்
பதாலெ ன்சிலாக்யம்
சித்திக் கும்மென நாடித்—திடவா லோசனை யினுலு
மிசைதேடி

(2) சந்தைது வைத்திடு பாறைக்—கன்மீ துதலையி னைமோதி
டவுநேரே
சிந்தைம கிழ்ந்தா னுரே சீரன் பர்முனுத யமாகி யருள்வாரே

பதம். இராகம்-பியாக். தாளம்-சாப்பு.

பல்லவி.

அருளினுர் மறைப்பொருளினுர் தெருளினுர்க் (கருளி)

அநுபல்லவி.

கருமைக்கந் தார்தயைக் கருமைக்கந் தார்பக்தர்க் (கருளி)

சரணங்கள்.

(1) சிந்தைத்து யரைக்காட்டி நொந்தக்கு னிராலாட்டிக்
கந்தைத ரப்பாராட்டித் தந்ததற் குநீராட்டி
யிந்துவை யொப்பா—வெளுத்திடுவே னென்றது தப்பா
முடியக்கல்லின்
சந்தத்த லையமோத வந்தவே ளையில்நாதர் (அருளி)

(2) கல்லின்மேற் செழுமறை மெல்லித ளோடுவினைந்
தொல்லையெ ழுந்தடுதன
சொல்லும்ப டிக்கவ்வன்னக் காரணங் காட்டி யிசரபயக்
கையினை நீட்டி
(தொண்டர் தலையைப்) புல்லிப் பிடித்துவந்து நல்லன்ப
வெனநயந் (தருளி)

(3) மையின்ம ழைநிறக்கப்பூ மலரின்ம ழைபொழியத் துய்யரின்
றொண்டினைச்

சோதித்திட் டோஞ்செழிய
வையங்கள்புகழ க்கையிலையில்நீ வந்தென் று மகிழ
விருந்துவாழ்கென்
றய்யரு மைமாதோடுந் துய்யவி டைமீதெழுந் (தருளி)

பலகுருகி விருத்தம்.

அன்பர்குறிப் பறிந்தேவல் புரியத்தொண்ட ஞர்க்கானர்
மகிழ்ந்தருளிக் கையிலை யிற்சேர்த்
தின்பமுறச் செயுங்காதை யிதனைக்கேழ்ப்போ ரிகத்தினில
ரோகத்ருட காத்ராராகித்
துன்பகற்றி நிறையாயுள் மைந்தர்செல்வந் துலங்குவிவே
கம்பொருமை தயையுதார
மின்பநிறைந் தோங்கிப்பின் சிவலோகத்தினி னிதாயெந்
நாளும்வசித் திருப்பர் மாதோ.

திருக்குறிப்புத் தொண்ட நாயனர் சரித்திரம் முற்றிற்று.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆ லாவணி | 1 | கலித்துறை | 1 | ஆ உருப்படிகள் 14 |
| ஆ பதம் | 5 | கேகாவளி | 1 | ஆ சரித்திரங்கள் |
| ஆர்யா | 2 | கண்ணிகள் | 1 | 20-க்கு உருப்படிகள் |
| வெண்பா | 2 | விருத்தம் | ‌. | 450. |

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 21 * சண்டேச நாயனர் சரித்திரம்.

லாவணி. இராகம்-இந்துஸ்தானி. தாளம்-ஆதி.
ஸாங்கியாகவும் பாடலாம்.

(1) திருவளர் பொன்னிப் புனனட் டினில் மண்ணித் தென்கரை
தனில்வாழு-

மொருவரை கிழிதர வயில்விடுத் தமுருக ருதவும்சேய்
ஞலூர் வாழும்

(2) வெண்ணீற் றொருமையிரு பிறப்புமுத் தழல்நான்கு வேதமு
முறைநாடுவார்
எண்ணுமைம் புலனும்பின் னிடவறு தொழில்செய யேழுல
குங்கொண்டாடு வார்

(3) மானசி னமுந்நூல் மார்புறக் குழைக்குஞ்சி வயங்குஞ்சி
றுவர்குருவும்
மானவு டுக்கண்மதி நேரம டங்கடொறும் மறையொலிக்
கவின்வெரு வும்

(4) யாகசாலைதொறுவியுண வருமா லயன்புட் களுமின்ப
மாதுஞ்சேக் கைபோலு மிந்திரன்யானைகட்டுங்கந் தனைய
யூபஸ்தம்பம்

(5) நிறுவிய விடங்களு மோமதே னுப்பால் நிறைமடி
களி(1)னொழுக் கும்
நறியத டங்களாடி மறையோர்ம களிரோடு நாடும
வரி(2)னொழுக் கும்

(6) தாளஞ் சொரிபூ கப்பாளைகளினைச் சாய்மரை களைப்போல
நிரைநிரை யாநாட் டியசாலைகள்பல நிகழுறை மிசஞ்சால

(7) பண்பய னிசைபா லின்பயன் சுவைகண் பயன்பா
லொளிநா வின்
எண்பய னைந்தெழுத் தெழிலியின் பயன்மழை யிருமறைப்
பயன்சைவம்

(8) அன்னமண் ணின்பய னவ்வூர்ப் பெருமையை யாரும்புக
ழுத்தாமா
இன்னதன் மைக்குமுன்னே ருரைபய ஞசைகொண்ட
வெளியிறுற் சொல்லுந்திரமா

(9) அபயகுலோத்துங்கச் சோழன்றில் லையெல்லை
யனைத்தும்பொன் மயமாக்கித்
தபன னென் னமரு வலரை வென்று புவி தனிலுறுங்
கலிநீக்கி

---

(1) ஒழுக்கும்—தாரையும. (2) ஒழுக்கும்—ஒழுக்கமான நடையும்.

(10) அனபாய னெனும் பெயருற்றவன்மா பதனோர் முடிசூட்டும்
தனமே வியபதி யைந்துளொன் றெனச் சொலுந்
தகையோர் புகழ்நாட்டும்.

ஆரியா.

இத்தகை மேவிய மூதூர்—ரெனும்வார் கடலுத யபாநு
வெனவோதும்
அத்தகை பெற்றவர் நேரே யணிவேதி யர்கள்குலதீப நிகர்வாரே.

பதம். இராகம்-காம்போதி. தாளம்-ஆதி.

பல்லவி.

அவதா ரஞ்செய்தார் சண்டேசர்திரு (வவதாரம்)

அநுபல்லவி.

பவதா ரணஞ்செயுஞ் சிவதா ரகப்ரும்ம பக்திப ழுத்துக
ருத்தொடும் சித்திபெறும் (அவதாரம்)

சரணங்கள்.

(1) பண்புடை யோர்நாளுந் திகழ்சேய்ஞலூ ரின்புறத்
தனியாளும்—மறையவரு
ளெண்பெறு மனைவாழுங் காசிபகோத் திரச்சார் பினிற்
சூழ்—கிரணமணி
யும்பணி நஞ்சமுற நல்கும்ப ணிப தெனப் பம்புமி ருவினைக்
கோர் படிவ மாகிமனத்
திண்பெறு மெச்சதத்தன் றிருமனை வயிற்றிகத் தின்பெரு
மணிபும்பே ரன்பர்சிக மணியென (அவதாரம்)

(2) மறையோர் மகிழ்ந்திக்க வெவருந்சைவத் துறைநல
மெனக்குதிக்க—கையிலையில்நம்
மிறையொன் மனத்திலுதிக்க—செயுங்கருணை யினில்முழு
கித்துதிக்க—வென்றுங்
குறைவில்லா த பே ரின்பத்தின் றிளைக்கக் குவலயத்
தினிற்சிவ பக்தியை விளைக்கத்

தரையி லுள்ள தொண்டர் யாவரும் பிழைக்கத் தருமுதா
ரவிசார சர்மனெ னத்தழைக்க (அவதாரம்)

(3) நியமா கமம்பெருக மறையவர்கள் நியமா திகள் பெருக
—முனிவர்மனத்
தியமா தியுங்களிக்கச் சிவபக்தர்மெய் யெங்கும்வி
பூதிஜ்வலிக்கப்—புகழ்பெரியோர்
தயையெல்லா முருவாத் தழைத்தகா ருண்ய ஸம்பத்தி
லுர்த்தே ஜோலா வண்ய
மயமா கியுஞ்சிவ பதஸாத் குண்ய மாக ராகசோ காதிகளு
நீக்கும்புண்யர் (அவதாரம்)

ஸ்வாய்.

(1) (a) தந்தைய னையர்தகு சிந்தைம கிழ்ந்திட வெந்தைய
வதரித் தைந்தென வோதும்
சந்தப்ப ருவம மைந்திட வாகம முந்தனி வேதங்க
ளின்பொருள் மீதும்

(2) வந்திடும் பல்கலை யுந்தனின் முந்தவு ணர்ந்திடுந் தொந்தமி
குந்தநி றைவே
புந்தியில் யாவுந்தெ ரிந்திடத் தண்முகை யின்றன்ம
ணமடக் குந்தன்மை போலே

(3) தம்முள்ள டக்கிவெ ளியில்வி டாதறத் தக்கவ யதுமே
மாகிட நேரே
ரம்மிய மாகவுந் தந்தையு பநய னம்புரிந் தோதுவிக்
கத்தெரிந் தாரே.

பதம். இராகம்-இந்துஸ்தானிகாபி. தாளம்-ஆதி.
ஜானந்தேரே ஜானியென்ற வர்ணமெட்டுப்போல.

பல்லவி.

உரைக்கவுந் தெரிந்தார் முன் னுணர்ந்தறிந் தார் (உரைக்க)

(a) தந்தை—பிரமன்.

அநுபல்லவி.

(1) தரைக்குள்வே தாகம சாஸ்திரங்கள னேகமாக்
கரைக்குள்மோதும் (b) பல்கலை கவௌனப்(c)கல்கலை (உரை)

(2) வாஸமறை கூவிட வாய்ந்தபொரு ளும்நட
ராஜரடித் துணையென நாடுவா ரிடம் (உரைக்க)

(3) தந்தையுப மானிக்கத் தக்கோர்கள்ஸ மானிக்க
வைந்தடக்கு வோர்மனத்து ளபிமானிக்க (உரைக்க)

(4) ஆச்சரிய நாடவே யனைவருங்கொண் டாடவே
வாய்ச்சகலை யாவுமிவர் மனங்கூடவே (உரைக்க)

விருத்தம்.

(d) ஓதுவித்ததினுமேலா யுரைக்கமறை யவர்மைந்த ருடன்சூழ்ந்
துற்ற
(e) போதுவித்த கருங்காணப் பசுநிறைமேய்த் திடுமிடையன்
போதவாங் கோர்
(f) ஆதுவித்தன் கோடுகளால் முட்டவவன் கோல்கொடுகூ
சாதடிக்கத்
(g) தீதுவித்த னையமூடா நில்லெனம கிமையையய் யர்
செப்புவாரே.

பதம். இராகம்-சங்கராபரணம். தாளம்-ரூபகம்.

பல்லவி.

தொடலாமோ துரோகி துரோகி துரோகி கையாற் (தொட)

---

(b) பல்கு, அலை...பெருகிவரும், அலை. (c) பல்கலை—பலவிதமான சாஸ்திரம்.

(d) ஓதுவித்ததினும்—கற்பித்துக் கொடுத்ததினும். (e) சூழ்ந்துற்ற போது, வித்தகரும் காண—சூழ்ந்த ஸமயத்தில், படித்தவருங்காண. (f) ஆதுவித்தன், கோடுகளால்—பசுவினுடைய இரண்டு கொம்புகளால். (g) தீது, வித்து, அனைய—தீங்குகளுக்கு, விரைபோன்ற.

அநுபல்லவி.

தொடலாமோ பசுத்துன்பம் படலாமோ காணிற்கும்
பிடலாம்பொ ருளெனச்சற் றேனுமறிந்திலை
கோனே ஒருசிறுதுரும் பானும் (தொடலாமோ)

சரணங்கள்.

(1) புவனத்ர யத்திலுள்ளோர் பூஜைசெய் யும்மூர்த்தம்
அவனியில் புண்யதீர்த்த
மனைத்தும் நிறைந் திவரும்பெ ரும்பதார்த்த
மெனத்தெரிந்தும்
கவனியா மலடித்தாய் கருத்தினம்பிது வேதார்த்தம்
எதார்த்தம் (தொடலாமோ)

(2) தினமுமி தன்முகத்திற் றெரிசித்த வர்க்குக்கூடும்
கனவிலுந் துன்பெய்தா து புண்யமோ வென்றால் மனதிற்கு
மடங்காது
மங்கலம்பொங்கும் அனவர தமுனிவோ ரகமும்விண்ணோ
ரகமுமிதி லடங்கும் மடங்கத் (தொடலாமோ)

(3) நடராஜர் நதிமதி யணியுஞ்சி ரசிற்றினப் படிபொழி
பஞ்சகவ்யம்—பின்னும் நம்பரன்
புடனணிந் திடுந்திவ்ய மாகும்விபூதி
யுடனேயு தவும்பொருட் கிடமிதென் றறியோ தெரி
யாயோ கையாற் (றொட)

(4) (a) நம்பரைக் கண்டுமகிழ் (b) நம்பரை யுடன்றாங்கு
மின்பம்பொ ருந்துந்தன்ம மே விடைத்தேவரென றம்புவி
பணிஜன்மமே—யவர்க்குமிதன்
கும்பெல்லாம் பந்துவென்றால் கூறிடும் தாமா கம்பா
லுறமாத் திறமாத் (தொட)

---

(a) நம்பரை—ஈசனை. (b) நம்-பரை—நம்மையாதரிக்கும் பார்வதி.

வெண்பா.

(c) கோபால னைமனத்துட் கொண்டவர்முன் னின்றசினக்
(d) கோபால னுக்குமன்பு கூறவே—(e) கோபால
னத்தனைநே ராகுமெங்க ளையனார் தம்மகத்து
ளத்தனையுந் தேர்ந்துரைப்ப ரால்.

பதம். இராகம்-நாதநாமகிரியை. தாளம்-ஆதி.

பிருகனைனஜாரேயென்ற இந்துஸ்தானிபோல.

பல்லவி.

பசுக்களைமேய்ப் பேனென்றார் பவங்களைத்தீக் கநின்றார் (பசுக்)

அநுபல்லவி.

வசுக்களைத் தேற்றி மனக்களை மாற்றி
யசுக்களைெயல் லாம்ரட்சிக்கு மதுகளைப் போற்றிப் (பசுக்)

சரணங்கள்.

(1) பாவனர்ச் சனைசெய்யக் காலனை யுதைத்தய்யர்
சாலவரு ளியதாலே தக்கதென வெண்ணிப்பையப் (பசுக்)

(2) ஆன்களை வருத்துவ ரழிவரென் றடிக்கடி
தேன்கணிகர் கண்கணீர் சிதறியங்கு நின்றபடிப் (பசுக்)

(3) ஆவினங் களிக்குமேல் மேவுந்துன் பொளிக்குமே
(f) கோவிடையா கோபநீங்கிப் (g) போவிடையா
வென்றுபாங்கிற் (பசுக்)

---

(c) கோபாலனை—நேத்திரத்தை நெற்றியிலுடையவனை. (d) கோபாலன்—இடையன். (e) கோ, பால், அனத்தனை—மேன்மையாகிய பால் போன்ற, வெண்மையுள்ள, அன்னத்தையுடைய பிரமனை.

(f) கோவிடையா—பசுக்களிடத்திலா. (g) போ-விடையா—இடையனே, போ.

சந்த விருத்தம்.

இந்தவுரை யன்பர்சொல வொந்திடைய னும்பணிவோ
டெழுகோலைத்
தந்துசெல வந்தணர கந்தொறும டைந்திவர்த கைமையாலே
சிந்தையினி னைந்ததனை யுஞ்சொலவி சைந்திடம தியின்மேலே
பந்தமற நின்றவரொ ழுந்தநிரை பின்செல்குவர் பரிவாலே

பதம். இராகம்-நாதநாமக்கிரியை. தாளம்-ஆதி.

பல்லவி.

ரக்ஷணை புரிந்தார் நயந் தெரிந்தார் கோஸம் (ரக்ஷணை)

அநுபல்லவி.

தட்சணங் கோலால் வித்தகர் மேலாய் (ரக்ஷணை)

சரணங்கள்.

(1) பருவாப் பினில் விட்டுப் பரிந்து முன்னிட்டுத்
திருமண்ணி யில்முழுக்கிட் டுச் சொரிந்து தேய்த்திட்
டருகையு டனே முத்திட்டுக் கோஸம் (ரக்ஷணை)

(2) பறித்துப் புல்லைக் கொடுத்துப் படுகை மேற் சாய்த்து
வெறித்தி டாமற் றேய்த்து
நிழலில் விட்டுப் பொறுக்குமட்டு மேய்த்துக் கோஸம் (ரக்ஷ)

(3) குஞ்சிமு டிச்ச விழக் கோவணத் தோடு முஞ்சி யுலைய
நீடுங் கிருஷ்ணாஜினை
முஞ்சிக்கு றவே கூடும் (ரக்ஷணை)

(4) கறக்கும் வேளை ஸோரபி களை யெலாம் விடுத்து நிறக்குநா
மமுச்சரித்து
ஸமி தாதானஞ் சிறக்க முடித்துத் தொடுத்துக் கோஸம்
(ரக்ஷணை)

விருத்தம்.

பருவமதிற் பெயுமழையாற் செழிக்க வோங்கும் பயிர்களெனப்
பசுக்குலங்கள் தழைத்துப் பாலும்
பெருகுநிறை குடம்போல மடிசுறந்து பெய்யமறை
யவர்களெல்லா மகிழ்வோ டிந்தச்
சுரபிகள் கன்றுகளை மறைக் கன்று மேய்த்தல் சுகமுறவே
வியப்புறவா வினங்களெல்லா
மருமையுட னய்யர்தமைச் சுற்றிநீங்கா தார்ந்ததாம் பேரின்பம்
சார்ந்ததாமே

பதம்-இராகம்-நாதநாமகிரியை-தாளம்-ஆதி. நீகுமரியாத
யென்ற ஜாவளிபோல.

பல்லவி.

ஆன்கள் பிரி யாமல் நாடு மான்க ளெல்லாங் கொண்டா
டுமய்யரை (ஆன்கள்)

அநுபல்லவி.

பலகோ டிஜீவன்கள் நாடி யலகிற் றவங்கள் செய்யக்கூடி
பழுத்தது போலே தழைத்தவர் பாலே பாலே சொரிந்திட
வன்பாலே யய்யரை (ஆன்கள்)

சரணங்கள்.

(1) அய்யர் மேனி யதனில் நாவால் செய்ய பூழி நீக்கும் பூவா
லதியொடுந் துள்ளு மதியின்பங் கொள்ளும்
அன்புடன் சுற்றிநீங்கா தகத்துள் ளுங்கறவை (ஆன்கள்)

(2) கட்டுத் தறி விட்டு நோக் கன்றெ திர்நின் றுலும் பாரா
தெட்டியே வோடு மெங்கெனத் தேடும்
சிட்டரைக் கண்டவுடன் செழிப்போ டுமய்யரை (ஆன்கள்)

(3) முத்த மிடல்போல் மோந்து பார்க்குஞ் சுத்தர் கையாற்
சொரியத் தாக்கு

முகத்தினை நீட்டு மகத்துவங் காட்டு
முன்னின்று சாய்மறை போல் வாலாட்டுமய்யரை (ஆன்கள்)

**விருத்தம்.**

(a) கேதனம்போல் வால்தூக்கிக் கண்களிலா னந்தவெள்ளம்
கிளைத்துப் பொங்க
(b) மாதனஞ்சேர் மடியில்முட்டுங் கன்றுகளை மறந்தாலு மறக்க
வொண்ணுப்
(c) போதநந்தா மறைக்கன்றை நீங்காமற் பால்பொழியும்
புதுமை நோக்கி
(d) நூதனமஞ் சனமாட்டிப் பூசைசெய்து சிவஸேவை
நுகர்வோ மென்றே

**கட்கா.**

* நாடிட யிருவினை யோடிட நிரைகளன் போடிட மிதுவெனக்
கூடிட மகிழ்வொடு தோடிட மலர்களைமாடொடு மணிகளை மாடிடு
மணிநதி நீடிய கரையினி லாடிய சரணரைத் தோடிடு செவிய
ரைக் கோடிட பரையன்ப ரோடினி யவரைவெண் கோடரி
யயன்முதற் றேடவ ரியவரை யாடக வரையரை யாடர வரைப்பூ
சனைசெய் திடவுற்றார் அதிதிட மனதிலெள் ளளவுக வடுமற்றார்

* நாடிட யிருவினை ஓடிட, நிரைகள்-பசுக்கூட்டங்கள், அன்போடு இடமிதுவெனக் கூடிட-மகிழ்வொடு, தோடு இடு அம் மலர்களை தாதுகள் பொருந்திய அழகியபுஷ்பங்களை, மாடொடு மணிகளை, ஸ்வர்ணத்தோடு யிரத்தினங்களை மாடிடு மணிநதி-பக்கத்தில் பொருந்திய மண்ணிநதி, நீடிய கரையினில், ஆடிய சரணரை-நர்த்தனஞ்செய்யும் பாதமுள்ள வீசனை, தோடிடு செவியரை-தோடெனு மாபரணந் தரித்த காதையுடையவரை, கோடு யிட

(a) கேதனம்-கொடி
(b) மாதனம்-பெருமையும் மேன்மையும்
(c) போத-நந்தா-ஞானங்கெடாத மறைக்கன்றை-வேதரூபமான யிளங் கன்றை அதாவது சண்டேசநாயனாரை
(d) நூதனமஞ்சனமாட்டி-புதிதாகவபிஷேகித்து

ப்ரை-கொம்புள்ள யிடபத்தை யுடையவரை, அன்பரோடு இனி யவரை, வெண்கோடு-வெண்மையான சங்கந்தரித்த அரியயன் முதல் தேடவரியவரை, ஆடக வரையரை-ஸவர்ண கிரி அதாவது மகாமேருவையுடையவரை, ஆடு அரவரை, ஆடும் ஸர்ப்பத்தை யுடையவரை,

பதம்-இராகம்-மாயாமாளவகெளளை தாளம் அடதாளசர்ப்பு
தநிவலசோரயே என்ற வர்ணமெட்டுப்போல்.

பல்லவி.

பூசனை செய்தாரே யுமை நேசனைவி சுவாஸமொடும் (பூசனை)

அநுபல்லவி.

மண்ணிநதிக் கரை யோர மணலில்மத் திமநேரம்
நண்ணு மாத்தி மாத்த ருகீரம் நிழ லண்ணிப் பிரியந் தொடுங்க
ணிலூரு மண
நாடித்தவந் தேடிச்சிவ (பூசனை)

சரணங்கள்.

(1) திருமதிலுங் கோபுரமுந் திகழ்சுற்றுச் சினகரமும்
அரிய (a)விதானமு மாதனமும் நன் குறியலிங்க மெனு
(b) மாதனமும்
மண லாற்சமைத்து மூர்த்தம்வைத்துப் (பூசனை)

(2) புதுக்குடங் களையேந்து வதற்குமுன் மடிசோர்ந்து
பூதேநுக்கள் பால்சொரிந்திடவே—யெங்கள் மாதேவர்க்
கென் றேதெரிந்திடவே
யன் புள்ளிமைத்துக் கோயி லுள்ளே வைத்துப் (பூசனை)

(3) பொருந்துபன் மலரெடுத்துத் திருந்துமர்ச்சனைதொடுத்துப்
பூசித்து நம்பர் சிர நிறைந்திடப்—பாலத்தி ருமஞ்ச னமு

(a) விதானமும, ஆதனமும்—கொடியும் ஆதனமும். (b) மாதன. மும்—பெருமையும மேன்மையும்.

பாசித் தய்யர் மிகச் சொரிந்திட-வாயாற் செப்பாமல் காலந்
தப்பாமற் சிவ (பூசனை)

(4) (c) ஆவின்பா லன்பா லாட்ட (d) அம்பலத் தின்பா டலாட்
மேவும் வாணர் மகிழ்ந்து மனங்கொள்ள
ப்பொற் போவி யம்போ லிருந்து கனிந்துள்ள மொத்
திருந்துதனை மறந்தானைப் (பூசனை)

விருத்தம்.

இப்படிக்குச் செய்யும்பூசைக் கினிதுவந்து குடங்கணிறைந்
திடுமாக் கண்ணி
தப்படிக்கி மறையவர்க ளகந்தொறுமுன் போல்பாலு தவுமங்கா
ணை
லப்படிக்கென் னய்யர்செய்கை யுணராதோர் வேதியரந் தணர்க்கு
ரைக்க
வெப்படிக்கிச் செய்வனென்றன் னோர்கள்முனிந் தய்யர்தந்தைக்
கியம்புவாரே

பதம்-இராகம்-சுருட்டி-தாளம்- ஆதி

பல்லவி.

மைந்தன் செய்கை யோக்யம் யாவர்க்கும் ஸந்தோஷ
முன்பாக்கியம்
உமதருமை (மைந்தன்)

அநுபல்லவி.

சந்துவி ரோதியு மானுனே யிது பத்தமோ யக்ஞ தத்வரேயு
மதருமை (மைந்தன்

சரணங்கள்.

ஆதியில் வேதியர் வீடுக டொறுந்தப் பாமல் வந்து
கேட்டார்-நல்லதென்

(c) ஆவின், பால், அன்பால் ஆட்ட-பசுக்களிடத்தில், அன்பைப்பா
ட்ட (d) அம்பலத்தின் பால் ஆட்டம்-சித்ஸபையினிடத்து, ஆட்டத்தை.

ரோநின படிக்கான் தேய்ப்பு மேய்ப்புகளை யொழுங்கா
நடத்திப் போட்டார்—எப்
போதினி லுமதிக மேனியுந் திடமாப் பொருந்திற்றுக்
கறக்குமே பால்குடங் குடமாய்
மீதியைக் காணோமே யிருக்குக் கபடமா விந்தையொன்
றையறிந் தோமொரு வனிடமாய் (மைந்தன்)

(2) எண்ணிக் குடங்குடமாப் பாலை விரைந்து கறந்திட்டது
களினிறைத்தான்-திரு
மண்ணி நதிக்கரைவெண் மணலில் சிதறியிட வாரி வாரி
யிறைத்தான்-நல்ல
புண்ணிய வேள்விதனக் கிசைந்திடும் பாலைப்-பொழியாம
லுலகினிற் பழியாஞ்சொல் மேலே
யண்ணிய வெங்களையும் பகத்தனன் பாலே (a) ஆக்குவித்
தானிப்படி (b) யாக்குவித்தா னெண்ணுமலே (மைந்தன்)

(3) வயிற்றுப் பிள்ளையை நம்பி மாடுமேய்க் கும்பிள்ளையை
மதித்திழந் தவர்போலும்-ஆசைக்
கயிற்றிற் சருக்கிட் டாசனை நம்பிப் புருடனைக் கையை
விட்டவர் போலும்-நமக்குப்
பயத்துட னேநடக்கு மிண்டயனை விட்டுப்-பையனை
நம்பிவிட்டோம் பசுக்களைத் தொட்டு
நயத்தில் மேய்ப்பதாச் சொன்னதை யிட்டு-நாடினோ
மெத்தப்பயன் தேடினோ மிந்தத்தேட்டு (மைந்தன்)

ஸவாய்.

(1) வேதிய ரிப்படி யோதிட விப்ரனு மெய்வெயர் வோடிட
நைவினனே
ஆதிமு தலிந்தச் சேதியி லெட்டுணை யாயினும் யானறி
வேனெனிற் றோஷி

(2) என்றினி மேற்குற்றம் வந்திடி லென்னதெ னப்பணிந்
தேபொறுப் பீரென வேண்டி

(a) ஆக்குவித்தான்-பசுக்களைக்குவித்தான் (b)ஆக்குவித்தான்-செய்வித்தான்

கன்றிம னைக்குள்வந் தென்றின்க திரிநூற் கரைநவ நீதமெ-
னுமுளனுகி

பதம்-இராகம்-செஞ்ஜுருட்டி தாளம் சாப்பு மைஹாதிஹு-மை
என்ற யிந்துஸதானி போல பஞ்சசாமரமாகவும் பாடலாம்.

(1) வேதியர் ஸந்தி வந்தன முடித் தேதமு மிகவே-மன
மீது விளைய ஓதல் மறந்து வீட்டி னுட்புகவே

(2) வந்தமைந்தனைத் திரும்பிப் பார்த்தோர் வசன முஞ்சொல்
லார்
இந்தப்பழிச் சொற் கிடம் வைத்தானென வெதிரி
னும்நில்லார்

(3) (c) வேதனை நிகர்வேதி யர்க்கிந்த (d) வேதனையாமோ (e)
யிப்போதனைவரும் பகைக்க யெவர்துர்ப்(f)போதனை நாமோ

(4) அடங்கி யிருக்கத் தெருவி னிலிழுத் தலைத்து விட்டானே
மனத்
திடங் கொண் டிப்படி நடக்கில் மனைதைத் தேறவொட்டா
னே

(5) சிவபெருமான் பூஜைக் கென்னச் சிந்தை யோர்ந் திலான்
தவம கிமைதன் பெயர்க் கிணங்கிடச் சற்றுந்தேர்ந்தி லான்

(6) உளர்ப் பகைவர யார்க்குஞ் சகிக்கவொண்ணுமோவென்பார்
இதைப்
பார்ப்ப வர்பொறுப் பாரோ யிதற்கென் பண்ணு
மோவென்பார்

(7) மறையோர் குலத்திற் பிறந்து மில்லாத வழக்கந்
தொடுத்திட்டான்-அதைக்
குறைவில்லாமலும் செயலில் லைபழி கூற விடுத்திட்டான்

(8) என்ன யிரவுண் ணுது துயிலு மின்றிப் போக்கினர்
பின்னும் விடிந்த தான்க ளுடன்றன் பிள்ளை நோக்கினர்

---

(c) வேதனை-பிரமனை (d) வேதனை-துன்பம் (e) இப்போது அனைவரும்
(f) துர்ப்போதனையென்றும் e f ஐப் பிரித்துக்கொள்க.

(9) மண்ணிக்கரையி லமத்தத் தந்தையு மடிப்பி றகேசென்றார் -தூரா
நண்ணு மாத்துச் சியினி லேறி நாடி நோக்கி நின்றார்

ஆர்யா.

(1) தூராமா மீதினி லார்ந்து-கூரார் விழியிணை யுமூடி டாதோர்ந்து
அராநிகர் வோனாற வையர்-அகமொத் தினிதுசி வபூஜை யதுசெய்ய

(2) கண்டுவி ரைந்தி (a) ழிவானான் கணியா மதியின னதலானு (b) மிழிவானான்
(c) தண்டிட வெரினிட நேரே (d) தண்டிட (e) அடிகள் (f) அடியாக வுணராரே

பதம்-இராகம்-சுருட்டி தாளம் ஆதி.

பல்லவி.

(g) அடியிணை யுணராரே சிவபெருமா (h) னடியிணையுணர்வாரே தந்தையடிக்கும் (அடியிணை)

அநுபல்லவி.

மடிவுடன் பின்னொளித்து வந்து(i)புடைக்கும் வன்றடி யாலய்யர் முதுகுபு (j) டைக்கும் (அடியிணை)

சரணங்கள்.

(1) இடியென வுரைபகர்ந் தேசினைத் தோடும்- கொடியநெஞ் சந்துடிக்கக் குலுங்கிமெய்யாடும்

---

(a) இழிவானான்—இறங்கினான் (b) இழிவானான்—கேவலத்தையடைந்தான் (c) தண்டிட, வெரினிட சமீபித்து, முதுகருகேவர (d) தண்டிட-கோலைக்கொண்டடிக்க (e) அடிகள் அடியாரானசண்டேசர் (f) அடியாக-உதையாக (g) அடியிணை-உதையிணை (h) அடியிணை-இரண்டுபாதங்கள் (i) புடைக்கும்-நெருக்கும் (j) புடைக்கும்-வீங்கும்

படிநெறு நெறெனப்பற் கடிப்புட னீடும்- தடியொடி
யும்படிக்குத் தாங்கியே போடும் (அடி)

(2) நேய மோடுருகும் வெண்ணெயைப் போலுங்-தூயம
னத்தின்பூ சுரான்பி னுலு
மேய பக் திமுதிரும் விதானை யாலுங்-காயமாதிதிரி
கரணமொத் ததினுலும் (அடி)

(3) நாமங்கள் சொலியர்ச் சனைசெய்து மேலே-சோமத
ரர்முடியிற் சொரிந்திடப் பாலை
நெமகண் டகன்கண்டு பதட்டத்தி னுலே-தாமதை
யெற்றியுடைத் ததின்வரை மேலே (அடி)

விருத்தம்.

முற்றுமபி ஷேகஞ்செய் முனமறையோன் பாற் குடத்தை
மூாண்டானைக் கொண்
டெற்றுவதைக் கண்டுதந்தை யெனத்தெரிந்து மய்யர்கையி
லெழிலார் கோலைப்
பற்றுறவு மதுமழுவாப் பவிக்கவவன் மேல்வீசப் படுதுண்டாத்தா
ளற்றுவிழப் பினும்பூசைக் கிசையநம்பர் மகிழ்ந்துதரி சனமீந்
தாரே

பதம்-இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

கண்டனர் நேரே கருணை பெற்றாரே.

அநுபல்லவி.

எண்டிசை புகழ்ந்திடு (k) மொருமானைக்கையி
லேந்து மெங்கள்சிவ பெருமானைககண்ணிற் (கண்டனர்).

சரணங்கள்.

(1) நந்திமு தற்கணங்க ளும்பணிந் தேற்ற நாமங்க ளினைச்சொ
ல்லி நற்றவர் போற்றச்

(k) ஒருமானை-ஓர் மிருகத்தை

செந்திரு மாலயன் மகிழ்ந்தெதிர் தோற்றத்-திருமால்
விடைமிசை பிரியா வுமையொடுங் (கண்டனர்)

(2) தம்புரு வோடிசைத்துத் தும்புரு பாட அன்புறு வீணை
யிஞ ரதரிசை கூடச்
செம்பவ ளவிதழ ரம்பைய ராடத்-தேவதுந் துமிகோஷித்
திட விண்ண வர்கொண்டாடக் (கண்டனர்)

(3) புவிதெரி யாமற்செழும் பூமழை பெய்யக்-கவிகளாற்
கந்திருவர் கானங்கள் செய்யக்
குவியுங்கை களோடிந்த்ரன் குனிந்தென்று முய்யக்
கும்பிட்டெ திரிலுற விண்புற்றி டுமென்னய்யர் (கண்டனர்)

(4) மதிநதி கொன்றையா வஞ்சடை மூசக்-கதியொடுங்கிக்
கண்டத்திற் கடுவொளி வீச
அதிவெண் ணீறிடுநுத லதனிற்ப்ர காச மாகமற வியுடலை
மாய்த்துதைத்த தாளேநேசர் (கண்டனர்)

வெண்பா.

கண்ட வுடனேதே கமதை மறந்து (a) மதி
கண்ட (b) பௌவ மென்னக் கடும்பவத்தை-விண்டவர்தாள்
வீழ்ந்து பணிந்தெழுந்து மெய்குளிர்ந்து நித்தியா
வாழ்ந்திடுவார் தோத்திரஞ்செய் வார்

கட்கா.

பரா பரதிகம் பரா வரஞரியச பரா திபரையன் பராக வருள்தத்
பரா வடியரிக
பரார்த் தமுறநட் பறு வுதவுதயா பரா மதியொடம் பரா வணி
ஜடா பரா வணிகொள்
சம் பாரரி யரிகுரு பராதி ஸாமுகவப் பராஜ ஸாயோக பரா
ளின்பகிர
பரா தியாயெனைப் பரா நந்தமுறப் பணிப்பீ ரெனக்கூறினர்
இருவினை களினடி யிறத் துணிப்பீ ரெனத்தேறினர்

---

(a) மதிகண்ட-சந்திரனைக்கண்ட
(b) பௌவமென்ன-ஸமுத்திரத்தைப்போல

### இதின் கருத்து

பராபர-பரம், அபரம் இரண்டையுமுடையவனே. திகம்பரா-திக்கைவஸ்திரமாகப் பொருந்தியவனே. ஆரணிய, சபாரதிபரை-ஆரண்யத்தில் வேடராசனான அர்ச்சுனனை. அன்பாக அருள் தத்பரா, அடியர்இக பரார்த்தமுற-அடியார்கள், இகத்திலும் பரத்திலுமுள்ள பிரயோசனத்தையடைய. நட்பு, அறு-சிநேகம் நீங்காது உதவுதயாபரா-உதவும்படியான. கிருபாமூர்த்தியே மதியொடு, அம்பு, அரா, அணி, ஜடாபரா-சந்திரனோடு, கங்கையையும் சர்ப்பத்தையும் அணியும்படியான ஜடாபாரத்தை வகித்தவனே. அணிகொள் சம்பராரி. அரி. குருபரா-அழகுபொருந்திய சம்பராரியான மன்மதனுக்குச் சத்ருவாக விளங்கும் குருபரனே. ஆதிஸுமுக, அப்பா-ஆதியா விளங்கும் விநாயகக்கடவுளிற்குப் பிதாவே, ராஜஸூயாக பராளின்-ராஜஸூயயாகத்தை நடத்தும் சிரேஷ்டர்களுக்கு, இனிமையா விளங்குபவனே. நிரபராதியா வெனை-அபராதமில்லாதவனாக என்னைப், பரானந்தமுற-சிலாக்கியமான ஆநந்தத்தைப்பொருந்தும்படி, பணிப்பீரெனக்கூறினார்-பணிவிக்கச்செய்வீரென்று சொன்னார். இருவினைகளினடியிற- இரண்டுவினைகளின்மூலங்கள் அற்றும்போகும்படி துணிப்பீரெனத்தேறினார்-துண்டித்துவிழச் செய்வீரென்று தேர்ச்சியுடனுமுரைத்தார்.

### ஆர்யா.

பொங்கி யெழுந்தா னந்தப்-புனல்வா ரருவிநி காரக வரவாகந்
தங்கிந னைந்திட நேரே-தகையார் சிறுவரு டனுதர் பகர்வாரே

### பதம்-இராகம்-காபி-தாளம்-ஆதி.

### பல்லவி.

(a) தந்தோந் தந்தோ மென் றுடிய பாதர் சண்டேசர் பதம்
(b) தந்தோம்
தந்தோமென் றூர்நாதர் (தந்தோம்)

---

(a) தம்தோம் தம்தோம்-தம்தோம் தம்தோ மென்ற ஜதியோடே
(b) தந்தோம் தந்தோம்-கொடுத்தோம் கொடுத்தோமென்றூர்

அநுபல்லவி.

செந்தா மரைக்கையாற் ரெட்டுத்த டவவன்று
தேஜோ மயமாகுந் தேகியா கியமன்றுள் (தந்தோம்)

சரணங்கள்.

(1) நம்மைப்பூ சிக்கவிக்கி னஞ்செய்யுந் தந்தைகாலை-நாடிம
முவினுல்பா ராமல்வீட் டிமேன்மேலே
நன்மைத ரும்பக்திவி டாதுபு ரிந்ததாலே நாமேதந் தையா
ஞேமென் றன் பினுலே (தந்தோம்)

(2) தழுவியுச் சிமோந்து நறுங்கொன்றை மாலை-தன்னை ம
கிழ்ந்தெடுத்துச் சூட்டினர் பாலே
குழுவின்ரெண் டர்கள்பதி யாகிநம் மாலே- குறித்துச்சூ
டுவதைத் தரித்திடென் ஞெருக்காலே (தந்தோம்)

(3) உடுப்பது முண்கலனு முனக்கெனப் பிரிய- மோடளித்
தனம்விண்ணோர் மலர்மழை சொரிய
அடுத்துவி திதிக்க முனிவர்க ளரிய-தானஸா மஞ்சொல்ல
வகிலமெங் குந்தெரிய (தந்தோம்)

விருத்தம்

விடைவாக ரருள்புரியக் கணங்கள்துதித் திடவிக்த மேனியோடும்
அடைவாகச் சிவபெருமான் மகிழ்ந்திடும்பா லகாரு ரங்கை
கூப்பித்
தடையறவே யணைந்துடனே செலப்பூசைக் கிடையூருந் தந்தை
யய்யர்
படையாலப் பிழைநீங்கிப் பந்தரொடுஞ் சிவலோகப் பதிசார்ந்தா
ரே

பலசுருதி விருத்தம்.

சண்டேசர் பதம்பெற்ற சரிதந் தன்னைத் தானவில்வோர்
விருப்புற்றுக் கேட்போர் நாளும்
வண்டேச ராகிநிறை யாயுள்செல்வ மகப்பேறே டன்பினிய
மனைவாழ் நன்மை

திண்டேசா திபத்தி யஞ்சத் கீர்த்தியோங்குஞ் ஜீவகா ருண்ய
மெலாம் பொருந்தி யின்பங்
கொண்டேசம் புபதமும்பெற் றெந்நாளுங் குறைவில்லா
விறைவர்பத முறைவார் தாமே

சண்டேசநாயனார் சரித்திரம் முற்றிற்று.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடலாவணி | 1 | விருத்தம் | 7 | ஆடஉருப்படிகள் | 30 |
| ஆர்யா | 3 | சந்தவிருத்தம் | 1 | ஆட சரித்திரங்கள் | |
| பதம் | 12 | வெண்பா | 2 | 21-க்கு | |
| லவாய் | 2 | கட்கா | 2 | உருப்படிகள் 480. | |

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 22 * திருநாவுக்கரசுசுவாமிசரித்திரம்.

காப்பு

வெண்பா.

சீர்பெருகுஞ் சைவஞ் செழிக்கப் புறச்சமயக்
காரிருளை லாமொழிக்கக் காய்கதிர்போ- லேர்மருவ
நன்குதித்த வெங்கடிரு நாவுக் கரசரிசைச்
செங்கனிக்கு மாவைநினைத் தேன்

லாவணி-இராகம்-காபிதாளம்-ஆதிஸாகியாகவும்-பாடலாம்.

கண்ணிகள்

(1) மங்கள சுபகர மெங்கு மூழங்கிய வான்றிரு முனைப்பாடி
துங்கநன் னாட்டின்வ ளந்தனின் மேன்மைய தோவிண்
டெனநாடி

(2) எட்டிப் பார்ப்பது போலுயர் மாடமா ளிகைதிருக்
கோபுரங்கள்

கட்டிய சினகர நட்டிய கொடிகண்ம கரவா தோரணங்கள்
(3) புரிசைகள் வீதியின் வரிசைக ணவநிதி பொலிவுறு
மாவணங்கள்
விரியுந றுமலர்க ணிறைநிறை யிலகவே மிலைந்திடு
காவணங்கள்

(4) சிவபெரு மான்மகிழ் திருவிழா வும்வே தியர்சிவபூஜைகளும்
தவநெறி தவாா தவர்சிவத் யானஸ மாதியி லாசைகளும்

(5) நீங்கி டாதுவளர் சைவா கமநெறி நிலைதவாாதவரும்
ஓங்கிய திருவா மூரெனும் நகரினி லுண்மை யாய வெவரும்

(6) மதித்திடக் கங்கா குலத்தினிற் குறுக்கையர் வாழுங்
குடிவிளங்க
உதித்திடும் புகழனார் கதித்திடுந் தவத்தினுக் குயர்பலன்
போவிலங்க

(7) a பத்தினி மாதினியாரிவர்நேரெனும் b பத்தினிமாதினியார்
நத்தின்ம ணியெனவு தித்திடு பெண்மணி நளினத்தி
லதவதியார்
(8) பிறந்துசின் னட்சென்ற பின்புதன்குலமெனும் பெரும்பாற்
கடல்மேலே
சிறந்து தித்தமதி யெனமரு ணீக்கியார் திகழ்ந்துதித்
தனராலே

ஆரியா

மாசி லாதமணி போலும் வாசிவ பெருமானருள் மகிமையினலும்
தேசு லாவுநிதி போலுந் திருவள ரடியவர் செல்நல கதிபோலும்

பதம்-இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி

அவதரித் தார் மெய்ப் புகழ் விரித்தார் வந் (தவரித்தார்)

அநுபல்லவி

தவவடி யவர் நேசர் ஸர்வேசர் தாசர் வாகீசர் வந் (தவதரித்)

(a) பத்தினி மாது இனி யாரிவர் நேரே (b) பத்தினிமாதினியார் பதிவிரதாப்பெண்

சரணங்கள்

(1) மாயா மயப் ரபஞ்ச மருணீக்கி யாரென்ன-நேய நாமம்
தன்ன
அஞ்ஞை யிருணீக்குங் கதிரென்ன வந் (தவதரித்தார்)

(2) ஈசர் மனங்க ளிக்க யின்பக் கடல்கு ளிக்கத்
தாச ரெல்லாமெக்க ளிக்க மூடச் சமணர் தத்தளிக்க வந்
(தவரித்)

(3) அறநெ றியுந்த ழைக்க வமணர் பூதி குழைக்கத்
திருமாந் தொண்டுசெய் துழைக்க ஸர்வ ஜீவரெல் லாம்
பிழைக்க வந் (தவ)

(4) எங்குந்தன் மய மானாரி ருகையும் மழுcமானார்
தங்கரு ணைக்கு மானார் தமக்குத் தானே ஸமமானார் (அவ)

இராகம்-மாஞ்சி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்

(1) திருப்புக ழனைருமா தினியாரு மகிழ
விருப்புறுந் தொண்டர்கள் மேன்மேலும் புகழ

(2) அருளைக்கி யருணத் தாலேயன் பாலே
மருணீக்கி யாருககு மகிழ்ந்தொருக் காலே

(3) சிறிபச டங்குகளைச் செய்துமுன் பாலே
குறியநெ டியகுஞ்சி யிட்டார்பின் பாலே

(4) கலைமதி போல்வளர் காரணங் கண்டு
விலைமதி யாப்பிள்ளை மேலன்பு கொண்டு

(5) பருவமைந் திற்கல்வி பயிற்றவுற் றாரே
யருமையா கவைத்தா ரனைத்துங்கற் றாரே

(6) மைப்புரு வத்திலத வதியாருக் கின்ன
செப்பும்ப ருவமீரா றதுவந்து துன்ன

c மானார்-மானையுடையவர்

(7) இப்படி யிருக்கச்சி றந்தவாண் டகையார்
மைப்புயல் போற்கொடை வாய்கலிப் பகையார்

(8) குலத்தினு நிலத்தினுங் குணத்தினு மிக்கோர்
நலத்தினு யர்புகழ றூருமே தக்கோர்

(9) மகளாகி யதிலத வதியாரை மதித்துத்
தகைமைம ணம்புரியத் தகோரைத் துதித்து

(10) நிச்சயித் தேகினர் நிகழ்பெரி யோரே
அட்சணத் திற்புக ழூர்தம்பி னேரே

(11) உரைக்கச் சம் மதிக்கப்பின் புவக்கச்சென் றூரே
யருட்பெற்ற கலிப்பகை யார்முன்னின் றூரே

(12) சம்மதித் ததையவர் தமக்குரைத் தனரே
செம்மையு டன்மகிழ்ந்தார் சீர்பொருந் தினரே

(13) சிறப்புட னிருக்கவத் தேயமன் னவன்மேற்
றிறத்துடன் வடமன்னன் செருக்கொள மேன்மேல்

(14) வந்தது கண்டெடுத்த வகையெல்லோ மென்னச்
சிந்தனை யுடனேபுத் தியிற்கொண்டான் மன்னன்

(15) சேனாதி பதி யான திறற்பெருந் தகையார்
மானுப ரணமென்ன வளர்கலிப் பகையார்

(16) தம்மையே வினரவர் தாஞ்சென்று சிலநாள்
அம்முனை யிற்பொருதி யவரங்கே யுறுநாள்

விருத்தம்.

இப்படிக்கிக் கலிப்பகையா ரடுபோரை நடவுறுநா ளிசைந்தவூழ்வி
னைபபடிக்கிப் பெரும்புகழ றூர்சிவலோ கக்கதியை யடைந்தார்க்
கண்டு
மைப்படியுங் கருங்குழலின் மாதினியார் கணவர்தமை
மருவவேண்டி
யப்படிக்கே யுடன்சென்றார் திலதவதி யார்கிதனித்தறைகின்றூரே

இராகம்-தனுசரி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

(1) தெய்வமே யெவ் விதமுய்வமே-நாங்கள் சிறியம தலையர்க
ளொருவருந் துணையிலையே யிலையே

(2) ஐயனே பே ரருண் மெய்யனே எங்கட் காதர வார்
சொல்வார்

(a) பாதர வாகுதய்யோ அய்யயோ

(3) அன்னையே பா ரீரென்னையே-நீரு
மன்பிலர் போலுமென் றம்பியை யும்மறந்தீ ரிறந்தீர்-இது

(4) பாபமோ யென்மேற் கோபமோ-பழி
பாதக மெனமொழி யாலெமை யழையீரோ நேரோ

(5) வஞ்சமோ கன்னேர் நெஞ்சமோ-கொடு
வன் கண்மை யோ-இது வுந்தண்மை யோ உண் மேயயா
நன்மையோ

(6) ஆறுமோ யென்மனந் தேறுமோ-எம
தனையுமெனையு மென் (b)பினையும்நினைக்க விலையேதொலையே

விருத்தம்.

மண்ணுருக விண்ணுருகக் கொடியோர்கல்லின்
மனமுமு ருகப்புரண்டு வாடிவாடிக்
கண்ணுருகக் கசிந்துருகித் தம்பியாரைக்
கட்டியணைத் தழுதாற்றுங் காலை நெஞ்சுட்
புண்ணிறெனுநின் திலதவதி யாரும் வெய்யிற்
புழுப்போலத் துடிதுடித்துப் புலம்பக்கண்டு
வண்ணமுறுந் தண்ணமுதம் போலுற்றார்கண்
மாற்றுவார் துயரமதை யாற்றுவாரே

---

(a) பாதரவு-துன்பம்

(b) பினையும்-அநுஜஸகோதரரான திருநாவுக்கரசையும்

இராகம்-ஆனந்த பைரவி. தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

(1) பெண்ணே மயக்கங்கொள்ள லாமோ கொள்ள லாமோ-யிந்த
மண்ணிற்செய் வினையையா வருந்தள்ள லாமோ

(2) இனிமே லழுதால் நாங்கள் சகியோம் நாங்கள் சகியோம்—
நினைவி ராகிலரை க்ஷணமும் நிர் வகியோம் [இதை

(3) நாங்க ளிருக்கப் பய மேது பயமேது—உமைத்
தாங்கி வளர்ப்போ மனஞ் சகிப்பீ ரிப்போது

(4) புத்தியி னிற்சிறந்தோர் நீரே சிறந்தோர் நீரே—யினி
வர்த்திட்பீர் சிவபெரு மான்ரட்சிப் பாரே.

கலித்துறை.

இவ்வாறு சுற்றத் தவர்தேற்றத் தேறி யிளம்பருவச்
செவ்வாய்பல் வாய்த்தி லதவதி யார்பின்னர்ச் செல்வரைக்கொண்
டுய்வாம் படிதந்தை தாயர்க்க ருங்கட ஞேம்பி யெல்லாஞ்
செவ்வாகச் செய்து முடித்தார் மதியிற் சிறந்தவரே.

விருத்தம்.

இன்னணமிங் கிவரிருக்கக் கலிப்பகையார் போர்முனைத்தெவ்
வினைச்செற் றுத்தம்
மன்னவருக் கரசளித்துத் தாமுவ்விண்ண ரசுமன மகிழச்சென் று
ரன்னதையா வருங்கூறத் திலதவதி யார்கேட்டங் கவதியோடுந்
தன்னமையாக் கலிப்பகைக்குத் தம்மைமணம் நேர்ந்ததினுற்
றயங்கினூரே.

இராகம்-தோடி. தாளம்-ரூபகம். பஞ்சசாமரமாகவும் பாடலாம்.

கண்ணிகள்

(1) தாயர் தந்தை யாரு நேர்ந்த தலைவ ரேநீர் கோபமோ
நேயமோ அன்யாய மோமுன் னேசெயுங்கொடும் பாபமோ

(2) எமது பேர் சொ லாதி ருந்தா லுமது பிராமணன் வளருமே
நிமட மேனு மிதைநி னைக்கி னெஞ்சம் நொந்து தளருமே

இருக்கி லென்ன விறக்கி லென்ன யிந்தப் பாவி ஜன்மமே
கருக்கு தேநெஞ் சறுக்கு தேமெய் யுருக்கு தேயென்
ஜன்மமே)

(4) உம்மை யேநி னைத்தி றந்தாற் பின்மை யேனுங் கூடுவேன்
செம்மை யென்றிவ் வுலகை நம்பிற் றீமை யேனும் வாடுவேன்

வெண்பா.

திலதவதி யார்மயங்கித் தேம்பி யழுது
பலவா றுகலிப் பகையா—ரிலகுந்
திருநோக்கும் விண்ணாட்டிற் சேர்வமெனக் கூற
மருணீக்கி யார்புலம்பு வார்.

பதம். இராகம்-காம்போதி. தாளம்-ஆதி.

பல்லவி.

இந்த வெண்ண முமக் கென்னம்மா மனதிற் சும்மா (இந்த)

அநுபல்லவி.

வந்தவிதி யைநே ராமல் மைந்தனை ணையப்பா ராமல் (இந்த)

சரணங்கள்.

(1) அன்னை தந்தை யாருஞ் சென்றாரே (நம்மையும் மறந்) தன்னை
சின்னஞ்சிறி யேனைக் கைவிட் டென்னையோ சனைசெய்தீரோ ( )

(2) தனியாயு மைவிடு வேனோ (துணையில்லாமற் றன்னாம்)
தனியா
அனியாயத் துயரின் மூழ்கி யவதிமிகப் படுவேனோ (இந்த)

(3) சற்றும்வித னியா திருந்தேன் (உமதருளேனக்கிச்) சற்றும்
மற்றைவித மெண்ணிவிந்த வஞ்சவுலகிற் பொருந்தேன் ( )

வெண்பா.

(a) தண்ணித் திலமென்னத் தம்பிகண்ணீர் விட்டழுங்க
(b) வண்ணத் திலத வதியாரும்—தண்ணித்
தழுவி யுபசரித்துத் தன்மனத்தி லெண்ணம்
வழுவிடப்பின் னின்னணம்வாழ் வார்

(a) தண்ணித்திலமென்ன—தண்ணீர், முத்தையொப்ப.
(b) வண்ணத், திலதவதியார் என்று பிரிக்க.

இராகம்-ஹமீர் கல்யாணி. தாளம்-அடதாளசாப்பு.
பஞ்சசாமரமாகவும் பாடலாம்.

### கண்ணிகள்.

(1) வாணி லாவு லாவு பொன்னும் பூணும் நூலை நீக்கியே
வாணி போல்மெய்ஞ் ஞான நூலை வாழும் நெஞ்ச தாக்கியே

(2) தம்பி யார்மே லன்பு வைத்துத் தாயை நேர தாகவே
இன்ப மாவ ளர்க்க நெஞ்சி னிற்க னிந்தன் பாகவே

(3) இருவ ருங்க னிந்து தன்ம வுருவ மாகி வளரவே
கருவ மிஞ்ச தர்ம மான கலியும் நொந்து தளரவே

(4) பசித டுக்கு மன்ன சாலை ருசிகொ டுக்கும் (a)வாஸமே
புசிய முக்ய தாக சமன மிசைபுஞ் சாலை (b)வாஸமே

(5) நீங்கி டாத நந்த னங்க ளோங்கு பாட சாலையே
தேங்கு நீர்த்த டங்கள் சூழும் பாங்கு லாவு சோலையே

(6) வன்ன மேவு மால யங்கள் வளர்செய் கோபு ரங்களே
மின்னு லாவு பொன்னு லாவி ளங்கி டுஞ்சி கரங்களே

(7) வஸ்த்ர கன்னி கோப நயன மாவி சேஷ தானமும்
நித்ய வித்வ ஜனர்கள் மெச்ச நிதிபெ றுஞ்ச மானமும்.

### விருத்தம்.

இவ்வண்ணம் நாடோறு மியற்றிமதித் திடுங்கலைக ளினையா ராய்ந்து
(c)செவ்வண்ண நெறியெதென வுய்த்துணர்ந்து கொல்லாமைத் தேர்ச்சி யோர்ந்து
(d)மைவண்ணத் தாழ்தடுப்ப (e)வணத்தந்தி வணாருளா மையிறைற் (f)றாலக்

---

(a) வாஸமே—வாஸனையே. (b) வாஸமே—இருப்பிடமே. (c) செவ்வண்ண நெறி—செவ்வையாகிய மார்க்கம். (d) மைவண்ண—கரும் வண்ணமாகிய அதாவது பாபம் நிறைந்த. (e) வணத்து அந்தி வண்ணர்—அழகு பொருந்திய, மாலைக்கால வர்ணத்தையுடையவர் அதாவது ஈசன். (f) தால—பனைமரத்துக்கு ஸமானமான.

(g) கைவண்ணத் தானைபடு குழிவீழ்ந்த தெனச்சமணிற் கலந்தார்
மன்னே

பதம். இராகம்-கமாசு. தாளம்-ஆதி.

பல்லவி.

நித்ய நெறி யைமறந்தார் பொய்த்தசம ணிற்சிறந்தார் (நித்ய)

அநுபல்லவி.

சித்தியில் லாததைப்ர ஸித்தியெ னமதித்து
யுக்தி விட்டுயர் புத்தி கெட்டதை நத்தி யிட்டவர் பித்தி
லகப்பட்டு (நித்ய)

சரணங்கள்.

(1) (h) தூறு தலை நினை யாமல் (i) தூறுதலை நினை யாமல்
நாறுதலையுண ராதமூடர்கள் (j) தேறுதலைக் (k) கடைத்
தேறு தலையென் றெண்ணி (நித்ய)

(2) பத்திமயிற் றெம்பை யாலே அஸ்தமஸ்த கத்தின் மேலே
வைத்திடவ தில்லரு சித்துள நன்னெறி யைகைத்து மனதில்நி
னைந்த திநேசித்து (நித்ய)

(3) பாசிப் படித் துறை போல வீசுபெரும் பற்கள் சால
மாசுபொருந்தின தோசி யர்கள்சுற்ற மத்தனுறுங்கதி
யொத்து மூன்று மூன்று (நித்ய)

(4) பாடலி புத்ரமென் றொரு மாடநகர் தனிற்பெரு
மூடச்சமண்பள்ளி நாடவிதுமுத்தி வீடருளுமெனக்
கூடியே கொண்டாடி (நித்ய)

சந்த விருத்தம்.

பொய்த்தமர் சுற்றிலு மொத்திவ ருக்கருள் போதனை செயவநின்
படைநாடி
மெய்த்தவர் ஸித்தியனைத்து மதித்திட மேதகு பதமிது வெனநீடிச்

---

(g) கைவண்ணத்தானை—அழகாகிய துதிக்கையையுடைய மத்தகஜம்.
(h) தூற்றுதலை. (i) செடிபோன்ற தலை. (j) தேற்றுதலை. (k) கடைத் தேற்றுதலை.

சித்தம திற்கனி வுற்றத னுட்பொருள் தேர்வுற மிகமகிழ்
வொடுகூடிப்
புத்தமு தத்தினை மொய்த்திடு (1) மட்சிகை போலிவ ருடன்மரு
வினர்தாமே.

பதம். இராகம்-காம்போதி. தாளம்-ஆதி.

பல்லவி.

மித்தையம ணிற்சிறந்த வித்தராகினார் (மித்தை)

அநுபல்லவி.

சுத்தி யவ ராற்சமான்ய ராகியே லலாட சூன்ய (மித்தை)

சரணங்கள்.

(1) பந்துஜனங் கள்வி கித முந்தவிர வேஸஹித
தந்திரஞ்செய் தார ஹித தந்ததாவ னரஹித (மித்தை)

(2) (a) அவகட நீரைத் தாங்கும் (b) நவகட நீரைத் தாங்கும்
அவர்கள்சூழ்ந் திட வேங்கும் பவமுறப் பி றவி யோங்கும் ()

(3) அம்மதப் பெருமை முற்றும் செம்மையாவு ணர்ந்து பற்றும்
தர்மஸேனர் நாமம் பெற்றும் துர்மனத்தே ரர்ச் செயித்தும்
(மித்தை)

கட்கா.

அந்தம தந்தனின் முந்துறு சிந்தைக னிந்துபு கழ்ந்துவி யந்து
சிறந்து சி வந்தனை யுந்தனை யுந்தனி நெஞ்சம றந்துக சந்துப வந்
தரு தொந்தவி னைத்தொடர் வசமானார் முதுராம ணப்பா வசமானார்.

விருத்தம்.

அங்கிருக்கு ஞ்சமணரொடு மவரிருக்க த்திலதவதி யாருந்தன்புந்
றிங்கிருக்கத் துயரொழியா தென(c)விருக்கும் பரவுசிவத்
தென்னைதாளின்

(1) ஈக்கள்.

(a) அவகட நீரை—கெட்ட தன்மையான குணத்தை. (b) நவகட நீரை—புதிதாகிய கடத்திலுள்ள தண்ணீரை. (c) இருக்கும்—வேதமுமி

பங்கிருக்குந் தொண்டர்களன் பாயிருக்கக் கெடிலவட பாற்றீர்த் தத்திற்
சங்கிருக்கும் பணைத்திருவ திகைவீரட் டானமதிற் சார்ந்தார் தாமே.

பதம். இராகம்-கமாசு. தாளம்-அடதாள சாப்பு.

பல்லவி.

தொண்டுசெய்து கொண்டுபவம் விண்டிட நாடினார்

அநுபல்லவி.

மண்டலம்பு கழ்திலத வதியார்தி ருவதிகைப் பதியார் விண்ணு
தியார்க்குத் (தொண்டு)

சரணங்கள்.

(1) செங்கதிரு திக்குமுன்னந் துங்கநீர்ப டிந்துசிவச்
சின்னமது தாங்கியேயௌ வன்னமயிலார்
தங்குதிரு வலகிட்டுத் துங்கவான்பு னிற்றகன்ற
சாணமெழுக் கிட்டுமணிப் பூணுலவு கோலமிட்டுத் (தொண்)

(2) பூமலரா விண்டையிட்டுத் தாமமணிக் கொண்டைகட்டுப்
பொன் (d) மாலை சூட்டிமகிழ் முன் (e) மாலையில்
சோமதா ரையுமபி ராமியையுந் தினந்தோறும்
சுற்றிவந்து தரிசனம் பத்தியொடு செய்துநிதம் (தொண்டு)

(3) சிட்டர்புகழுந்திருவீரட்டானத்த லத்தில்வளர்
தேவதேவ சம்போமகா தேவ தேவனே
துட்டமத சங்காரனே கஷ்டமொழித் தெந்தனையாள்
ஸுந்தரனே யென்றுமகிழ்ந் தந்தரங்கக் கண்ணீர்பெய்து
(தொண்டு)

கலித்துறை.

வஞ்சப்பா பஞ்சத்தின் வாழ்க்கையைச் சற்றும் மனத்திலெண்
ணேன்

(d) மாலை—ஹாரம். (e) மாலை—ஸாயந்திரம்.

கிஞ்சித்து விண்ணப்பங் கேளப்ப னேசமண் கேடரொடுங்
கொஞ்சத் தனமென வெண் ணுதென் றம்பியார் கூடினருன்
கஞ்சச் சரணத்திற் காட்செய்து காக்கக் கடனுமக்கே.

பதம். இராகம்-தோடி. தாளம்-ஆதி.

பல்லவி.

ஈச னேயு மத டிமைக் கே (a) சறுவே ருாய்யனே (ஈசனே)

அனுபல்லவி.

பாசபவ மோச னப்ர காசவுமை நேசஜக (ஈசனே)

சரணங்கள்.

(1) சைவநெறி தவறாத மெய்யுறுங்கு லத்தில் வந்தோம்
தெய்வமேயன் னைதந்தையர் சேரவே கொ டுத்துநொந்
தோம் (ஈசனே)

(2) பெண்பிறந்தோ ரில்லென்போலத் துன்படைந்தோ
ருண்டோசால
யென்பிறவிக் கவமதி யெய்துமதி யோசம்மதி (ஈசனே)

(3) நம்புமென்றன் றம்பியனை வெம்புசமண் மூடலாமோ
அம்புவியுள் ளோர்களேசத் துன்பமுற்று வாடலாமே (ஈச)

(4) பஞ்சகிருத்ய மும்புரியும் பரமென நெஞ் சிற்றெரியும்
அஞ்சிமறு தெய்வம் போற்றேன் கெஞ்சியென்க
வலைசாற்றேன் (ஈசனே)

(5) தொண்டருடனேமருவித் தொண்டுசெய்யப் பணிப்பீரே
வண்டவமன சமயத்தின் மயக்கத்தைத் துணிப்பீரே (ஈச)

விருத்தம்.

இருந்துயரந் தனிலாழ்ந்து திலதவதி யார்புலம்ப வெழிலார்
கொன்றை
பொருந்துசடைக் கடவுளுஞ்சொற் பனத்தில்வந்து (b) நும்பியார்
புன்மை தீர்ப்பான்

(a) சறு—சலுகை. (b) உம் தம்பியார்.

வருந்துவயிற் றெரிசூலை நோவேவி நமடிக்கீழ் வசஞ்செய்வோ
மென்
றருந்தவத்தோர்க் கெட்டாதார் மருணீக்கி யார்க்குச்சூலையை
யிட்டாரே.

பதம். இராகம்-ரீதிகௌளை. தாளம்-ரூபகம்.

பல்லவி

சூலைநோயி னால்வெதும்பி னார் தருமசேனர்
வேலைபோற்கண் ணீர்ததும்பி னார்.

அநுபல்லவி.

ஆலமுண்டோர் விரைந்தேவச் சாலவன லுடன்மேவ
அடித்துவி ழுந்துதுடி துடித்துப்பல் லைக்கடித்து (சூலை)

சரணங்கள்.

(1) வெய்யுவுடலைத்திருக்கியே—முகங்கருக்கிச்
செய்யகுடலைமுருக்கியே—மையவிழி கள்செருகி
வெய்யில்வெண்ணெய் போலுருகி நாவுமிக வேவரண்டு
பூவினிற்ற ளிப்புரண்டு (சூலை)

(2) கைகளையுந் தூக்கியடிக்கும்—பொறுத்திடாமல்
மெய்களைபோ டவேர் வடிக்கும்
செய்யாதுசெய் திடிலிந்த வையங்கலங் குமென்பது
தெரியாமல் வருங்கார்ய மறியாமல் எரிகுன் மச் (சூலை)

(3) அமணரெல் லோருங்கூடி னார் சுரகரீரில்
நிமிடமந் த்ரத்தை நாடினார்—தமதுசெய லெலாங்காட்டித்
தண்ணீர்தெளித் தனல்மூட்டி
யமையும்பீலி யாற்றடவ அதிகமாகி யேவிடவச் (சூலை)

விருத்தம்.

(a) பெரும்பாழி யறையிலிவர் தமைவிடுத்து மெலநழுவி ப்பேசா
தேகக்

(a) பெரும்பாழியறையில்—பெரிய பாழான அறைக்குள்.

(b) கரும்பாழி யலைகடலிற் றரும்பாகி யேமெலிந்துங் கபனின்
மேவி
(c) வரும்பாழீ யெனவிந்த மதத்தினில்வீழ்ந் தோமென்று
மனதுவாடி
(d) இரும்பாழி யெனச்சுழன்றங் கெண்ணுதெல் லாமனத்து
ளெண்ணினரே.

ஸவாய்.

(1) புண்யவ சம்வந்து நண்ணவு முன்பிறப் பன்னைத மைமனத்
துன்னினரே
அண்ணிநி தழுந்தஞ் சொன்னமொ ழிதவ றுதவொ
ருவனை முன்னினரே
(2) முன்னிய வனிடம்பின்னவை யாவுமொ ழிந்துவ ரவென
யேவினரே
அன்னவன் வந்துதி ருவதி கைவீரட் டானந கரினின்
மேவினரே
(3) மேவிநந் தாவனத் தின்புரம் வாழும் விவேககு ணுதிய
யைத்தொழுதே
தேவிநுந் தம்பியா ரேவவந் தேனெனத் தீங்குள
தோவென்று ரப்பொழுதே

விருத்தம்.

என்னச்சொன் முனமுமது தம்பியார் பெருஞ்சூலை யெய்து
நோவாற்
கன்னத்தே கழுமெலிந்து படுந்துயரை யுமதிடத்திற் கழறியற்போ
முன்னற்கால் விரைவிலெனை வாவென்று ரனவாடி மொழிந்தான்
யார்க்கு
மன்னைக்கொப் பாந்திலக வதியார்ஸங் கதியாலீ தறைதுவாரே.

கலிப்பா.

பொல்லாச் சமண்பள்ளி போந்திடுமோ மென்றுகற்பின்
வல்லா ருரைக்கவந்த மாற்றமவர் முன்னுரைக்க

---

(b) கரும்பு ஆழி யலைகடலில்—கருப்பான, ஆழமாயுள்ள அலைசேர்ந்த சமுத்திரத்தில் அல்லது கரும்பின் எந்திரத்திலும், அலைசேர்ந்த கடலிலும். (c) வரும் பாழ் ஈயென—வருகின்ற பாழான, ஈ போலே. (d) இரும்பு, ஆழியென—இருப்புச் சக்கிரம்போல.

நில்லா நெடுந்துயரை நீக்குவதெவ் வாறெனவே
கல்லார் மனமுங் கசிந்துருக வாடினரே.

லாவணி. இராகம்-ஹமேர் கல்யாணி. தாளம்-ஆதி.

ஏனோ சமண்மத மயலினி லானோ மிவரிட முயிர்விடில் வானோர்
பதமரி தெனவேனோம்
இதுகதியோ யெவர்சதியோ பாகதியோ
யெனமன தினில்மிகவாடி யிருகண்ணீர் நதிபோலோடி மருகியே
விதனமூடித் தெளிவுற மனநாடி
ஏனவோம் என செய்வோம் எதிலுய்வோம்
எனவொரு வழியதுதேர்ந்து பழுதிலை மையில்மதி சார்ந்து தழுவி
மென வோர்ந்து இதைவிட மதிகூர்ந்திங் [டல் நல
கொழிவானுர் பழிபோனுர் வழியானு ரிதுசெய்தனர் மதியே.

விருத்தம்.

இடுக்கணொழித் திடமுயர்ச்சி செயுமுன்ன மயர்வொதுங்க
வினங்காணும
லுடுக்கையுறும் பாயுமுரிக் காகநீ ரையும்பீலி யுடனேநீத்துச்
சிடுக்கைவிட வெண்டுகிலும் போர்த்திரவிற் காணமற் சென்று
மத்தம்
கடுக்கையணி வேணியரன் திருவருள்பு ரிதிருவதி கையைச்
சார்ந்தாரே.

விருத்தம்.

சார்ந்த திலத வதியார்தன் றளின் மிசைவீழ்ந் தழுதாற்றி
சோர்ந்த துயரந் தனைப்புகல நிறையுங் கருணை யுடனோக்கி
யார்ந்த சைவ நெறிதவறி யதனுலிந்தத் துயருழன்றீர்
தீர்ந்த தெழுமின் சிவபெருமா னருளா லெனப்பார்த்
திவைசெப்பும்.

பதம். இராகம்-ரீதிகௌளை. தாளம்-சாப்பு.

பல்லவி.

கோலங் கொண்டீர் நீரேனிந்தக் (கோலங்)

அநுபல்லவி.

ஆலமுண் டோராரு ளாமை யாலோ யிந்தக் (கோலம்)

சரணங்கள்.

(1) கண்டோர்கள் கரிக்கும் வேஷங் கொண்டதிலென் னஸந்தோ
ஷம்கண்டீ ரெமையும் விண்டீ ருமையுங் கண்டகண்க
ளுங்கூசப் பெண்க ளும்மேசச் சுப்ர
காசச்சி வபெருமா னேசத்தை யும்மறந்திக் (கோலம்)

(2) பெரியோர்செ யுஞ்சாபமோ வுரியயென் றன்பாபமோ
அரியமுகிலின் கரியதுகிலும் விரிமயிற்றொம் பையுநாடி
வெண்டும் பையுஞ்சூடிக் கன்பு
புரியுந் தொண்டருடன் மருவிவா ழாமலிக் (கோலம்)

(3) தாய்போலவ ளர்த்தெ டுத்தேன் பேய்கைபுக வேவி டுத்
தேன்
கண்ணீர்வடிக்கத் துடிதுடிக்கக் கண்டோரிடத் துப்பேச
மன திற்கூசப் பெரு மோசச்ச மணர்களை நேசித்திவ்
வாபாசக் (கோலம்)

விருத்தம்.

அகத்திருளும் புறத்திருளு மகன்றேடத் திருநீறிட் டன்னை போல
மகத்துவஞ்சேர் திலதவதி யார்தொண்டு செயுங்கருவி மன்னிக்
கைக்கொண்
டிகத்திலுறும் பழிநீங்கப் பின்னரைப்பின் னிட்டுக்கொண்
டியல்பதாக
(a) நகத்தநுவார் திருப்பள்ளி யெழுகைமுன மெழுகையரா
நாடினரே.

ஆரியா

நாடிக் கோயில்பு குந்தார் நம்பரி ருக்கையை யன்புடன் வலம்
வந்தார்
ஆடித் தரைமிசை வீழ்ந்தார் (கொண்) டாடிப் பரசிவ னாடி
நிழல்வாழ்ந்தார்.

---

(a) மேருவை வில்லாகவுடையவர்.

ஸவாய்.

(1) தூயவு ணர்வொடு செந்தமிழ் மாலை சொலும்படி

மேயமதியாற் கூற்றுயினை வாறு விலக்கக வீரனை

(2) அன்பதி கத்தொடு செய்பதி கத்தமி ழாலுநன் ப

துன்பதி கத்தில்ந டுங்கிபொ டுங்கிடத் தொல்வினை
யாவுங்கண் டே

வெண்பா.

மேனி புளகரும்ப வேர்வை பொடித்தரும்ப
நீனிறக்கண் ணனந்த நீர்ததும்பத்—தேனிகர்செ
நாக்குழறப் பேரின்ப நாடியுற வுண்மகிழ்ந்து
வாக்கினாற் ருேத்திரஞ்செய் வார்.

பதம். இராகம்-செஞ்ஜுருட்டி. தாளம்-ஆ

கேலதகங்காமார்யா யென்ற இந்துஸ்தானி மெ

பல்லவி.

சங்கரசங்கர (a) கங்காளனே சிவ

அநுபல்லவி.

ஐங்கரனையுமிரண் டாறுகர னையும்பெற்ற—நங்கை
யொரு பங்கோனே யென்கோனே கிருபைவானே
பெரு (b) மானூர் பெரு (c) மானே—சிவ

சரணங்கள்.

(1) பங்கச்ச மணமதப் பங்கக்க டல்கடத்தும்
வங்கத்து ணைமலர்த்தாள் தந்தீரே-நிறைந்தோரே
கனிந்தீரே சிறந்தோரே சிவ

(a) கங் காளனே—சிரசைக் கையிலுடையவனே.
(b) ஆன் ஊர்—இடபத்திலேறுகின்ற.
(c) பெருமான்—பெரு மகிமையையுடையவர்.

(2) (a) இராவண முற்றிடு மிராவண னுக்குங்க்ருபை
மேவிய குணநிதியே பதியே வெகுவாம் வேத ச்ருதியே
சீருதியாலாம் ஸங்கதியே சிவ (சங்கர)

(3) மாலய னுங்காணுத வடி வைக்கண் டுகளிக்கச்
சூலைசெய் ததையினி யான் மறவேன்-மறவேனே பிறவேனே
அடியேனே யுறவானேன் சிவ (சங்கர)

விருத்தம்.

மருவிருக்கும் கைலைமலை வசித்திருக்கும் சிவபெருமான்
மதித்துக் கூறும்
திருவிருக்குஞ் செயலெனவே தேர்ந்திருக்கும் வாகீசர்
தெளிவுற் றோங்கி
யுருவிருக்கு நிகர்பதிகத் துவந்திருக்குந் தொண்டரெலா
முண்மை தேர்ந்தா
கருவருக்குஞ் சமணைவிட்டா ரப்பரென வியமுழங்கி
யார்த்தார் தாமே.

கலித்துறை.

தொண்டரெ லாம்புகழ்ந் தேற்றவும் விண்ணிற் றுலங்கிவள
ரண்டரெ லாம்பணி யும்வீரட் டானத்தி னண்ணலையே
(b) கண்டா வாபா ணுவா ணுஜகத் காரணவென்
றெண்டாரு நாமத்தை யேத்திப் பணிசெய் திருந்தனரே.

பதம். இராகம்-சுருட்டி. தாளம்-ஆதி.

பல்லவி.

பணிவிடை நேரே பணிந்துசெய் தாரே

அநுபல்லவி.

அணிவிடை யா ரருள்கூற வகமகிழ்ந் துழவாரப் (பணி)

சரணங்கள்.

(1) சிவச்சின்னந் தாங்கித் திருவரு ளோங்கிப்
பவத்திரு ளதுநீங்கிப் பரமானந் தத்திற் றேங்கிப் (பணி)

---

(a) இராவண—இரவின் நிறம், அதாவது கருநிறம். (b) கண்டு, அரவாபாணு, ஆணு, ஜகத்காரண யென்று பிரித்துக்கொள்க.

(2) (a) நந்தனந் துன்ன (b) நந்தன மென்னச்
சிந்துநீர் பாய்ச்சிப்புல் செதுக்கிம திக்கவன்னப் (பணி)

(3) அன்யமதத் தாலே யவதியுற மேலே
மன்னியதைத் தீர்த்த தாலே தன்யனுனே னென்றன்
பாலே (பணி)

(4) தும்பையுமா லுாம் பம்புகா வீரம்
அன்பொடுமந் தாரம்வைத்திவ் வாறுபயி ரேத்தி நத்திப் (ப)

விருத்தம்.

பணிவிடைசெய் துறநாளிற் பாடலிபுத் ரத்தமணர் பரிந்துகூடிப்
பிணிவிடவி லாமையினுற் றம்மதத்திற் சம்மதித்துப் பெயர்ந்த
தாலே
(c) திணிவிடவெந் துயர்பெயர்ந்தால் நமதரசும் பெயருநந்தம்
செயலுந்தீரும்
தணிவிடுவெஞ் சடையன்மதங் கொழிக்குநமை யழிக்குமெனத்
தயங்கினுரே.

கட்கா

மானமுங் லையவபி மானமொ ழியநம தானப தமிழிய வேநல முமொழிய, வீனமு றவேதர்ம ஸேனர்சை வநெறியை யேநய மெனமெல வேநழு வினதையு மானவ ழியொடுநங் கோனிட முரைசெய்கு வோநிமி ஷகதியி லேநிறை யிருளுரு வானசு மணர்கொடி யானடு மாசரண் மனைவா யிலில்வந்தார் அரசிட முரைசெய்ப வரையே வினர்நொந்தார்.

வெண்பா.

வேந்தே யமணரெலாம் வெந்துயருற் றுக்கடையிற்
சார்ந்தாரெ ன்றூர்வாயி றுன்காப்போர்—சேர்ந்தவரை
யிங்குவிடு மென்னவவ ரெல்லோரும் வந்துபணிந்
தங்கியன்ற தைப்புகல்வ ரால்.

பதம். இராகம்-மாஞ்சி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

தர்மஸே னர்செய்த மோசந்—தன்னைத் தானம்பி னுேமேதெரிந்
ததுவிசு வாஸம் (தர்ம)

(a) நந்தனம்—நந்தாவனம். (b). நந்தனம்—நமது பாக்கியம்.
(c) திணி—வலி மெய்.

அநுபல்லவி.

*நன்மை செய் யக்கொடும் கன்மம்வ ருமோவம்பு*
*நாமேதே டிக்கொண்டா லாமோ மிகவே நம்பு* (*தர்ம*)

சரணங்கள்.

(1) *நமதும தத்தினிற்சம் மதித்தார்—மெல்ல நவியா மலேயெங்*
*தலையிலே றிமிதித்தார்* [*கள்*
*நிமிஷம தனில்மந்த்ர தந்த்ரங்கற் றுக்கொடுக்கும்*
*நிபுணரா கியிந்த வமணரெ லாங்கெடுக்கும்* (*தர்ம*)

(2) *சூலைநோய் கொண்டவர் போலே—பெருஞ்*
*சாலஞ்செய் தார்நம்பி ஞெமேயன் பாலே*
*சால நீள் சடைய னருகூவித் ததுபோலே*
*தப்பிப்பி ழைத்தோமென் று செப்பலா மென்றுமேலே*(*தர்ம*)

(3) *நமதும தங்கெடுக்குங் கருவி—யென் அு*
*நாடிடா மல்வினை தேடிஞே மே மருவி*
*யமையுங்கா சுநாயகர்க் கன்புபோ லேசருவி*
*யணைபவ ருளம்போல ஆசைவைத் துச்சருவித்* (*தர்ம*)

விருத்தம்.

*அமணரெலா மொருங்குரைக்க மிகவெகுண்டங் கதட்டிவெகு*
*பதட்டமுட னுதட்டிற்பற்பாய்ந்*
*திமணைநிக ராவிழித்த வனையென்செய்வோம் எனக்கூறி*
*நின்றுண்ணுந் தமமை நோக்கி*
*நமது செய லழித்துநம தாணைதப்பி நடந்துநந்தஞ் செயலறிந்து*
*மிகழ்ந்ததாலே*
*நிமிடமதில் வேதித்து வாதித்திட்டால் நேரொன்று னிங்குகொணர்*
*வீரொன்றுனே*

பதம். இராகம்-ஹமீர்கல்யாணி. தாளம் ஆதி.

பல்லவி

*தடையில்லா மல்நடவீர் திடவீர் அடைவீர் தடதடவெனத்*
(*தடை*)

அநுபல்லவி

அடமுட னடைபிச கிடுமப கடனிட மஞ்சிடாது கெஞ்சிடா
தடாதுடன் (தடை)

சரணங்கள்

(1) நமதுமதத்தையழித்தா னொழித்தான் பழித்தான்
சமணர்க ளுறுதிதெரிந்தவன் மனதுதத் [வஞ்சனையுடன்
தளிக்க விழிவிழிக்க நமர்களிக்கத் (தடை)

(2) கண்டபேர்கள் நடுங்க வொடுங்க வடங்கும் படியாமொழி
விண்டு கொண்டு பயமின்றி நழுவினவன்
மெய்பதறக் கையுதரச் செய்புறத் (தடை)

விருத்தம்

கொல்லாத விரதரெனும் பெயரைக்கொண்டு
கொடுந்தொழிலே புரிந்தடருங் கூற்றின் மேலோ
(a) ரல்லாருங் கரியருமாகி னிறந்தார் வஞ்ச
மனைத்தினையும் புகட்டியநெஞ் சுறத்தார் மன்னன்
சொல்லாலே வதிகைபுக்கு யமைச்ச ரோடுந்
தொண்டுசெய்வோர் தமைக்கண்டெம் மரசனை
வல்லார்பல்ல வரழைத்தா ரதனால்வந்த
வாறென்பார் பின்புவரு வீரென்பாரே.

வெண்பா

(1) கருங்கடலி னஞ்சனையார் கட்டுரையைக் கேட்டுப்
பெருங்கடமா னேந்து பெருமான்—மருங்கடைந்த
வன்று தொடுத்தினிநா மார்க்குங் குடியல்லோ
மென்றுரைத்தார் வாகீச ரே.

இதுவுமது.

(2) வஞ்சர் நினைத்திடநா மார்க்குங் குடியல்லோங்
கிஞ்சித்து முங்கள் கிளைநினையோம்—நஞ்சனைய
பொய்மதத்தை விட்டோம் புகழுற்றேறு மென்றுரைத்தார்
சைவமணி யாம்வாகீ சர்.

(a) அல்லாரும்—இருட்டையொப்ப.

பதம். இராகம்-சகானா. தாளம்-ஆதி.

பல்லவி

நாமார்க் குங்குடி யல்லோம் பொய்சொல்லோம்

அநுபல்லவி

பூமான் கள்மருவுங் கோமான் களுங்காணாச்
சீமான்க ருணையுற்றேரூஞ் சிந்தையுந் தெளிந்திடுங்
கனிவுபெற்றேரூம் (நாமார்க்)

சரணங்கள்

(1) உங்கள ரசன்முன்பு நாடோங் கொண்டாடோம்
மங்குல்நி கர்த்திடுந மனுக்குமஞ் சோங் கெஞ்சோம்
கங்குல்நி கர்த்தநா கம்புகோம் (b) விழியினம்புகோம்
இனிமேல் (நாமார்க்)

(2) துன்பஞ்செய் வினைவிடுத் தோமெய்ப டுத்தோம்
நம்பித்தொண்டு தொடுத்தோம் வெம்பவங் கெடுத்தோம்
அன்புடன் பாடிப்பிறும் மானந்தாம்ருத பானந்தானுணு
(நாமா)

(3) இமன்வலி யோனெனவே யேவல்செய் கென்னக்
கமையுட னேசொன்ன கனமொழிதுன்ன
நமதுகா நிலுங்கொள்ளோ—நம்பர்தொண் டதனி லன்பு
கொண்ட வினி (நாமார்)

விருத்தம்.

ஈசரடி யாரிவ்வா றுரைக்கக் குண்ட ரினியமொழி யால்வேண்ட
விசைந்தெவ்வாறு
மாசிலரன் றுணைநம்மை யாளுமென்று மருவிகந்தார் செலக்
கொடுபோய் மன்னன் முன்பா

(b) விழியினம்புகோம்—விழியினுடைய அம்பு அதாவது ஜலத்தை விடமாட்டோம்.

பாசர்விட வெகுண்டிவனைச் செய்வதென்னப் பகருமென
நீற்றறையி லிடவென்றேத
மோசமன்ன னதற்கிசைய வறையிற்பூட்ட முன்னிறு ரானடியை
யுன்னினரே

பதம்-இராகம்-நாதநாமகிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

குளிர்ந்திட நீற்றறையி லிருந்தாரே ஐயர் (குளிர்ந்)

அநுபல்லவி.

தெளிந்த வுள்ளமின்னிச் சிவபெருமானை யுன்னிக் (குளிர்ந்)

சரணங்கள்.

(1) மாசில் வீணைபோலு மாலைம தியம்போலும்
ஈசர்க மலச்சர ணிழல்போலு மய்யர் (குளிர்ந்திட)
(2) a நந்தா வனம்போலும் (b) நந்தா வனம்போலு
மந்தமா ருதம்போலு மலர்போலு மய்யர் (குளிர்ந்திட)
(3) குண்டர்க ருந்தாட்பூட்டி கொண்டெழு தினமூட்டி
மண்டும னற்செழுந்தா மரைகாட் டியய்யர் (குளிர்ந்திட)

வெண்பா

இப்புதுமை கண்டரச னின்சமுகத் தெய்திநம
தற்புதமார் மந்த்ரபலத் தாற்பிழைத்தார்-இப்பொழுதே
நஞ்சூட்டிக் கோறல்மிக நன்றென்றார் சம்மதிக்க
(c) மஞ்சூட்டு மேனியர்செய் வார்

ஆரியா.

மதியைத் தொடர்பணி போலே வரிகைப் பிடியொடு கொடுபுக்
கினர்மேலே

(a) நந்தாவனம-கெடாதஜலம் (b) நந்தாவனம்-நந்தனவனம் (c) மஞ்சூட்டு-மேகம் போன்றகருநிறமுள்ள

சதியைப் புரிபவ ராலே தரு (d) மைப் பாலன முணவித்
தனராலே

பதம்-இராகம்-கமாசு-தாளம்-ரூபகம்.

பல்லவி.

(e) பால னத்தை யேபயின்றார் (f) பாலனத்தை யேபயின்றார் ()

அநுபல்லவி.

(g) காலனத்தை யேபழிக்கும் கண்டத்தொனியார் (h) வண்டர்க்
கினியார்
குண்டச்சனியா ரிடும்விஷப் (பாலனத்தை)

சரணங்கள்.

(1) நாதரடி யார்க்குமெந்த நஞ்சமமு தாகுமிந்தப்
பாதகர்செய் தோதகமென் பண்ணுமென்றெண்ணி நண்ணி
யேவுண்ணும் (பாலனத்)
(2) எண்ணுலகெ லாமுருக்கும் வண்ண *மையு மீசருக்கும்
தண்ணமுதாம் நேசருக்குந் தானப்படி யேபாமென
வேநட்புட னேவார்தரு (பாலனத்)
(3) புண்யவச மேயுதித்துக் கண்ணியனை யேதுதித்துத்
தண்ணமுத மாமதித்துத் தானேயருள் பெருகியபெரு
மானேயுணு வானேயெனப் (பாலனத்)

விருத்தம்.

பாலன நஞ்சுண்டார் விண் ணமுது துண்டார் போலிருக்கும்
பரிசுநோக்கிக்
காலுதரக் கைபதறங் காவலன் பால்நமது மந்த்ரக் கருத்தினாலிவ்
வேலையிலும் பிழைப்புற்றார் நமதுமத மினிப்பிழையா
வென்றுகுண்டர்

(d) மை-விஷம்கலந்த (e) பால் அன்னத்தை (f) பாலனம்-ரட்சணை
(g) காலன்-நத்து-காலன்சங்கம் (h) வண்டர்-துஷ்டர். * மை-விஷம்.

சாலவுரைத் தார்மாவா லடுமென்றான் பகையுமொழிந்
திடுமென்றானே.

சந்த விருத்தம்.

தந்தாவ ளந்தனைவி டும்பார திர்ந்திடவ சைந்தாடி வந்திடிலிவன்
சிந்தாகு லம்பெருகி னொந்தேய சைந்துயிர் சிதைந்தேவி
டுங்கொணர்மினென்
றுந்தான் மொழிந்திடந டந்தார்ச மணகலிய ருந்தாந
டம்பெருகவே
வந்தார்பெ ருங்கரிகொ ணர்ந்தார்ம தம்பொழிய வந்தேவெ
குண்டததுவே.

பதம்-இராகம்-கமாசு-ஆதி-ஆயிலோ மேதரேமந்திலவா
என்ற இந்துஸ்தானிபோல்.

பல்லவி.

அதிர்ந்து மதகரி நடந்து வரவே அடைந்த சமணர்க ளுடடந்து
பெறவே (அதிர்ந்து)

அநுபல்லவி.

எதிர்ந்த சுண்டரொனுங் குண்டரைத் தாக்கி
யிரும்பினை நிகர்கரும் பனைககரந் தூக்கி
யுதிர்ந்திடு நறுமலர்த் தருககளை நோக்கி
யொடித்துப்பற் கடித்தம ணகரைப்பா ழாக்கி (அதிர்ந்து)

சரணங்கள்.

(1) அமணர்கள் வீதிக ளெங்கெங்குஞ் சுற்றி
யடித்தபா கன்றலை யொடித்திடப் பற்றி
யிமைநொடி யளவினிற் றிரிகியே யெற்றி
யெறிந்துகண் கனற்பொற சொரிந்திட வெறிமுற்றி ( )

(2) மாடகூ டங்களடி யோடிற விடித்து—மதித்தெதிர் சமணரை
வதைத்துயிர் குடித்து

நீடும்பள் ளியின்கோ புரங்களை யிடித்து—நீர்த்தூளிப்
படுத்தி நெஞ்சந் துடிதுடித்து (அதிர்ந்து)

(3) அய்யரைக் கண்டவுடன் மிகப்பயந் திட்டு
அடியினி ணைமலரைத் தொட்டுக்கும் பிட்டுச்
செய்யப்ர தக்ஷிணஞ்செய் தேபுரப்பட்டுச்
சினந்துகண் டோர்மனம் நடுங்கிடத் திடுக்கிட்டு (அதிர்ந்து)

வெண்பா.

மான மதகரியிவ் வாறுசெயக் குண்டராபி
மானவர சுக்குரைக்க மன்னுமித—மான
மதமழிப்பி னம்மைச்சும் மாவிடமாட் டானெவ்
விதமுங் கடல்வீழ்த்து வீர்.

பதம்-இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

கட்டிக்க டலில்வீழ்ப்பி ரிவனைக் (கட்டிக்)

அநுபல்லவி

ஓட்டி னி லகப்படுஞ் சிட்டிவ னைவிடுத்தால்
மட்டித்த னங்கயிற்றாற் கெட்டியா யிறுக்கிக் (கட்டிக்)

சரணங்கள்

(1) நமதும தம்பிழைக்குமா—யினிமேல் எமதர சுந்தழைக்குமா
கமையுட னிமைபொரு திடுமுனம் பொரும்பெரும்
கல்வி ஞேடுபிணைத் தொல்லை நீர்முழுக்கிக் (கட்டிக்)

(2) உரையில் மீறமாட்டான்-வாரிதிக் கரைகண்டேற மாட்டான்
திரையிலே நெடுநித் திரைகொள்வான் சமண்சித்
தரையெல்லா மருவித் தரைமிலே வாழ்வோம் (கட்டிக்)

(3) இந்தயோ சனைக்கிடோ—நாம்செய்ய கந்தையால் வந்த
பாடோ

சந்தேக மினியில்லைத் தானிவன் பிழைப்பில்லை
நந்தம ரசுந்தொல்லை நாள்விளங் குமேகல்லைக் (கட்டிக்)

கலித்துறை.

நஞ்சனை யானிவை கூறச் சமணர்கள் நாடிமன
வஞ்சனை யாதுமி லாநா வரசை மருவிக்கைக்கொண்
(a) டுஞ்சனை யாக்கொடு போய்க்கல் லுறப்பிணித் தோங்குவங்க
மஞ்சனை யாதுவைத் துத்தள்ளக் கல்மிதப் பானுதுவே

பதம்-இராகம் பியாக்-தாளம்-ஆதி.

பல்லவி.

(b) பெருங்கன்மி தந்ததுவே புணையென (c)வருங்கன்மிதந்ததுவே

அநுபல்லவி.

அருங்கல்வி யாவையு முணரும்வா கீசருக் (d) கந்தரங் கஞ்செயு
(e) மந்த ரங்கமதில் (பெருங்கல்)

சரணங்கள்.

(1) முற்றுஞ்ச மணர்கொடிய—வினைகளெலாம் பற்றறு மெனமொழியச்
சொற்றனை வேதிய னென் னும்ப திகமதி—லுற்றுபஞ்
சாட்சர மோதிட (f) மாதிடப் (பெருங்கல்)

(2) இருவினைப் பாசங்கொண்டு—மும்மலக்கல்லில் மருவுஞ்சீ
வர்களும்விண்டு—பவக்கடலை
பிரியக்க டத்திவைக்கு முரியவைந் தெழுத்தையர் பொரு
வுங் கன்மிதப்பப் புரிவத் ரிதோவையப் (பெருங்கல்)

---

(a) சனை-நனினமாக (b) பெருங்கல்-மிதந்ததுவே (c) வரும்-கன்மி தந்து-அதுவே-வருங்கன்மிகளின் தந்தரமதுவே (d) அந்தரங்கமான விஷயம் (e) அம்-தாங்கம்-அழகிய அலைகள் (f) மாதிட-பெருமையாகத் திடமாயுள்ள.

(3) வருணன்த வத்திறைலே—பழுத்தபொருள்—மருவிய
தென்றன்பாலே—யலேக்காத்தாற்
பரியகற் சிவிகையில் வைத்துத் தாங்கித்திருப்—பாதிரிப்
புலியூருக் கேதெரி யக்கொண்டொரு (பெருங்கல்)

விருத்தம்.

தொண்டரெதிர் கண்டாஹ ராவென்றேதித் துதித்துவா கீசாடிப்
போதில்வீழ்ந்து
கொண்டுபசா ரஞ்செய்து துணைக்கை தாங்கிக் குழாங்களொடு
சிவநாம கோஷ தங்கள்
தெண்டிரைபோ லொலிப்பவளஞ் சேர்திருப்பா திருப்புலியூர்
கோயில்புக்குப் பணிந்து போற்றி
வண்டமிழாற் றேத்திரித்தா நந்தக்கண்ணீர் வடித்திட்டா
ரானடிகைப் பிடித்திட்டாரே

பதம்-இராகம்-சென்ஸ்ஜுட்டி தாளம்-ரூபகம்-ரெங்கன்யாதக
பாரனே யென்பதுபோல.

பல்லவி.

ஆண்டருள் புரிமெய்யனே பிழைபொருத் (தாண்டருள்)

அநுபல்லவி.

நீண்டச ராசரம் யாவும்பஞ் சகிருத்யஞ்செய்
நீண்டவுடை யதுய்யனே படியவனை (யாண்டருள்

சரணங்கள்.

(1) வஞ்சச்ச மணர்களை நெஞ்சிற்று யாமீற
மிஞ்சவே யடித்தீரே கைவிடாமல் (ஆண்டருள்)

(2) செய்யாது செய்யடியே னுய்யச்செய் கருணைக்குச்
செய்யுமா றறியேனே முற்றிலுமென்னை (யாண்டருள்)

(3) (a) மாதங்க மலைவில்லாய் (b) மாதங்க மலைவில்லாய்
(c) மாதங்க வுரியுடையாய்க் கருணைபொழிந் (தாள்)

கலித்துறை.

என்றுரு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றின ராந்
தோன்றாத் துணையா யிருந்தன னென்றிசைச் சொற்பதிகம்
வான்றவி யபுகழ் வாகீசர் பாடி மகிழ்ச்சியுறத்
தென்றவுங் கொன்றைவீ ரட்டேச ரைத்தரி சிக்கவென்றே

அபங்கு.

(1) எண்ணி யேமனம் நாடித்—தொண் டினங்களோ டுறவாடி
நண்ணியே வழிகூடி—லோக நாதர்தா ளிணைதேடி

(2) நற்றிரு மாணி குழியுந்—தினை நகரும் நம்பிறை தழீஇயும்
உற்றிருந் தனவென நாடி—யும்பர் கோனை மனத்துறவாடி

(3) சென்றுமே பணிந்தேற்றி—மா தேவ தேவனைப் போற்றி
நன்றுவாய் மலர்சாற்றி—யா னந்தபாஷ்பங்கள் தூற்றி

(4) அப்புறஞ் செலவேண்டிக்—கடி லப்பொன்மா நதிதாண்டி
மைப்பொழி லதிகையே நாடி—வரும் வாகீச ருக்கன்பு கூடி

(5) தொண்டர் நகரையலங் கரித்தார்—எதிர் கொண்டுவ
ணங்கியுப சரித்தார்
மண்டிப் பல்லியங்கள் முழங்கத்—திரு வதிகை புக்கு
வகன்பா விளங்க

(6) கோயிலை வலமுறச் சூழ்ந்து—சுற்றி யேவந் தானடியிற்
றாழ்ந்து
சேயுயர்ந்த நங்கோனைத்-தேவர்-தேவர் தங்கள் பெருமானைப்

---

(a) மா தங்க மலைவில்லாய்—பெருமை பொருந்திய தங்கமலையான மகாமேருவை வில்லாகவுடையவனே (b) மாது அங்க மலைவில்லாய்—பார்வதியை அங்கத்தில் அலைவில்லாது பொருந்தியவனே (c) மாதங்கம்—யானை.

(7) பணிந்து பணிந்து புகழ்ந்தேற்றி—மனங் கனிந்து
முன்னிகழ்ந்ததைச் சாற்றி
(d) கணிந்திர விகனலி பானே—பக்தர் களினக மறைவழி
தேனே

(8) மேனே விரவுகூ விளநற்—றெருங்க லானே யெனத்திருத்தா
ண்டகமே—பாடி
ஞான நதிபோற் கண்ணீர் பெருக—வெயில் நவநீ தம்போல்ம
னதுருகப்

(9) பாடிப் பணிசெய வோங்கி—மிக வாடிச் சமணர்க ளேங்கி
நாடிப் புறஞ்செலத் தேங்கித்—தனை மூடப் பழவினை நீங்கிப்

(10) பல்லவ னும்பரிதாப—முற்று நல்லவ ருருளுறக்கோபம்—நீக்கி
மல்விடை யோனேயே பணிந்தான்—தங்கள் மதமொழித்
துச்சர ணடைந்தான்

கலித்துறை.

வீடறி யாச்சமண் டமமதம் பொய்யென்று மெய்புணர்ந்து
நாடறி யப்பல் லவன்பாழி பள்ளி நகரிலுறுங்
கூடங் களையிடித் தன்ப ரதிகைக்குக் கொண்டுவந்து
நாடன்பு றுங்கு ணதரேச ராமென நாட்டினரே.

ஸவாய்.

(1) செய்ய திருப்பணிசெய் தூய்ய வுருப்பணித்துத்
தெரிசிக்க வாகீசத் திருமுனியும்
மையில் பெரும்பதிகட் கய்யமில் லாமற்சென்று
வளமை தரும்பதிகம் சொலக்கனியும்
(2) மனத்தி னேடுந்திரு வதிகைப் பதிமருங்கு
வளருந் திருவெண்ணெய் நல் லூருஞ்.சென்று
தனத்தி லுயர்திருவா மாத்தூர் கோவலூர்முதற்
றூன்சென்று பாமாலை தொடுத்துநின்று

(d) கண் இந்து பிரவிகனலியானே—சோம சூரியாக்கினி நேத்திர
முடையவனே.

(3) a விண்ணுட கம்பணியும் பெண்ணுட கமருவி
விளங்குந்தி ருத்தூங்கானை மாடஞ்சென்று
பண்ணார்மொ ழியுமைதன் பாகரைப் போற்றிப்
பணிந்திது கூறுவர் முன்னி னின்று

(4) பங்கச்ச மணர்கள்தன் சங்கத்து டன்மருவிப்
பாழகத் திற்கிலேச் சினைமதித்தே
தங்கச்சி லையாவெனத் தமிழ்மா லைசூடித்
தனித்தும னதிரங்கி மிகத்துதித்தே

(5) பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்
போற்றியெ னப்பதிகம் பாடிடவே
முன்னு கப்பணியா ரேவும்பூ தந்தோன்றி
முத்திரை யிடத்துய ரோடிடவே

விருத்தம்.

வந்துசிவ பூதகணத் தொன்று கையால் வலுத்தரு லமுமிடப மும்பதித்த
ஸுந்தரஞ்சேர் முத்திரையை யையர்தூய்ய தோள்களினிற் பதித்தொருவர் காணாதேகச்
செந்தமிழ்நா வலர்பிழைத்தே னென்றுபோற்றி சிவஸ்தலமும் பாடிவ்ருத்தா சலமுமேற்றிப்
பந்தமொழித் திடும்தில்லைப் பானை யன்பாப் பாடினார் பணிந் தெதிர்கொண்டாடினாரே

பதம்-இராகம்-பைரவி-தாளம்-சாப்பு-சிந்தயமா-யென்ற தீட்சிதா வாள் கீர்த்தனம் போல.

பல்லவி.

கண்டிருகண் குளிரக் களித்தாரே ஸுப்ர காசரை வாகிசருநேரே (கண்டிரு)

அநுபல்லவி.

பண்டயன்மா லறியா ப்பழம் பொருளைப் பக்தி புரிந்து முக்தி தருந் திருவருளைக் (கண்டிரு)

---

1) விண்ணுடகம் பணியும்-தேவலோகத்தை தங்களுக்கு யிருப்பிடமாகக் காண்ட தேவர்கள் பணியும்.

சரணங்கள்.

(1) நாவுக்கரசு வரும்வழி தனைநாடித்-திருத்தொண்டர்கள்நறும்
பூவிட்டிறைஞ்சி யுபசரித்துக் கொண்டாடி
மேவிப்புகழ்ந்து ப்ரதக்ஷிணஞ் செய்துகூடி—திருக்
கோயிற்புகுந்து மனதுருகியே வாடி—யன்பு
பாவித்த தஞ்சலிபுரியப் பாஷ்பங்களுஞ்சொரியச்
சேவித் தன்பிற்குரியத் திருநடனன் றுய்த்தெரியக்(கண்டிரு)

(2) (a) என்றுவந்தா (b) யென்றுவந்தா யென்ன—வெள்ளி
மன்றுள் நடனம் புரிபவராற் சொன்ன
நன்றுரையைக் கேட்டுமகிழ் துன்னப்—பவம்
வென்றடியேன் தன்யனானே னின்ன—முத
மென்றுசொலிக் கொண்டாடிக் கன்றியமணர் வாய்மூடிச்
சென்றிடவென் றவர்நாடி நின்றுவிருத்த ம்பாடிக்
(கண்டிரு)

(3) பத்தனாய்ப் பாடமாட்டேனென் றடுத்து
அத்தாவுன் னுடல்காண்பேனென் றடுத்துச்
சித்தங்களிக்கப் பதிகம்பாடித் தொடுத்து
மெத்தவே யுழ வாரத்தொண்டுகைப் படுத்துப்
பத்தியொடு மினமன்னம் பாலிக்கு மெனும்வன்ன
நத்துகுறுந் தொகைபாடி நடராஜர்ப தந்தேடிக் (கண்டிரு)

விருத்தம்.

எங்கள்திரு நடராஜர் பதங்கள்போற்றி யேத்தியே யுழவாரப்
பணிகள்செய்து
துங்கவேட் களங்கழிப்பா லையினைப்பாடித் துதித்துமறுத்
துந்தில்லைக் குவந்து நாடித்
தங்கியே தொண்டுசெய்து பதிகம்பாடித் தழைஞானப் பிள்ளையார்
மகிமைதன்னை

---

(a) என்று வந்தாய்—எப்பொழுது வந்தனை. (b) என்று உவந்து ஆய் என்ன—என்று சந்தோஷித்துத் தாயார்போல.

யங்குதொண்ட ருரைக்கக்கேட் டானந்திக்கு மகத்தார்சீர்
காழிவர நினைத்தார் தாமே

பதம்-இராகம்-ஸாவேரி-தாளம்-ஆதி.

பல்லவி.

சீ காழிக்கு நடந்தார் பெரும்பவமோகாழி யைக்கடந்தார்(சீகாழி)

அநுபல்லவி.

மேகா டவியெனக் கடல்பொங்க மதியிட்ட
வேணிய னருளாற் றோணிபோல் மிதந்திட்ட (சீகாழி)

சரணங்கள்.

(1) பூதலங் களைப்பெற்ற மாதா திருமுலைப்பா
லாதர வுடனுண்ட தானபெ ருஞ்செழிப்பால்
மாதயா நடரையெம் மானிவ னென்றுவப்பால்
ஓதிப்பா டுஞ்சம்பந்த ரூரென்ற கமதிப்பால் (சீகாழி)

(2) நடராஜ ரிணையடி நளினம்போற் றிவிடைகொண்
டடையாள விடைபெற்றோ ரணிவீதி யினிற்புரண்
டுடைய யெல்லையைக்கடந் துறுந்திரு நாறையூர்கண்
டிடவே போற்றிப்பாடி யினிக்கும்பே ரின்பமுண்டு (சீகாழி)

(3) செழிக்கத் திருநீறிட்ட திருமேனி யிலழகு
கொழிக்குங்கண் டிகைபூண்டு கொண்டன்பி னொளிரும்
வழித்தொண்டர் சூழக்கல் வங்கந்த ருங்குழகு
மொழிக்கிள்ளை களுமங்க மோடும றைபழகு (சீகாழி)

விருத்தம்.

ஈசர்பெருஞ் சூலைவிடுத் தாண்டவா செழுந்தருளு மியல்புகேட்டு
நேசரெலா மொருங்குசெலச் சிவநாம கோஷிதரா நிறையுங்காதல்
உளசலிட வாளுடைய பிள்ளையா ருடன்காண வுவந்துகெளரி
வாஸமுறுந் திருமுலைப்பால் வாயினரைத் தூயவரும் வணங்கினாரே

இராகம்-சென்ஸ்ஜுடெட்டி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

(1) வந்து தொழுத வாகீ சரைச்சம் பந்தர் கைகளா
லெடுத்தா-ரு
வந்தெ னப்பரே யென்றி றைஞ்சிட மனதி னிலன்பு
தொடுத்தார்

(2) திரும்பி வணங்கி யடியே னென்ன செப்பி னானபி னாலே
செழிப்புற் றேனிங்கு தொழப்பெற்றே னென்றார் சிறப்புற்
றவர் மேன் மேலே

(3) உம்மைக் காணப் பெற்றே னென்றொரு வர்க்கொ
ருவர்கொண் டாட
செம்மை யடியர் ஹரஹ ராசிவ சிவா வெ னவிண் டாட

(4) அன்புக் கடலு மின்பக் கடலும் பம்பிச் சைவந் தழைக்க
அம்மை யருளு மய்யா ருளு மாக யிருவர் தழைக்க

(5) கோயிற் புகுந்து நாதர் தாளிணை குறுகி வணங்கிப் போற்றி
—யெழில்
மேவு மென்னப்ப ரேயும் மீசனை விளங்கு கவியா லேத்தி

(6) பாடு மெனவே பாடும் போது கொண்டாடி மகிழும்
போது—சம்
பந்த ரு மெனப் பருக்கு விருந்தி சைந்தி டச்செய்தா
ரோது

(7) (a) மருந்தை மருந்தை நிகர்செ யுநல்ல விருந்தை
யயின்றார் தோணப்
பொருந்தி யிருவர் மருவி யொன்றுயிர் போல வாழ்ந்தனர்
காணப்

---

(a) மருந்தை—அமுதத்தை

(8) (b) பாவுக் காசை நாவுக் கரசர் பார்த்துச் சோழமண்
டலத்தில்
மேவித் தரிசித் தானந் திக்க வேண்டு மென்றாட் சனைத்தில்

(9) பந்தம் நீங்கிச்சம் பந்த ருங்கூடப் பயணித் தாருடன்
மருவிச்
சொந்த மாங்கோலக் காவிலரனைத் தொழுதா ரிருகண்
ணைருவி

(10) சொரியப் பாடிச்சம் பந்த ருஞ்சென்றார் பழுதி லவென்னப்
பருமே
துலங்குங் கருப்ப றியலூர்க் குச்சென்று தொழுதின்
றூர்தொண் டருமே

(11) பிரியா விடைகொள் பெருமா னைக்கண்டு பேணிப் பணிந்து
போற்றி
யுரிய திருப்புன் கூருந் திருநீ டூரை யும்புகழ்ந் தேத்தி

(12) திருக்கு றுக்கையும் நின்றி யூரையுந் திருந னிப்பளி யோடு
விரித்து ரைதலங் களைப்ப ணிந்துகா விரிக்க ரைமேலில்
நாடும்

(13) வளருஞ் செம்பொன் பள்ளி நாடு மயிலா டுதுறை
போற்றிக்
கொளவு மகிழ்ச்சீர் துறத்தி வேள்விக் குடியிற் பாடிக்
கொண்டாடி

(14) கோடிக் காவைப் போற்றி யேயா வாடு துறையிற் சென்று
புகழ்
நாடி யதிரு விடைம ருதூரின் னகரைப் போற்றியே
நின்று

(15) நாகேச் சுரம் பழையா றைப்போற்றி நாத ரைத்தரி
சனையே—செய்து

(b) பாவுக்கரசு—சம்பந்தமூர்த்தி.

வாகி சர்சத்தி முத்தங் கூடி மருவி யேவந்த னேயே
(16) செய்தே னடியேன் முடியின் மீதுந் திருவ டிகள்வைப் பீரே
வெய்து திருநல் லூர்க்கு வரிற்செய் வேமென் றருள்செய் தாரே

விருத்தம்.

எனவுநல் லூர்க்கு வாவென வுரைக்க வேகியே பணிந்திட முடிமேல்
ஈசர்தாள் சூட்ட மனமகிழ்ந் தின்ப மெய்தியே தாண்டகம் பாடி
நனவிலுந் துயிலார் கனவிலுந் தொண்டு நடத்தியே நீடிருந் தாங்கு
நாதரைப் பிரிய வருந்தியே பின்பு நடத்திட வுயர்கரு காவூர்
சொனமுறுந் திருவா லூர்திருப் பாலைத் துறை திருப் பழனமுஞ் சென்று
தொல்லைநா யகரை யெல்லையிற் பாடித் துதித்திடுந் திங்களூர் மருவி
வினவுமப் பூதி யடியவ ரகத்தின் மேவுற வவரெலாம் வணங்கி
விருப்புற விருந்தாக் கிடவருந் தவர்க்கவ் விருந்தினி னிகழ்ந்ததிவ் வாறே

லாவணி-இராகம்-ஹமேர்கல்யாணி-தாளம்-சாப்பு-பஞ்சசாமர மாகவும் பாடலாம்.

(1) விப்ரா துங்க ருங்களிந்து ஷட்ர ஸாதி வர்க்கமும்
சுப்ர மாய மைக்க வேவா ஸிக்க மேலாஞ் சொர்க்கமும்
(2) வேண்டும் நல்வி ருந்தி னுக்குக் காண்ட மோடு a பத்ரமே
யீண்டு கொடுவா வென்ன மைந்த னேக வேயு b பத்ரமே
(3) செய்யும் நாக நீட ரம்பை யெய்தி யேங்க தீண்டவே
வெய்து யிர்த்து மிலையி னோடு நொய்து கூற மீண்டவே
(4) மீண்டு கூறி வீழ்ந்த போது விரைந்தெ டுத்து மூடியே
யாண்டொ ளித்து வைக்க வைய ரமுது செய்ய நாடியே

(a) பத்திரம்-இலை, (b) உபத்திரம்-உபத்திரவம்

(5) கமல நேரு முகம லர்ந்து கடிதில் விப்ர மனையருஞ்
சமய மமுது செய்ய வேணுஞ் சாமி யென்றார் வினையரும்

(6) அய்ய ருங்க் ரகத்தில் மேவ வகமு ணர்ந்து தோணவே
செய்யு மிவர்க ளன்பை நாடி மெய்கு ளிர்ந்து பூணவே

(7) தெளியு மைந்த னெங்கே யென்ன வுளது சொலவாகீசரும்
ஒளிகொள் நம்பர் ஸநிதி முன்பு கொணர்வீ ரென்றார்
தேசுறும்

(8) கோவில் முன்பு போட வையர் மேவி யன்பு கூடவே
ஆவை நேரி ரங்கி யொன்றுகொ லாமெ னுங்கவி பாடவே

(9) விடம கன்று துயிலெ ழுந்த தெனவெ ழுந்த சுதனையே
நடையில் மெல்ல வனைகை மேவ நனிவி டுக்க வதனையே

(10) பாக்ய மென்று பெறவு மென்னப்பரும்வி ருந்தில் யோசித்
யோக்ய ரும்ப னந்த ளர்ந்து வாக்கி னாலே பூசித்தார் [தார்

(11) மனதி ரங்கி மனைபு குந்து வாகீ சத்திரு முனிவரும்
கனிவு சேர்வி ருந்த ருந்தி வினவி மகிழ்ந்தா ரிருவரும்

(12) திங்க ளூரில் நின்றெ ழுந்து திரும றையவர் பின்செலப்
பொங்கு காதல் முன் செலச் செம் பொன்னு லாவி வளர்நல

(13) திருப் பழனத் துறைபு மீசர் திருவ டிகளைப் போற்றியே
பொருப்பை நிகரப் பூதி யடிகள் பொறுமை யின்மனத்
தேற்றியே

(14) ஓங்கி டுஞ்சொன் மாலை யென்னும் தேங்கொள் பதிகம்
பாடியே

தேங்கு லாவு சோலை சூழுந் திருப்ப திகளை நாடியே

விருத்தம்.

வரும்வழியிற் றிருச்சோற்றுத் துறைமுதலாத் தலங்கள்பல
மருவிப்பாடிப்

பெரும்பழனத் துறைநண்ணி நீடுநாட் கொண்டுசெய்து பிரியத் தோடும்
விரும்பியிரு தாள்தலைமேல் வைத்தாண்ட சிவபெருமான் மேவும் நல்லூர்க்
கரும்புவகை யோடுசென்றங் கிருந்தாரூர் வரவெழுந்தா ரறிந்தார் தாமே

பதம்-இராகம்-ஆரபி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆரூர்க் கெழுந்தருளினார் என்னப்பர் புகழுந்திரு (வாரூர்க்)

அநுபல்லவி.

நேரூ ரடார்க்குமரு வாரூர் நகையில்வென்ற
பாரூ ரிரதப்பதப் பங்கயங்களை மனங்கனிந்துதொழ (ஆரூர்)

சரணங்கள்.

(1) நல்லூ ரதனைப் போற்றியே—விடைகொண்டு—தண்டலையில்
செல்லூர் பழையாறை யேற்றியே—தமிழ்பாடிவலஞ்சுழியும்
எல்லூர் திருக்குடமூக் கெல்லை யணைந்துநாலூர்
எழில்சே றைப்பதி குடிவா யிற்செலும் வழியா லற்புத
வாரூரைப்பணிந் (தாரூர்)

(2) தேன்செழும்பணை சூழ்ந்திலங்கிவளஞ்—செழிக்குந்திரு
வாஞ்சியந்தனில் வாஞ்சிதந்தருநம்—பனைப்பணிந்து
காஞ்சனந்திகழ் பெருவேளூர்முதல்—ஆந்தலங்கள்வி
டமரோ டேகியெ
லாம்பணிந்துப னுவலேபாடிவி ளார்ந்திடுஞ்சின கரமேவியா
திரு (வாரூர்க்)

(3) ஈசரைத் தொழு நேசர்களும் நாடி—யெல்லோருமகிழ்ந்
தாசையுற்றவர் கீசரையுறவாடிப்—பணிவோமென்று
மாசிலற்புத தாசருக்கெதி ரேசெலத்தனி வாசமுற்றிடு
மங்கலங்களுமு ழங்கிடப்பரவி யெங்கிலும்பெரும
லங்க்ருதஞ் செய்திரு (வாரூர்)

### விருத்தம்.

தொண்டரெல்லா மதிகண்ட (a) பௌவமென்னச் சூழ்ந்தெதிர்
கொண் டிறைஞ்சி யெதி ரிறைஞ்சிப்போற்றிக்
கண்டாக ராவெனக்கை கூப்பியாரூர்க் கனகவீ தியிற்புகருக்
குண்டரோடு
மண்டியபுன் பவங்கள்தீர்ந்துய் யப்போந்தே னுவதொன்று புத்
திடங்கொண் டார் தந்தொண்டர்
தொண்டருடன் மருவிநிதம் வாழப்பெற்றேன் சுகம்பெற்றே
னென்றுமய்ய ரகம்பெற்றாரே

### ஆர்யா.

(1) ஆரண வீதிகள் சுற்றித்—தோரண வாயில் கடந்தா
ராமுற்றிப்
பூரண மாநிறைபத்தி–புரிந்தார் கண்டுதெ ரிந்தவர் சிவசித்தி

(2) தேவா சிரியர்ப ணிந்து–செயுமா மணிமண் டபநா டியுவந்து
பூவார் கோவில் புகுந்து (க்ருபை) புரி வண் மீ கேச ரா
டியில் முடி தாழ்ந்து

### பதம்-இராகம்-சுருட்டி-தாளம் சாப்பு.

### பல்லவி.

போற்றிசெய் தாரே தம்பிறவியை மாற்றினர் நேரே பணிந்
தெழுந்து (போற்றி)

### அநுபல்லவி.

(b) ஏற்றின்பெ ருமானைப்பாச் சாற்றிவ ருமான்கண்டு (போற்றி)

### சரணங்கள்.

(1) இளகிநெஞ் சுருக—மெய்ரோமங்கள் புளகிதந் தருக
—மனதிலில்

---

(a) பௌவம்—சமுத்திரம்

(b) ஏற்றின பெருமானைப்—பாச் சாற்றி வரு மான்கண்டு—இடபத்தையுடைய பெருமானை ஈசனைப், பா—பாமலைச் சாற்றி தொண்டு துதி செய்து, வருமான்—வரும்படியான மகான் கண்டு..

அளவிலா மகிழ்ச்சிகொண் டானந்த மும்பெருகப் (போற்றி)

(2) பக்தியின் வழியா—ஆனந்தக்கண்ணீர் தத்தியே வழியச்
சக்திபொருந் துவேதந் தமிழாக்கிப் பொழியப் (போற்றி)

(3) திருமூலத் தானர்—கழற்கமல மருவுந்தேன் பானஞ்
செய்யரியெனச்
சுருவும னத்தாற்போற்றித் தாண்டக மாலைசாற்றிப்
(போற்றி)

(4) காண்டலே கருத்தா நினைத்திருந்தேன் ஆண்டவென்
கருத்தா—வெனத்துதித்து
நீண்டப திகம்பாடி யாண்டுமி கக்கொண்டாடிப் (போற்றி)

விருத்தம்.

துதித்தரனார் திருக்கோயில் வலஞ்செய்து வாயில்வந்து தோன்றி
முன்னம்
மதித்திடுந்தே வாசிரியர் மண்டபத்தி னின்றருளர் வாளைக் கைகள்
பதித்துவணங் காதகள்வன் கனியிருக்கக் காய்தனையுண்
பவன்யா னென்ன
விதிர்த்துமிகும் பதிகங்கள் பாடினார் விமலரடி சூடினாரே.

வெண்பா.

தன்னைமறந் தீசரடி தன்னைநினைந் தேயுருகி
வன்னமுறும் பாடல் வழுத்தியே—பின்னுமெங்கள்
ஆண்டார் பிரான்களிக்க வன்பிற் குரியதொண்டு
கொண்டிருந்தார் பன்னாளாங் கு.

அபங்கு-

(1) ஆரூரினில்வன் மீகேசர்-தமையந்தத் தலத்தினில்பா சீர்
சீர்பொருந் தகிதம் பணிந்தார்—புகழ்செய்யக் கருணைமுத்த
மணிந்தார்

(2) நமிநந்தி யடிகளின் றொண்டு—செயும் நலங்கண்டு பதிகத்தில்
விண்டு

நிமிஷம்வ லிவலத்திற் சென்று—புகழ் நீடுங் கீழ்வேளூர்க் கன்று

(3) தெரிசித்துக் கன்றாப்பூர் நாடி—யங்கு தேடிப் பணிந்து கொண் டாடி
மருவும் நாளினிலோர்நாள்—வள மா ரூராதிரைத் திருநாள்

(4) பகரும் வீதிவிடங் கேசர்—திருப் பவனி காணவா கீசர்
அகமகிழ்ந் தாரூர் நாடப்—பணிந் தன்ப ரெலாமெதிர் கொண்டாட

(5) வந்து வந்து ஸேவைசெய்து—மிக மகிழ்ந்தா னந்தக்கண் ணீர் பெய்து
சிந்தைக ளித்தனர் நாடி—யெங்கள் தேவர் பெருமானைப் பாடி

(6) திரும்பிப் புகலூர் நாடி—யெங்கள் தேவே சர் பதங்கள் தேடி
விரும்பிக் கனிந்துமகிழ்ந் துறப்—புகழ் மேவுந் திருப்புகலூர் சார

(7) திருஞான சம்பந்த ரேத்தித்—திருப் புகலூர்த் தேவையும் போற்றி
முருகனார் மடத்தில் வாஸ முஞ்செயப் புகழ்வா கீசர்

(8) அங்குவ ருஞ்செய்தி கண்டு—நல வகமும் மகிழ்ந்தெதிர் கொண்டு
தங்கிவ ரும்வழியை நாடிக்—கண்டு தங்களின் மிகவுற வாடி

(9) இருவருந் தாழ்ந்தெழுக் தாரே—கனிந் தென்னப் பரே வருவீரே
மருவி யெங்குவசித் தீரே—அந்த மகிமையை யுரைத்தாள் வீரே

(10) புக்குவ ரும்போதா ரூரில்—நடக்கும் புதுமைசொல் வீரென்றார் நேரில்
அக்கணம் வீதிவிடங்கேசர்—வரு மாதிரைப் பவனியுல்லாசம்

(11) எந்தனுற் சொல்லும் வழியா—திருக் கென்றப திகங்கள் பொழிய
வந்த நாளிலாசை மீறி—யப்ப ரங் கிருக்க வேகூறி

(12) ஆரூர்க் கேகிவருவே னென்று—யெங்க ளய்யர்சம்
பந்தருஞ் சென்று
நேரேசெல் லப்புக லூ ரேத்தி—யப்பர் நீடுந் தமிழ்மாலை
சாற்றி

(13) திருச்செங்காட் டங்குடிநள் ளாறும்—புகழ் செய்யசாந்
தைவள மீறும்
தருக்கள் சூழுமய வந்தி—ஜலந் தழைத்திடு மறுகல்
பொருந்தி

(14) பூந்தமிழ் மாலைகள் சாற்றிப்—புகலூர்க் குப்பின்னும் வந்
தேற்றி
வாய்ந்திருந் தாரென்னப் பருமே—யங்கு வந்துசேர்ந்தார்
சம்பந் தருமே

(15) சேர்ந்தங்க வரிருக்கும் போது—மகிழ் சிறுத்தொண்ட
ரும்வந்தா ரோது
சார்ந்தநீ லநக்கரும் வந்தார்—கண்டு தங்கள்ம னதினிலு
வந்தார்

(16) தொண்டர்ம கிமைபெறும் பெருமை—பின்னும் சொற்பதி
கங்களி னருமை
விண்டுசி லதுநாட் கழித்தார்—உலக மித்தைவாழ் வுதனைப்
பழித்தார்

விருத்தம்.

தலங்கடோறும் பணிந்தேற்ற வெண்ணியிரு வருங்கூடித்
தழைக்கும் பக்தி
இலங்குசிறுத் தொண்டருக்கு மன்பர்மன முருக்குமயி
விருக்குஞ் செய்ய
குலங்கொள்முரு கருக்குநன்னீல்நக்கருக்கும் நயந்துவிடை
கொடுத்துச்சென்று
பலன்கள்தரு மிழலைநா யகரடியைப் பகரடியார் பணிந்தார் தாமே.

பதம்-இராகம்-தருபார் தாளம்-ரூபகம்.

பல்லவி

திருவீழி மிழலைநா யகரடி மருவியே சேவித்துக் களித்தாரே

அநுபல்லவி.

மருவார் தடஞ்சூழ்திரு வம்பரைப் போற்றிச்சென்று
வருமென்னப் பரும்சம்பந் தருமின்பந் தருமென்று (திரு)

சரணங்கள்.

(1) காலனை யடர்திரு கடவூர சைத்துதித்து—ஞாலம்பு கழ்கலைய
ஞர்மடத்தை மதித்துச்
சாலவ முதுண்டும யானம்போற் றிப்பதித்துப்—பாவினி
லும்ருகிக்கும் பதிகம்பாடிக் குதித்துத் (திரு

(2) (a) வாக்கூருஞ் சொல்லாற்றிரு வாக்கூர தனிற்றேற்றி
யேற்கத்தான் றேன்றிமடத் தீசரைப் பணிந்தேற்றி
பாக்கியம் பெற்றதுபோற் பலதலங் கண்டுபோற்றித்
தேக்குமா நந்தக்கண்ணீர்த் திவலைமெய் யெங்குந்தூற்றித்
(திரு

(3) இருவர்வ ரவையறிந் தரியந கரைச்சோடித்
திடும டியவரெலா மருவியெ திர்கொண்டாடிப்
பாவிய மைழக்கவிண்ணின் றிவருங் கோயினுடிப்
பழுத்தபுண் யங்களுறத் தழைத்ததெனை வேகூடித் (திரு)

விருத்தம்.

திருவளருந் திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே
சேர்கின்றாரென்
றருமலர்த்தாண்ட கமாலை புனைந்துபோற்றி யங்குசம்பந்
தரும்வாகீ சரும்வாழ்நாளில்
பெரியபஞ்ச மொன்றுவர யாருமுண்ணும் பெற்றிபெற
யிவர்பெருமை யெவருங்கூறக்
கரியுரிவை யாரிவர்சொற் பனத்துங்கூறிக் களித்திட்டார்
தங்கக்கா சளித்திட்டாரே

பதம்-இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

(b) ஆசைக் காசைக் கொடுத்தா ரடியவர்பே (c) ராசைக்
காசைக் கெடுத்தார்

---

(a) வாக்கூறும சொல்லால்—வாக்கினில் அமுதமூறும் சொல்லினால் திருவாக்கூர தனில்—திருவாக்கூரென்னுமூரில்.

(b) ஆசைக்காசை—தங்கக்காசை.

(c) பேராசைக்காசை—பேராசையென்னுங் குற்றத்தைை அல்லது பேராசைக்கு ஆசை பேராசைக்கு மூலத்தை.

அநுபல்லவி.

பூசாசரி லுயர்சம்பந் தருக்கமுப் பருக்கும் பொற் (காசை)

சரணங்கள்

(1) அஞ்சியு லகஞ்சிறக்கச் செய்யும்பெரும்—பஞ்சமெல்லாம் பறக்க—வுயிர் சிறக்க
மிஞ்சும்வ ளஞ்சுறக்க மேன்மைத் தொண்டர்சிறக்க (ஆசைக்)

(2) தினமுந்த ரிசனஞ்செய்து—பனுவல்பாடி மனமுருகக்கண்ணீர்பெய்து துயில்
கனவின்ப டிக்கிசங் காட்டிபே களிப்பெய்து (ஆசைக்)

(3) படிபஞ்ச முமையென்செயு—முங்களைநம்பு மடியரெவ் விதத்திலுய்யும்—எனவருத்தம்
படியும்வ ளைக்குந்தினப் படிவாயிற் படியில்வைத் (தா)

விருத்தம்.

ஒருமறைமே லொருமறைவைத் தன்னகண்ணு முயர்ந்தமறை பறித்தர்ச்சித் துவக்குமாலுக்
கரியநய னங்கொடுத்துக் கண்ணனென்றே யழைக்குமணித் திருவீழி மிழலைநாதர்
உரியபெருந் திருவாயிற் படியிற்பொன்மாத் துயர்ந்தகாசுகளைவைக்க வெடுத்து நித்தம்
மருவுபெருங் களிப்பொடுகொண் டருக்கும் யார்க்கும் மருந்திட்டா ரெனச்சிறக்க விருந்திட்டாரே

பதம்-இராகம்-இந்துஸ்தானி-காபி-தாளம்-ஆதி-ஜியாகோ

மேகைலோரே என்ற இந்துஸ்தானி போல.

பல்லவி.

எட்டாவமு தம்போலமு திட்டாரே யார்க்கும (எட்டா)

அநுபல்லவி.

வட்டவுல கமயக்கை விட்டாரே யார்க்கும் (எட்டா)

சரணங்கள்.

(1) வட்டக்காசை மைந்தனுக்களிக்க மனங்களிக்க
வாங்கி விலைசெய் தோங்கும் விண்ணோருக் (கெட்டா)

(2) மாசிலாத்தொண்டி னேசங்கொண்ட—வதனாலும
வாசியிலாதொரு காசினாலுமனத் (தெட்டா)

(3) மலைவுடன்றவித்து வருவோரைக் கவித்து மனதுவைத்து
மலியவாயன்ன மலைபோற்குவித் (தெட்டா)

(4) சுடும்பசி தீர்ப்போம் தொண்டரிற் சேர்ப்போம்
துகில் போற்போம்
நடந்துவருவீரென் றடர்ந்த முரசறைவித் (தெட்டா)

(5) (a) அனம்வெள்ளிவரையே (b) யாடகமும் பொன்
வரையே யதினிரையே
யாக்கிநெய்பாலுடன் தேக்கியுண்ணச் செய் (தெட்டா)

விருத்தம்.

(c) விருப்பதிக மொடுமன்ன மளிக்குநாளில் விண்மாரி
பொழிந்துலகஞ் செழிக்க வின்பத்
(d) திருப்பதிக டொறுஞ்செல்ல வெண்ணியீசர் செழுமலர்த்தா
ளிணைப்போற்றிச் சீர்கொண்டேற்றி
(e) மருப்பதிகம் பாடிவிடை கொண்டிலங்கும் வாஞ்சியத்தைப்
பாடிமரைக்காட் டின்மேவிப்
(f) பொருப்பதிலு முயர்தவத்தார் பாட்டால்வேதப்
பூட்டார்க தவந்திறந்தார் சேட்டார்தாமே.

பதம்-இராகம்-சென்ஸுருட்டி-தாளம்-சாப்பு.

---

(a) அனம்—வெள்ளிமலைபோல.
(b) ஆடகம்—பருப்பு.
(c) விருப்பு அதிகமொடு—அதிகமான ஆசையோடு.
(d) திருப்பதிகடொறும்—அழகாயுள்ள நகரங்கள்தோறும்.
(e) மருப்பதிகம்—வாஸனையுள்ள பதிகம்.
(f) பொருப்பதிலும்—பர்வதத்திலும்.

பல்லவி.

(g) கத வினைத் திறந்தார் மனதினிற் (h) கதவினைத் துறந்தார்

அநுபல்லவி.

மத வினைத்துடர் பகல் புகழனார் மைந்தருக் கெங்கள்சம்
பந்தருஞ் சொல்லிடக் (கதவினை)

சரணங்கள்.

(1) அடி யவருடன் கூடி—யடிக் கடிப்ரதக்ஷிணஞ் சூழ்ந்து—வந்
தடைந்தி ருக்குஞ்சன் னிதிக்குநேரில் வந் தடுத்துப்
புவியிற் றாழ்ந்து
படியுளோ ரயல் வழியிலேசெலும் பரிசேதென மறைபூசனை
செயுநாளினி லதனைவிடுங் (கதவினை)

(2) வாயின் வழிசெல் லாமல் மற்றொரு வழியி னிற்செல்
லாமா—வன்
பாயவென் னப்ப ரே திறந்தி டப் பனுவ லுரைக்க லாமா—
வென
நேய சம்பந்த ருரைத்தி டப்பண்ணி
னேர்மொழி யாளுமைபங்க ரோவெனவே சொலியங்கு
(கதவினை)

(3) வண்ணக் கதவந் திறக்க வேதா மதித்த தால்மனம் வாடி-யும
தெண்ணத் திரக்க மொன்றி லீரெனு மிசைக டையினிற்
பாடி
நண்ணுஞ் சம்பந்தர் மனது மகிழ்ந்தென்
னப்பர்மகிமை தனைநாடிச் செப்புபெருமை யொடுகூடிக்
(கதவினை)

விருத்தம்.

மறைக்கதவந் திறந்திடச்சென் றிருவரும்மெய் மறந்துபுள
கரும்பிடத்தம் மிறையைப் போற்றிச்
சிறக்கமன மகிழ்ச்சியொடும் பாடியாடித் திகழானந் தக்கண்ணீர்
நிமையைமூடி

---

(g) கதவினை—கவாடத்தை.
(h) கதவினை—குற்றத்தை.

நிறைத்திடக்கொண் டாடிவலம் வந்துதாமும் நின்றுவிடை
கொண்டுதிரும் பும்போதுற்ற
சிறைக்கதவை யடைத்திடச்செய் வீரென்றப்பர் செப்பினார்
சம்பந்த ரொப்பினாரே

ஆசிரிய விருத்தம்

சம்பந்த ரும்பதிக முற்றுரைத் திடுமுனமு தற்கவியி னிற்கதவமுந்
தானடைத் திடமுழுவ துங்கூற வப்பருந் தாமுவந் திவர்கவிக்கு
நம்பர்செய லால்விரை வடைத்ததென் றெண்ணியே நாடியிரு
வருமடத்தில்
நண்ணிநித் திரைசெயப் பொடிகொள்மே னியரா நடந்துதிரு
வாமூர்க்குவா
வன்பனே னும்என்கொ லோவெனப் பாடியென் னப்பர்தொட
ரக்கைக்குமெட்
டாமலே சென்றுகண் காட்சிதரு வார்பொலோ ராலயங்
காட்டியேவி
வம்பனில்ம றைந்தவர் தம் மைந்தர்க்கு மெவ்விதம் மறைவாரெ
னக்கூறவும்
வந்தசம் பந்தர்க்கு முன்காட்சி தந்தனர் மகிழ்ந்துமா தேவர்
தாமே

கலித்துறை.

துதித்தார்சம் பந்தரொன் னப்பர்குமவ் விதந் தோன்றிடச்சம்
மதித்தார் பணிந்து குதித்தார் வாய்மூரை மனதினிலே
பதித்தா ரிருவரும் வேதவ னஞ்சென்றப் பாற்சமண்மேல்
கொதித்தார் சம்பந்த ரெழுந்தார் வெல்வேனென்று கூறியுமே

வெண்பா.

அப்பரெதிர் சென்றென்ற னையரே பொய்ச்சமண்முன்
தப்பினேன் போதுந் தலைமுறைக்கு—மெப்படிச்செல்
வீரென்று ரும்மாணை வென்றுவருவேனென்று
சாரநடந் தார்பம்பந் தர்

ஆர்யா.

செலநா கைக்கா ரோணந்—திருமிழ லையுமா வடுதண் டுறைபூணும்
பலநாள் தொண்டொடு பாடி—பழயா றைத்தரி சனைசெய்
திடநேடி

ஸ்வரம்.

(1) கோயிலை நாடினர் வாயில்காணுமற் கொதித்துள மெத்தவும் வாடினரே
மேயவொருபள்ளி தோணவு மீதேது வென்னச்ச மணர்கள் கூடினரே

(2) என்றபலோர்சொல நன்றிது வென்ன யிரங்கியென் னப்பரு மேங்கினரே
கன்றுபவப்பிணி நீக்குங் கருத்தரைக் காணுதினைத்துயிர் தாங்கினரே

லாவணி-இராகம்-இந்துஸ்தானி-காபி-தாளம்-ஆதி.

(1) நாத ரேஜகவி ரோதரே யிந்தவன் யாயம் பொருத்தீரே முழுப்
பாதக வமணர்கள் தோதக மேசெயும் பரிசையுங் குறித்தீரே

(2) ஏழையேனையுங்கூடச் சமணை விட்டுக்கரை யேற்றிய வுமக்கரிதா—யிந்தப்
பாழமணரைக்கொல்ல வேலையி லையோபெரும் பாரமோ யென்னபெரிதா

(3) சமணை யொழித்துப்பள்ளி யிடிக்கும் வரைக்குமிவ்வூர் தனைவிட்டுப் போவேனோ
கவனம் வையாவிடி லரசே மனதுறு கவலையால் நோவேனோ

(4) அடியவ ரொடுமைத் தரிசனம் புரியா தரைக்ஷண முயிர் தரியேன்
பிடிசோறனமு மருந்தேன் மனநினிற் பிறிதொன் றையுங்குறியேன்

விருத்தம்

இவ்வுழியங் காசிருக்கக் கருணையினுற் றொண்டரகத் தெய்தும் வண்ணம்
செவ்வுழியா முடிப்பவெண்ணிக் காவல்புரி யரசனுக்குத் தெரியச்செய்ய
ஒவ்வுமடை யாளமெலாஞ் சொற்பனத்தி னுரைக்க வுச்சியின்மேற்
பவ்வியமாக் கைகுவித்தங் கிறைஞ்சியபின் னமைச்சருக்குப் பகருவானே

ஆர்யா.

(1) கண்டிடு கனவினை நேரே—விண்டிடவிருவரு மயங்கி
யொருவாறே
தண்டுத ளங்கொடு போரோ—குண்டரி டஞ்செய மண்டினர்
பழையாறை

(2) வந்தென் னப்பரை நேடி—மலர்நேர் தாளிணை தனையே
முடிசூடி
சிந்தையி னொந்துமெய் வாடி—சிவசந் நிதிமூ டினசங்
கதிநாடி

பதம்-இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

அடல் புரிந் தாரே யமணரி னேரே

அநுபல்லவி.

புடவிகி டுகிடெனப் படபடத்திடக் கோபித் (அடல்)

சரணங்கள்.

(1) கத்திகள் கைக்கொண்டார் மெத்தவும் வெகுண்டார்
சுத்தியிலாப்பெருங் குண்டர்தலை களெலாந்
தத்திவி ழித்திட மொத்திட வெற்றிகொள் (அடல்)

(2) ஓடிடவி டாமல் நீடுகைதொ டாமல்
கோடிடாத சமுதாடி னுல்வளைத்துக்
குத்தவு யிர்பதைப தைத்து விழவும்வதைத் (அடல்)

(3) எங்குங்குண்ட ரோரா யிரவர்களை நேராப்
பாங்குறு மதகரி களையே விடவது
பற்றியி ழுத்து மி தித்தொழித் திடவிட் (அடல்)

விருத்தம்.

அடல்புரிந்து சமணர்களின் பூடில்லாம லாங்கொழித்துப்
பள்ளியைத்தா ளாவிடித்துத்
திடமிதந்த திருவாயி றனைத்திறந்து செப்புமென்னப்
பரைவணங்கித் திருத்தாள்போற்றி
யுடனழைத்தங்க மைச்சரொடு மன்னன்போந்தாங் கோவியஞ்
சேர் கோயில்வலம் வந்துட்புக்கு
மடலவிழுங் கொன்றையர்தாள் முடிமேற்சூடி வாழ்த்தினர்
பனுவலுரைத் தேத்தினாரே

பதம்-இராகம்-கபாசு-தாளம்-ஆதி. மிசிரகதி.

பல்லவி.

கண்டார்ப ரஞ்சோதியை யனுதியைக் (கண்டார்)

அநுபல்லவி.

பண்டார ணனுமாலு மறியாத பேரொளியைப்
பாரோர்பு கழும்பழை யாரைவ டதளியைக் (கண்டார்)

சரணங்கள்.

(1) வேந்தன்பொன் மானமமைக்கக்—கற்பூரவா லஞ்
சேர்ந்தெங்கும் பரிமளிக்கச் சார்ந்தனை வேத்யங்கொள்ளத்
தான்கண்டு பவந்தள்ளக் (கண்டார்)

(2) மோசக்குண் டர்கள்மறைக்க—வவர்கள்சர்வ
நாசம தாகிவிறைக்கச்—செயுமன்பினைப்
பேசம றைக்குமரி தாசையு டன் சிறக்கக் (கண்டார்)

(3) பூவஞ்ச விகளுஞ்செய்தே—யானந்தக்கண்ணீர்
மேவுடம் பெங்கினும்பெய்தே—நனைக்குமனை
தாவலுட னேநாடிப் பாவிற்குறுந் தொகைபாடிக் (கண்டார்)

விருத்தம்.

(a) அருவானைக் காட்டுதிரு வுருவானைப் பணிந்துமகிழ்ந்
தானந்தித்து
(b) மருவானைக் காமலர்சேர் பொன்னியிரு கரைத்தலங்கள்
மருவிப்போற்றி
(c) திருவானைக் காவெறும்பீச் சுரஞ்சிராப் பளிதிகழ்கற்
குடியும்

---

(a) ரூபமில்லாதவனை.
(b) மருவால் நைக்கா—வாசனையால் நைக்கப்படும்.
(c) திருவானைக்கா—திருவானைக்காவல்.

(d) இருவானைக் காவுறும்ப ராயலூர் கடந்துடைஞ்ஞீ
க்குற்றுரே

வெண்பா.

வாக்கரசர் பைஞ்ஞீலி மாதலங்கண் டேத்தவரும்
மார்க்கமதி லீசர் மனமகிழ்ந்து—தேக்கும்
(e) பொதியனஞ் சூழ்தடத்திற் பொன்மொய்ம்பின் மாட்டும்
(f) பொதியனமிட் டாரன்பு பூண்டு

பதம்-இராகம்-வஸந்தா-தாளம்-ஆதி.

பல்லவி

அமுதளித்தாரே வாகீசர்க்குக்கட் (டமுதளி)

அநுபல்லவி.

நிமிஷம தனிற்பைஞ்ஞீ லிபில்நிம லருந்தேடி
நேருமப்பர்க் குமகிழ் வூறும்ப டிகொண்டாடி (அமுதளித்)

சரணங்கள்

(1) வரும்வ ழியிற்பெரும் பசிதாக முமூண்டாகி—மயக்கஞ்செய்
வதைப்பாராட் டாமல்வ ருமிவேகிக்
கருமறை வேதியர்போ லெதிர்கொண்டீ சருமேகி
யங்கோர் டத்நிலி ரு வருமமர்ந் துமன்பாகி (அமு)

(2) அருந்தவ வேதியர்போ லிருந்தவ ரையரைப்பார்த்
தன்பரே பசியீனைப் பால்கொண்டீர் பொதுஞ்சேர்த்
தொருவகை யனமிருக் குண்பீ ரெனக்கொடுத்தார்
உற்றது ளத்திலதையுண்டுக ளித்திட நேர்ந் (அமுதளி)

---

(d) இருவானைக் காவுறும்—பெருமைபொருந்திய ஆகாயத்தளவு சோலைகள் பொருந்தும்.

(e) பொதி அனம்—நெருங்கிய அன்ன பட்சிகள்.

(f) பொதி அனம்—மூட்டையில் சோறு.

(௩) நேரும்வே தியரேயெங் கேசெல்கி றீரெனப்பைஞ்
ஞீலிக்கொ லைகூட நான்வரு வேனென்றப்பர்
சாருமய் யருடன் சென்றிட வவ்வூர் தனில்விப்ரர்
தாமறைந் திட்டிடக்கண் டேமயங் கினர்க்கொப்ப (அமுதளி)

சந்த விருத்தம்.

விப்பிரர்ம றைந்திடவெ னப்பரும்நி னைந்துசிவ மெனநாடி
ஒப்புறவி ளங்குமின கர்க்கிறையி லிங்கம தையுளநீடிச்
செப்புகவி கொண்டுதுதி கற்பனையொ டும்புலிசை
திருவாய்கொண்
டற்புதமு டன்சொலிவி யப்பொடுபு கழ்ந்துமகிழ் வாஞரே

விருத்தம்,

சார்ந்துதிருத் தொண்டுபுரிந் திருக்குநாளிற் சயிலமுறுந்
தலங்களெலாம் பாடியின்பஞ்
சேர்ந்துவட திக்கிலண்ணு மலையைப்போற்றித் தெளிந்தோதி
மாமலரென் றெடுத்துப்பாடி
யார்ந்ததொண்டை நாடதனிற் றிருவோத்தூரை யகமகிழ்ந்து
பணிந்துகவி பாடியன்பு
கூர்ந்தெழுந்து திருக்காஞ்சி மூதூர்தன்னைக் கூடிஞ
ரிசைப்பலுவல் பாடிஞரே

பதம்-இராகம்-ஹமீர் கல்யாணி-தாளம் ஆதி. அமிபிஞ்சி

பாஸீநிரியென்ற இந்துஸ்தானி வர்ணமெட்டுப்போல.

பல்லவி.

பணிந்தார்வா கீசரைப் பண்புறமே காம்ரேசரைப் (பணிந்தார்)

அநுபல்லவி.

அணிகொளும்பா காசரை யம்மையுமை நேசரை
மணிதிகழ்சர் வேசரை மகிழுங்காஞ்சி வாசரைப் (பணிந்தார்)

சரணங்கள்.

(1) பந்தர்கொடி யோங்கவே பக்தர்கள்கை தாங்கவே
சிந்தைமகிழ் கோயில்வலம் வந்துபவம் நீங்கவே (பணிந்தார்)

(2) கம்பைவெள்ள மீறவே கண்டுபய மூறவே
அம்பிகைத மூவவணைக் கும்பவடுப் பூணுருவைப் (பணிந்தார்)

(3) காவாடு வன்னெஞ்சர்க் கரியானை யென் றேதியே
விரைவாய்ப்ப திகம்பாடி மெய்த்திடும ஞதியைப் (பணிந்தார்)

விருத்தம்.

துதித்துத்தொண் டியற்றிச்சீர் மயானம்போற்றித்
தலங்குறுமேற் றளிமாற்பே றுசென்று தாழ்ந்து
மதித்துக்காஞ் சியிற்பின்னும் வந்துபாடி
வளர்கழுக்குன் றமுமான்மி யூரும்போறறிப்
பதிக்குளுயர் மயிலாப்பூ ரொற்றியூரும்
பாசூருந் திருவாலங் காடும்பாடி
யதிற்காரிக் கரைத்திருக்கா ளத்திநோக்கி
யப்பருங்கண் ணப்பரைக்கொண் டாடினரே.

வெண்பா

(a) கொண்டாடி யெண்குணத்தான் கோலத்தைப் பார்த்து
கொண்டாடி நீள்கயிலைக் குஞ்சென்று—தண்டா [ (b) மனம்
மறையானுங் காணு வரனுருவைப் போற்றிப்
பரிவாகச் சென்றாரப் பர்.

பதம். இராகம்-முகாரி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

வான்கயி லையை நாடினர் தலங்கள்தோறுந் தேன்கொள்ப திகம்
பாடினர் (வான்)

---

(a) கொண்டாடி—கொண்டாடிக்கொண்டென்றும்.
(b) மனம் கொண்டு ஆடியென்றும் பிரித்துக்கொள்க.

அனுபல்லவி.

கான்கொளுங் காளத்திக் கடுக்கைய ணைப்பணிந்து
தான்கொண்ட குறிப்பினுல் ஸந்ததமுமெய்மகிழ்ந்தகந் துணிந்து

சரணங்கள்.

(1) ஏனமா யெகினமா யிடந்துமே லெழுந்துமுன்
பானவ டிமுடியைப் பார்க்கவெட் டாதபின்
ஞானப தத்தை யடியில் வணங்கியும்பின்
பானதெ லுங்கதேச மதையுங்கடந்துதுன் பதையுங்
கடந்திட (வான்)

(2) நீடுங்கன் னடதேயங் காடும லையுந்தாண்டி
நிதிகொழித் திடுமலை நதிபடிந் தேகியீண்டி
நாடும்ப லதேசங்கள் கடந்தாசை மிகத்தூண்டி
நடத்தமா ளவதேசம் நடந்துபின்புறக் கடந்துசெலவேண்டி
(வான்)

(3) வளம்பொருந் தியலாட தேசமும பின்னதாக
உளங்கனிந் துமத்திம முளநாடுஞ் சென்றன்பாகக்
களங்கந்த விர்க்குங்காசி பணிந்ததி கமாமோகம்
கடந்ததொண் டைநிற்கக் கருதியுரைசெய்து பரிதிநிகராக
(வான்)

வெண்பா

மங்கைதனைப் பாகம்வைத்த வானவனை யுன்னியெழிற்
கங்கைகடந் தார்பவமோ கங்கடந்தார்—எங்கள்
(a) பெருமான் கையிலபயம் பெற்றுவர நாடி
(b) வருமான் கையிலைக்கம் மான்

பதம்-இராகம்-ஹமீர்கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

நடந்தார் வாகீசரே நாதர்க்கிருபா நேசரே

(a)பெருமான்-ஈசன், கையில் அபயம் கையின்கண் உள்ள அபயப்பிரதானமடைந்திட. (b) வருமான்-வரும்மிருகம், கையிலைக்கு-அம்மான்-கையிலையங்கிரிக்கு-அழகிய மகாஞனவாகீசர்.

அநுபல்லவி.

கடங்களு மாநதி களுங்கடந் தேகதி
காட்டியேசை வந் தைநிலை நாட்டியத யாநிதி (நடந்தார்)

சரணங்கள்.

(1) அற்பரிடம் பாடிமுந் தப்பரிசை நாடியங்
கலைவர்மனடம் போற்கொதிக்கு முலையகற்பா லைப்பதிக்கும் (நடந்தார்)

(2) வெய்யமிருகம் நாடவே யய்யரைக்கண் டோடவே
செய்யகனி காய்கிழங்கு தின்றுசைது ணைகூடவே (நடந்தார்)

(3) (c) பணிபணிபின்னவே-மணிவிளக் கென்னவே
பார்க்குமிட மெல்லாம்பெரு மார்க்கமெனத் துன்னவே (நடந்தார்)

(4) கால்கைகள் குறைந்திடக் கண்டுற நடந்திடக்
கோலிவிலா வால்நகரக் குருதிகளு றைந்திட (நடந்தார்)

விருத்தம்.

அங்கமெலாங் குறையமான தாவலொன்றே நிறையவசை வதற்
கெட்டாமல்
தங்கமுறுங் கைலைவரை காணுமசை யாலுமிருந் தோங்கிநிற்கத்
தங்குமுடம் பணுவேனு மசைவதற்கங் கிடமின்றித் தயங்கித்
தேர்ந்தும்
எங்களுடை நாயகரை மனத்திருத்தி வழிதேடி யிருந்திட்டாரே

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

(1) அன்புறுங்கைலை யின்கண்வந்திடி லனேகதலப் பதிக
மின்பமுறுங் கேழ்விக்கரிதெனவரு ளிசையா நிவாதிகப்

(2) பக்தியறிந்தோர் குளத்தை யமைத்துப் பண்புறுமுனி
வேஷம்
நத்தியமைந்திட யிருவரும்நோக்கி நாடினர் ஸந்தோஷம்

(3) அவயவமெல்லாங் குறைந்தொழியக்கா னகத்தில் வந்த
தென்னத்

(c) ஸர்ப்பங்களினழகு.

தவநிறை முனிவர் வந்தகருத்தைத் தானுரை செயவன்ன
(4) முயர்முப்புரிநூ லுஞ்சடைமுடிமர வுரியுமிலக வீசர்
நயமுற்றிடுதரி சனைதரவுணர்வொடு நவில்வார் வாகீசர்
(5) கையிலையிலுமையொடு பரசிவமிருக்குங் காட்சி காணவந்
வந்தேன்
செயலிது வரையிலிருந்தது வினிமேற் செய்வதென்னென்ன
நொந்தேன்
(6) என்னவெங்கையிலைக் கேகிடநார்கட் கெளிதோ முனிவரே
சொன்மொழிகேளுந் திரும்புமென்றுரைத்தார் வேமகலா
தாரே
(7) இனயவுரைக்க க்கையிலையைக்காணு திறக்குமிவ்வுடல்
கொண்டு
கனவிலுந்திரும் பேனெனநாவுக் கரசுரையிதுவிண்டு
(8) இவருறுதியைக்கண் டிறையவர்வான்மறைந் திறையே
யெழுமினெனத்
தவருமெழுந்தொளி பாவுதேகியாத் தானங்கெதிர் நின்றார்

விருத்தம்.

மாதுமையோ டுமதுதிருக் கோலம்வெள்ளி மலையினிற்கண்
டிடவருள்வீ ரெனவுமன்பர்க்
கேதுமைய மின்றியிந்தக் குளத்தில்மூழ்கி லெமதுதிருக்
கைலைநங்கோ லமுமையாற்றின்
ஓதுமையிற் றரிசனைதந் திடுவோமிந்த வுயர்தடத்தில் முழுகிலென
முழுகலேயெப்
போதுமையாற் றரித்திடுமை யாற்றில்மேவும் புனற்றடத்தி
லெழுந்தனாற் புதமாத்தானே

ஆர்யா.

கார்நிறை நிறைகடன் மேலே—கதிர்நிறை யமுதகு மிரு
மதிபோலே
பார்நிறை தடமதின் மேலே—பண்பூ தியழிந் திடாதெ முதலாலே

விருத்தம்.

தனித்து முழுகி யெழுந்து கண்ணீர் தாரைபோலே மெய்நனையத்
தொனித்து மறைவே தியர்மிகுத்துத் துலங்கை யாற்றின்
கோயிலுமின்

புனிற்ற நகரும் கையிலையும்போற் பொருந்தச் சிவமுஞ் சத்தியுமாக்
கனித்துத் தோன்றும் பொருளினைகக ண் கண்டார் மொழிகற் கண்டாரே

பதம்-இராகம்-மத்தியமாவதி-தாளம்-சாப்பு.

பல்லவி.

தெரிசித்து வந்தார் தடாகத்திற் பரிசித்துவந்தார் (தெரிசித்து)

அநுபல்லவி.

வரு ஷிக்கு மலர்ச்சோலை வளருமை யாற்றினில்
மருவுஞ்சினகரங் கையிலைபோலவு மானுஞ்சிவையுமங் கமரச் சாலவும் (தரிசித்து)

சரணங்கள்.

(1) திருமா லயனிந்த்ரன் றிருவடி கனைப்புல்ல
வொருநான் குமறைக ளுவந்து திகள் சொல்ல
அருணு டிபவித்த ரமரர்விஞ் சையர்செல்லப்
பெருமா லோ சனைசெய்து பேசாமல் மெல்ல மெல்லத்

முடுகு.

தருமலர்கள்கொடு மழைகள்சிலர்பொழிய—வரம்பையமே
நகைநடனயிசை யமுதமிகவழியப்—பல்வியவொலி
பெருகுகடலொலி யவியயதிர்தரப் பெரியபகிரத நதிவிண்ணிழிதர
வுருவபொடுநதி மார்கள்துதிதர வுயருங்கணங்கள்கொண் டாடக்கதிதாத் (தெரிசித்து)

(2) பெருங்கையி லையிரண்டின் பெற்றிபோ லெதிராக
வருங்க வின் விடைமுன்னின் றிடவுமே சதிராகத்
தெருங்கல்வி நிறைநந்தி தேவர்ம கிழ்ந்தன்பாக
நெருங்கிவந்த வர்களை நின்மினென் றெதிராக

முடுகு.

வுரைபகரவொரு ரஜதகிரிமேலே—யெழுந்தபச்சை
மரகதலதைப ரவியவொளிபோலே—படர்பவள
வரையைநிகரரி யணையிலிமையொடு பருவமுகிலென வருளின்மழைகொடு

மருவுமுலகுள வுயிர்கள்செழிவொடு திருவைகிடவரு
ளுருவைமகிழ்வொடு (தெரிசித்து)

(3) வணங்கிய டிக்கடிவீழ்ந் தெழுந்தஞ்ச லி புரிந்து
மணங்கொள்ம லரடியை மலர்க்கண்க ளாற்சொரிந்து
யிணங்கிம னமுருக யிடைவிடா நீர்சொரிந்து
மேகமாம்பேரின்பக்கடலில்மூழ் கிப்பரிந்து

மூநீது.

பிரிந்திடாவுமை வாமமதிலோங்கச்—சிவபெருமான்
பொருந்தியேஸர்வஜகங் களையுந்தாங்கக்—கருணைசெய்தங்
கிருந்திடுங்கொலும் நாடியுடம்பெங்கு மேபுளகமுற
வோடிநடித்தங்கு
பரவசமுமுறத் தாண்டகங்களிங்கு படிப்போர்பிழைத்திடப்
பகர்ந்துமகிழ்ந்தங்கு (தெரிசி)

வெண்பா.

கொண்ட திருக்கையிலைக் கோலத் தினைச்சிவையை
யண்டர்பெரு மானைக்கண் டாங்குபணி—தொண்டரும்பின்
பூந்துருத்தி நாடியங்கு போற்றிப் பணிவிடைசெய்
தார்ந்தார் மயல்பொருந்தா தார்

யதம்-இராகம்-சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

பூந்துருத்தி மேவினார் ஆய்ந்த சக்தி நாவினார் (பூந்துருத்தி)

அநுபல்லவி.

வாய்ந்தசெல்வம் நிறைபெரு மகிமைபொருந்துதிரு (பூந்துருத்தி)

சரணங்கள்.

(1) நெய்த்தானத்தை நாடியே நேருமழ பாடியே
மெய்த்திடவே சென்றுபாடி மெய்மகிழ்ந்து பின்புகூடிப் (பூந்து)

(2) கோபுரத்தின் வாயிலைக் கூடியணிந் தேகிலை
(a) மாபுரத்தை யட்டார்கஞ்ச மலரடிவீழ்ந் தன்புமிஞ்சப் (பூந்து)

(a) மாபுரத்தை யட்டார்—பெருமைபொருந்திய, திருபுரானைப்ப-
ைசத்தவ

(3) நிகழ்ஸன்னிதி முன்னின்று நெடியபவத் தைவென்று
புகழும்திருப் பூந்துருத்திப் பொய்யிலியைக்
கண்டேனென்று (பூந்து)

(4) திருத்தொண்டு நோக்கியே செய்துகளி தேக்கியே
பொருத்துமட மொன்ற மைத்துப் புனைதமிழ்மா
லையாக்கியே (பூந்து)

விருத்தம்.

செழித்திடும்பூந் துருத்திதனிற் பொருந்துநாளில்
திருக்கூடல் பாண்டியன்கூ னிமிர்க்குபூதி
கொழித்திடுமே னியனாக ச்செய்துபாவக்
கொடியவமண் பூடிறவே வென்றுமின்பம்
பழுத்திடுஞா னச்செல்வர் சிவிகையுற்றுப்
பண்பமர்பூந் துருத்தியிலப் பரைக்கண்டெல்லாம்
வழுத்திடவந் தவர்வரவை நோக்கியின்ப
மாக்கினா ரய்யரெதி ராக்கினாரே

இராகம்-எதுகுல காம்போதி-தாளம்-ஜம்பை

கண்ணிகள்

(1) ஞானஸம் பந்தர்தமைக்காண (b) மைய லானஸம் பந்த
மொழிந் தவர்விரைவிற் றோணக்
கானடைய தாகியெதிர் கொண்டார்—கூட்டங் களிலொருவ
ராகிச்சென் றவர்சிவிகை கண்டார்

(2) கண்டுபணிந் தேற்றிமறைந் தடுத்தார்-முத்துக் கவின்சிவிகை
கொம்புபொறுத் திடமொய்ம்பு கொடுத்தார்
எண்டிசையும் புகழப்பரெங் கென்று—ரடியே னிங்கிருக்கின்
றேனடி தாங்கினனெனவெனந வின்றார்

(3) தணித்தவுடன் கேட்டவுடன் குதித்தார்—பதறித்
தான்பணியு முனமப்பர் தாம்பணிந்து துதித்தார்
அணிகொளிரு வரும்பணிந்து நாடத்—தொண்டாரஹரா
சிவசிவா வெனவுங் கொண்டாட

(4) இருவரறி யாவொருவர்க் கன்ப—ரெனச்சொல்—லிருவருங்
கோயிலெய்தி யேபணிய நம்பர்

---

(b) மைய லான ஸம்பந்த மொழிந்து—பெண்ணிடமுற்ற, காத லென்ற சம்பந்தம் நீங்கி.

அருள்பெருகப் பாடிமடம் புக்கார்—அருக ரற்றதும்
பாண்டியன்கூ னிமிர்ந்ததையு மிக்கார்
(5) மகிமைபெறும் பரசிவத்தைப் போற்றி—யதையும்
வளர்பாண்டி மாதேவி யன்பையுங்கண் டேற்றித்
தகைமைபெறு குலச்சிறைபக் தியையும்—தொண்டர்
சாற்றமது ரைக்கேய தோற்றமுற யிலையயும்
(6) சம்பந்த ரிடந்தொண்டை நாட்டின்—வளருந் தலங்கள்மகி
மையைக்கூற வுளங்கனிந்து கேட்டும்
இன்பமுட னத்தலங்கள் போற்றச்—சென்றா ரினியசம்
பந்தர்தம திருவினையு மாற்ற
(7) பூந்துருத்தி சென்றானைப் பணிந்தா—ரப்பர் புகழ்திருப்புத்
தூர்பாடிப் புரிமகிமை யணிந்தார்
வாய்ந்தமது ரையிலீசனைப் பாட—ஆளு மன்னன்குலச்
சிறைவேண்டி மகிழ்ந்துகொண் டாட
(8) பூவணமா மேச்சுரநெல் வேலி—கானை போற்றியே தமிழ்
மாலை சாற்றினர்கு ணாளி
தான்புகழ் சோளநாட்டில் வந்தார்—புகலூர் தனில்மேவித்
தொண்டுசெய்து மனமிகவு வந்தார்

விருத்தம்.

தொண்டுசெய்தங் குறுநாளி லவருறுதி யாவருக்குந் துலக்க வெண்ணிக்
கொண்டுசெய்யு முழவாரப் படைசெதுக்கு மிடமெல்லாங் குழுமிப் பொன்னும்
மண்டுமணி களுமின்னப் பரசிவஞ்செய் திடவோடும் வன்கல்லும்போற்
கண்டுகுளத் தெறியவரம் பையரைவிட வவர்கள் செயல் காட்டினரே

பதம்-இராகம்-பிலகரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

வானரம் பையர்கூடினார் வாகீசர்முன் (வான)

அநுபல்லவி.

மானரம் பிசைகாட்டித் தானமின்றி டும்பாட்டின்
மயக்கஞ்செய் திடவெண்ணிச் செயிக்கலா மென்று நண்ணி (வான)

சரணங்கள்.

(1) சில்லும் கல்லும்போல வெல்லும்பொன் மணிசால
எல்லையில் குளமேகக் கெல்லியெறி வார்க்காக (வான)

(2) ஆடைநெகிழ்ந்ததுபோல் (a) வாடையினின்றுருக்க
(b)வாடைபரிமளிக்க நாடிவரைமயக்க (வான)

(3) வணடுகள் சுருதிகூடக் கண்டுமிசைகள் பாட
மண்டிநடனமாட வண்டர்களுங்கொண்டாட (வான)

(4) மந்தஹாஸம்புரிந்து கந்தமலர்திமிர்ந்து
விந்தையெல்லாம்புரிந்துஞ் சிந்தைதனைத்தெரிந்து (வான)

லாவணி-இராகம்-ஹமீர் கல்யாணி-தாளம்-ஆதி.

(1) திருப்புகலூரில் மருப்படாத் தொண்டுசெய்திருந் தார்களி
கொண்டு
துருப்பெனப் பொன்னையு மருக்குழலாரையுந் துறந்ததை
யுங்கண்டு

(2) யாவருமதிசயித் திடவா கீசர்மா தேவ ரடியைச்சார
மேவுநாளடுக்க வொருதினந் தனிலன்பு மெய்யெங்கும்
புளகூர

(3) மேவுமடைக்கலம் புகுமெனைப் புகலூர் மிளிருஞ்
செழுங்கமலச்
சேவடிக் கீழ்த்தங்க வைப்பீரென்றினிய திருத்தாண்டக
மமல

(4) மூர்த்தமானதிரு நாவுக்காசரு மொழியின்
னிசைமொழிந்தார்
போத்தமாயைபறந் திடவுந்தொன்றுதொட்டுப் பொருந்திய
டாவமொழிந்தார்

விருத்தம்.

எண்ணுகே னெனச்சொல்லி யெண்ணுகே னெனவெடுத்துப்
புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றே னெனக்கூற

(a) வாடை—வாடைக்காற்று. (b) வாடை—வாசனை.

வண்ணமுறுந் தாண்டகப்பா மலர்மாலை சூட்டியபின்
எண்ணுருவார் திருவடிக்கீ ழினிதமர்ந்தார் வாகீசர்

பதம்-இராகம்-மத்தியமாவதி-தாளம்-சாப்பு.

பல்லவி.

திரு வடி நிழலமர்ந்தார் வாகீச ரீசர் (திரு)

அநுபல்லவி.

மருவுமெய்ஞ் ஞானவடி வாகி யுமைதன்பாகி (திரு)

சரணங்கள்.

(1) மண்டலத் தோருமறியப்—பொன்மலர்மாரி—விண்டலத்
தோருஞ்சொரிய
மண்டும் புகழ்விரியத் தொண்டர்ம றைக்கரிய (திருவடி)

(2) தேவதுந் துமிகோஷிகக—விண்முனிவர்—யாவர்க
ளுஞ்சந்தோஷிக்க
மேவும்ப வஞ்சோஷிக்கத் தேவதே வர்போஷிக்கத் (திரு)

(3) சித்திரத் திங்கள்சேரவே—சதயநட்சத்—திரமுமி னிதாரவே
சித்தங்க ளிகூரவே ஜன்மவி டாய்தீரவே (திருவடி)

பலசுருதி விருத்தம்.

நின்னயஞ்சேர் வாகீசர் சரிதந்தன்னை நிகழ்த்தினோர் விருப்புற்றுப்
படிப்போர் கேட்போர்
நன்னயஞ்சேர் மார்க்கண்டனென நீடூழி நாளாயுள் மைந்தர்பெருஞ்
செல்வமோங்கிச்
சொன்னயஞ்சேர் கல்வி யினிற் சிறந்தோராகிச் சுத்தமுறுஞ்
சிவபக்தி பழுத்தானந்தத்
தின்னயஞ்சே ரிகவாழ்வும் பரத்திலீச ரிணையடிநீ ழலும்பொருந்தி
யிருப்பார்மாதோ

பதம்-மங்களம்-இராகம்-சௌராஷ்டிரம்-தாளம் ஆதி. நின்னுவா ரூபமுலகு யென்ற தியாகய்யரவாள் வர்ணமெட்டுப்போல.

பல்லவி.

எந்நாளு மீசரடி யிணைகளுக்கு மங்களம்

அநுபல்லவி

மின்னார்சை வநெறிக்கும் வேதியர் தஞ்சரிக்கும் (எந்நாளு)

சரணங்கள்.

(1) வாகீசர் (a) பேரிசைக்கும் மான்கள்தம் (b) பேரிசைக்கும் (எந்நா)

(2) தொண்டர்கள் பெருமைக்குஞ் சொல்வோர்க ளருமைக்கும் (எந்நா)

(3) மழவைச்சி தம்பரஞ்சொல் வளரும்பெ ருங்கவிக்கும் (எந்நா)

திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம்
முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆ. வெண்பா | 15 | சந்த விருத்தம் | 3 |
| லாவணி | 3 | கட்கா | 2 |
| ஆர்யா | 6 | ஸவாய் | 4 |
| பதம் | 38 | கலிப்பா | 1 |
| கண்ணிகள் | 8 | அபங்கு | 2 |
| விருத்தம் | 42 | ஆசிரியவிருத்தம் | 1 |
| கலித்துறை | 7 | | |

ஆ. மொத்தம் உருப்படிகள் 132
ஆ. சரித்திரங்கள் 22-க்கு உருப்படிகள் 612.

---

(a) பெயரைச்சொல்லும் (b) பெரியகீர்த்தி.

உ
கணபதி துணை.
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# (23) † குலச்சிறை நாயனார் சரித்திரம்.

ஆர்யா.

சீருயர்பாண்டியநாடு—தென்னாடதனுட் டிகழும்மகிழ் வோடும்
வாரிதியரு குறுபதியாம்—மணமேற்குடியிற் குலவிடுமதிபதியாம்

பதம்-இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி.

பல்லவி.

குலச்சிறையா ருதித்தார் குணத்தின் மிக்க (குலச்)

அநுபல்லவி.

நலத்துறை சிவனடி நண்ணிப் பணியும்படி (குலச்)

சரணங்கள்.

(1) குலத்திலோங்கின ரேனும் குலத்தில் நீங்கனரேனும்
நிலத்துட் சிவனை நோற்று நினைப்பவர்களைப் போற்றும் (குலச்)

(2) நலத்தையுடையரேனும் நலத்திற்கடையரேனும்
பலிக்கையாடியிணை பரவுவோர் தொண்டிற்கிணை (குலச்)

(3) பலர்வரினுமன்பரிற் பரிந்தொருவர்வரினும்
குலவுஞ் சோறமைத்துண்ணக் கொடுக்குந்தொண்டினிற்
றிண்ணக் (குலச்)

(4) பூதிமுதற்சாதனம் பொருந்திடுந்தபோதனர்
பாதமிறைஞ்சுந் தொண்டும் பரிவுடனணிந்தண்டும் (குலச்)

வெண்பா.

இந்தவிதந்தொண்டுசெயு மேல்வையினில் நல்லொழுக்கத்
துந்தினமே மேவிவருந்தொண்டருயர்—விந்தையுறும்

டாமதுரைத் தென்னவர்க்குள் மந்திரிக்கு முன்னவராப்
பான்மையுற்று வந்தனரன்பாய்

ஸவாய்.

மந்திரிமார்க்குத் தலைமையாகியும் வானதியின் சடையார்க்
கழலன்பு
மூந்துமனத்துடன் பாண்டி மாதேவி முதிர்தொண்டிற்குத்
தொண்டராகினர்முன்பு

பதம்-இராகம்-நாதநாமகிரியை-தாளம்-அடதாள சாப்பு.
செலியாத்ஸா லூனே யென்ற வர்ணமெட்டுப்போல.

பல்லவி

தொண்டி யற்றினர்

அநுபல்லவி.

அண்டர்கள்பணியய னன்னசம்பந்தர் (தொண்)

சரணங்கள்.

(1) கூடற்றென்னவனுடன் கூடவமணர்கள்செய்
பாடுகளைவிலக்கும் பரமனுனதால் (தொண்)

(2) பொய்ம்மையாம மண்மதம் போக்கியாருங்களித்து
மெய்ம்மை யாம்திருநீறு மேவச்செய்ததால் (தொண்)

(3) மன்னன்வழுதிசிவ மதத்தை மருவச்செய்து
தென்னன் மந்திரிகுலச்சிறையார் மறையோர் (தொண்)

விருத்தம்

ஆளுடைய பிள்ளையாருட் சிரமேற்கொண்டருக ரகந்தைநீக்கி
நீளுயருங்கழுமரங்கள் தனிலேற்றிப் பெற்றிபெறும் நீற்றில்யாரும்
கேளுறச்செய் தாசுரிமைக் குறுமதியோ டெந்தையரன்
கிளருஞ்சீதத்
தாளிணை யென்னுளுமன முறுந்தொண்ட ரிவர்க்கிணையார்
ஜகத்துள் மாதோ

குலச்சிறை நாயனுர் சரித்திரம்
முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆக ஆர்யா | 1 | ஸவாய் | 1 |
| பதம் | 2 | விருத்தம் | 1 |
| வெண்பா | 1 | | ஆ. 6 |

ஆக சரித்திரங்கள் 23-க்கு உருப்படிகள் 618.

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 24 † பெருமிழலைக்குறும்ப நாயனார் சரித்திரம்.

ஸாகீ

(1) சூதம் நெருங்குதலைத் தெங்குபலவு பூகம்
சூழ்ந்தவைகளும் வானுலாவும்
வீதிதொறும் நீற்றொளி விரியமேவிவிளங்கி விண்ணுலகிற்கு
மேலா

(2) நீதிநெறியின் மிகுங் குடிகள் நெருங்கிவளர் நிலங்களுயர்
மிழலைநாடு
மீதின் விளங்குந் தொன்மைப் பதியாயிலங்கும்பெரு
மிழலையென்றோர் நகரும் நாடும்

(3) அன்னதொன்மைத் திருப்பதிகணதிபராக வமர்மிழலைக்
குறும்பனாரே
என்னவுயரும் நாமமேற்றவராக யீசனிணையடித்தொண்டர்
கட்குநேரே

(4) நின்றுபணிந்தவர்கள் வேண்டுமப் பொருளெவையும்
நினைக்குமுன மளித்துத் தாங்கும்
வென்றிபெருங் குணத்தினைக் குறுநிலமன்னவரா விளங்குஞ்
சீர்த்தியால் மிகவோங்கும்

பதம்-இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம். தன்யோஹ
மென்றதுபோல

பல்லவி

தொண்டுசெய்தார் மிழலைக்குறும்பனார்-ஈசர் துணையடிமலர்களே
துணையென விரும்பினார் (தொண்டு)

அநுபல்லவி.

கண்டுமொழியுமையாள் கர்த்தன்பணியேயென்றும்-எண்டிசைக்
குழுயர்வா யேற்றந்தொழிலாமென்றும் (தொண்டு

சரணங்கள்

(1) தொண்டர்கள்பலரும் வந்தீண்டி—யுண்ணத்தொலையாவ
முதூட்டிடவேண்டி—யவர்
துண்டரீகமலாத் துதித்திருநிதிதந்து அண்டவர்தாண்மலரை
யவர்சிரம்வைத்து கந்து (தொண்டு)

(2) உலகிலடியார் திருத்தொண்டத்—தொகை யுரிமையுட
னுரைத்து விண்ட—நம்பி
யலகில்தொண்டின்மகிமை—யகத்திலுற்று மதித்துத்
தொலையாப்பவப்பிணியின் துன்பமதில் விதிர்த்து (தொ)

(3) பரவையர் மணவாளன்பாதம்—பணிந்தாற்—பாசிவத்தினிற்
குமாமோதம்—உண்டெனக்
கரமலரெடுத்தவர் கழல்கள் சாற்றித்துதித்துப்—பரவிநினைப்
பதே நற்பக்தியெனமதித்துத் (தொண்டு)

மத்தகோகிலம்.

(1) நம்பியாரூரர் நாமம்நாளும் நவின்றதாலணி மாதியாம்
இன்புறும் ஸித்திபெற்றதன் பினிருக்கு மேதுதி ஜோதியாம்

(2) ஈசனைந் தெழுத்தின் பமார்துணை யெப்பொருட்கு
முயர்ந்ததே
மாசகற்பொருள் நல்லுணர்ச்சியு மாகுமென்று துயர்ந்ததே

(3) சிந்தையிற் றெளிவோடுணர்ந்து நினைந்தினுஞ்சொல்
விவேகமும்
ஸந்ததம் பெறுமன்பர் மேவினர் தத்துவத்துறுயோகமும்

வெண்பா.

இத்தகைமைடாக யிவரிருக்கயீசர்கனிந்
தத்தினத்திலுந்தடுத் தாட்கொண்ட—பக்தர்நம்பி
யங்கயிலை சார்வதற்கு மஞ்சைக்களமமா
விவகிதர்தன் செய்கை சொல்லுவேன்

பதம்-இராகம்-பூகாரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

மிழலைக் குறும்பர் நண்ணினார் ஈசர்கழல்கள் மேவும் யோகத்தின்
கண்ணினார் (மிழலை)

அநுபல்லவி

சூழுமனந்தையொரு வழியினுற விடுத்துச்
சுந்தரனுருவமேதுணையெனவே யடுத்து (மிழலைக்)

சரணங்கள்

(1) வன்றொண்டர் கைலை[illegible]ப மறுதினமேவ நானே
யின்றிங்கமர்வதினி விருகண்களினுட்டானே
யொன்று மணியிலாத வுரிமையர் போல்வாழேனே
யென்றெண்ணி யோகத்தில்நானெட்டுவேனென்று
தானே (மிழலைக்)

(2) நாலுகரண மொத்து நல்லறிவு மேற்கொண்டு
காலும் பிரமநாடி வழிக்கருத்துச் செல்லுண்டுப்
பாலநடுவேயலமுன் பயின்ற வறையிலண்டு
மூலந்திறப்பமூல முதல்வர் பாதத்தைத் தண்டு (மிழலைக்)

பலச்ருதி விருத்தம்.

நம்பியாரின் கழலிணைகள் நம்பித் தொண்டு புரிந்தானருள்
பம்புமிழலைக்குறும்பர்கதை பரிவோடுரைக்கக் கேட்பாதை
யன்பின் படிப்பாரநுதினமும் அலகில்மக்கட் பேறுநிதி
யின்பம் பெருக வடைந்தானருளினிற் காளாக யிருப்பரன்றே.

பெருமிழலைக் குறும்ப நாயனார் சரித்திரம் முற்றிற்று

ஆக ஸாகீ 1. பதம் 2. மத்தகோகிலம் 1.
வெண்பா 1. விருத்தம் 1. ஆக 6.

ஆக சரித்திரங்கள் 24-க்கு உருப்படிகள் 624.

---

உ
கணபதி துணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 25 † காரைக்காலம்மையார் சரித்திரம்.

லாவணி. இராகம். இந்துஸ்தானிகாபி. தாளம்-ஆதி.
ஸாகியாகவும் பாடலாம்.

(1) சீர்பெருந் தோங்கி நல்லறத்தின் வழியில்நிதம் திகழும்
வணிகர்குடியும்

ஏர்வை யொடுயர்ந்திடுங் காரைக்காலதனில் இனிதுடன்
வந்துபடியும்

(2) மயில்கள் குயில்க ளனங்களும் விளங்கிடும் பொழில்
மலர்கள் வகைகள் பலவும்
நயன நகைமுகம் தனமெனவி ளேசொல நங்கைகளெனுங்
குலவும்.

(3) கடலொலி திரைகள் சுமந்தவளைகளக் கடிபொழிலதி
லுறையும்
இடைவிடாது வாணிப முறையது செய்வணிகர்குல
மிகநிறையும்

(4) அந்நகரினிலவ் வணிகர் குலதிலக ரானவரென்றும் புகழத்
தன்னிகரில்தன தத்தனுர்தவம் தான்பழுத்த தாத்திகழ.

பதம். இராகம்-முகாரி. தாளம்-ஆதி.

பல்லவி.

அவத ரித்தாளம்மை யடியவர் மகிழ்ந்திடப் படிமிசை (வந்தவ)

அநுபல்லவி.

பவமதை விலக்கிடும் படிவமாத் தனதத்தன்
தவமகிமையை நாட்டத் தழைக்கு மின்பம் பாராட்ட மழைக்
கருணையைக் காட்டவந் (தவதரித்)

சரணங்கள்.

(1) பூவுலகத்தவரும் தேவர்களுங் கொண்டாடக்—கின்னரர்பாட
ஓவிய மெனக் கண்டபேர்கள் மனமும்நாடக்—கலியுமோடப்
பூவிற் பொருந்துந்திரு மகளாம் வடிவையுற்றுப்
புனிதவதி யாரென வினிதாம் பெயரும் பெற்றுவந் (தவ)

(2) வாஸமலரிலுறு மாசறுமணம்போலே—ஒளியினலே
தேசுறுகதிருயர் ஆசறுமென் றின்மேலே-குணம்பொருந்தித்
தாசரெல்லாங் களித்துத் தாணியில் மகிழ்ந்திடத்
தவமுனிவர்கள் மிகு மூவகையிற் புகழ்ந்திடவந் (தவ)

(3) பங்கஜமலர்ச்சா ணங்காமுயர் நகமும்—விதுமுகமும்
சங்கார் பதமதி லுங்குலவியவகமும்—பொருந்திவாத்
தங்கு மிருவினையின் பங்கமுங் குலைத்திடத் தாணி
மூன்றிலுஞ் சைவத் தறநெறி நிலைத்திடவந் (தவ)

### வெண்பா.

வந்தவதரித்து மகிழ்ந்தபின் பெம்மம்மைக்குச்
சந்தக் குதலைமொழி தானிருந்தச்—சிந்தையினி
லெந்தைபிரான் சேவடியி லேமனது மேமகிழச்
சந்ததமும் தொண்டுபுரிந்தார்.

பதம். இராகம்-ஸாவேரி. தாளம்-ஆதி.

### பல்லவி.

மண்டலம் புகழக் கண்டுமொழியம்மை தொண்டுபுரிந்துவந்தார்
துன்பம் பொருந்தார் (மண்ட)

### அநுபல்லவி.

எண்டிசையுந்திகழத் தொண்டர் மனம் புகழ
மண்டுபவமகற்றக் கொண்டுபேரின்பமுற்ற (மண்ட)

### சரணங்கள்.

1. சீர்பொருந்தியமணிக் காரைக்கால் வணிகர் செல்வம் நிறைந்து
மிகச் செழித்தோங்க—வெந்தப்
பார்புகழு மிசையை யாருநந்தனதத்தன் நேர்குலம் நின்று
துயர்கவிநீங்கப்—பக்திமிகுந்து
மார்வமுமென்றும் பெருக—வெந்தையிடத்தி லன்பினால்
மனதுருகக்—கவலையின்றிச்
சாருங்குதலை மொழி சேரும்போதெல்லாம் விழிக
கணனுடையான் பெயரும் தினமும் சொல்லியுயரும் (மண்ட)

2. ஜனனமரணபவ ஜலதியிலுழலிந்த ஜன்மமும் நிலையலவென
மதித்துக்
கனகமலைவில்லுயர்க் கான் சரணகமலக்கதிநிலையென
மதியதிற்பதித்துப்
பனககங்கணமணியுங்—கரமதையும் புனையு பரக்குமணியும்
பொருந்துமவர்

வனஜபதமுஞ்சிர சினில்மதியமும்பா வனகனுருவமுன்னிப்
புனிதவதியுமின்னி (மண்ட)

3. ஆலமுண்டோர்க்குக் கைச்சிற்றாலயங்கோபுர மணிவிமான
மும் லிங்கமமையமைத்தே
கோலமுறுமலர்களாலேயர்ச்சனை செய்து குலவுமாற்கு
நிவேதனஞ் சமைத்தே—தம்முடன்
வாலைகளையுஞ் சேர்த்துப்—பக்தியில்மனம் மன்னியுமின்பம்
வார்த்துச்—செய்திடுமிதே
பாலைப்பருவமின்னக் கோலவிளையாட்டென்னச் சாலச்செய்
திடச்சொன்னத் தாமாஞ்சீரமுன்ன (மண்ட)

இராகம்-ஆனந்த பைரவி. தாளம்-ரூபகம்.

(முத்துபேட்ட என்ற க்ஷேத்திரியன் பதம் போல)

**கண்ணிகள்.**

1. குதலைசீர்க்கு பருவமீறக் குலவுமசையும் நடையுந்தேற
மதலைமொழியைக் கண்டன்பூர வளர்தனதத்தன்
மகிழ்ச்சியார

2. மானின்விழிக்குமையுமிட்டு மான்மதங்கலந்துயர்ந்த
பொட்டும்
ஞானவடிவினுதலில்மட்டும் நாடிடச்சேர்த்து
மணியிற்றொட்டு

3. பாதமதிற்கிங்கிணியுஞ் சேர்த்துப் பரிவுடனதிற் சதங்கை
கோர்த்து
மாநிலுக்கின்பம் குழையவார்த்து மகிழ்ச்சியோடதை
யிட்டுப்பார்த்து

4. குழையினிற் சுற்றுண்டலங்களாடக் குலவுங்கரத்திற்
கங்கணம் நாட
விழையும் நெற்றியிற் சுட்டிகூட வியலினையவர்களுங்
கொண்டாட

மகாராஷ்டக தாடியிற் பத வென்னும் தாடி

இராகம்-நாதநாமக்கிரியை. தாளம்-ஆதி

1. ஸௌந்தரமுறுமணி யுந்துலங் கிடப்பணி செந்திருவினுமணி
சேர்ந்திலங்க—வெங்கள்
ஸௌந்தரன்மீதுபணி சிந்தையுஞ் சேருமணி யுந்திகழ்ந்திடக்
கமழ்ந்துலங்க—வென்றும் [கணி
ஸௌகமதிலிருந்தாரே—துயர் அகமொன்றும் பொருந்தாரே

2. அடியவர்களைக்கண்டு மகத்தில் மகிழ்வு கொண்டுங்
கடிமலர்ப் பாதம்வைத்துக் கதித்தாரே
கொடியவினைகள் தண்டும் நெடியபவத்தை விண்டும
குணமாய்ச் சிவமாய்க கொண்டுமதித்தாரே—பிந்தக்
குவலயத்தினிற்சிறந்தார்—சைவசமயக் கொடியை நாட்டப்
பிறந்தார்.

3. சம்போ சங்கர ஸாம்பஸதாசிவ ஸத்வகுண நிலய மகாதேவ
கும்போத்பவநுத கோடி மன்மதஜித கோமளரூபக
ஸதாமாமவ—வென்றநு
தினமுந்துதித்தாரே யெவ்வுலகையும் சிவமென்று மதித்தாரே.

விருத்தம்.

‡ புனிதவதி யாரிந்த விதம்புகன்று புகழ்ந்திடவம் புவியாளுநம்
பனிதவதி யார்சுற்றத் தவர்க்கின்பம் பயக்கவெண்ணிப் பகரக்
கேண்மின்
மனிதவதியாரென்று கேழ்க்கிலெலாம் மகியளித்த மாதே
வன்று
னினிதவதியாரிங்கே யுறுவரவர் பதம்துதிப்பீ ரினியென்றாரே.

---

‡ புனிதவதியார்-நம்பன் இதவதியார்—ஈசனுக்கிதமானவள், மன் இது அது யாரென்று—சொல்லத்தக்க இந்தப்பொருள் அந்தப்பொருள் என வொன்று. இனிது, அவதியாரிங்கேயுறுவர்—இனியது, அவதியை யாரிவிடம் பெறுபர் என்று பிரித்தர்த்தம் கொள்க.

ஸவாய்.

1. இந்தவிதம்பக்தி யும்பொருந்தின்ப மிணங்கிப் பணியணி
வார்க்கழலன்பு
முந்திடவம்மை முலைபருத்துமணை முஞ்செய்பருவ
மமைந்திடப்பம்பும்

2. ஸாமுத்ரிகை லட்சணத்திற்குமேலாந் தாமுயரிக்கன்னி
கைக்குச்சமான
மாமருகனெங்கி ருப்பனெனச் சொல மாமகிழ் நாகைக்
கதிபதியான

3. நிதிபதி மைந்தன் பரமதத்தற்குத்தம் நேத்திரமாங்கன்னி
நீரளிப்பீரே
அதிபதியே யென்றுரைந்திட நல்ல ததுவென்று
பத்ரிகை யும்விடுத்தாரே.

4. பத்ரிகை சேர்ந்திடப்பார்த்து நிதிபதி பாலகனோடுங்
காரைக்காலமர்ந்தார்
சுத்துமுறும் நாளில் மன்றலின்பந்தர் துலக்கிடவே நன்மணை
மும் புரிந்தார்

பதம். இராகம்-வஸந்தா. தாளம்-ரூபகம்.

பல்லவி.

மங்களம் பொருந்து மிங்கிதமணஞ் செய்தார் தனதத்தன்
மகட்கும் நிதிபதி மகற்கு மகிழ்வுறச் சகத்திலனைவரு
மிகத்தினிதுபெற (மங்களம்)

அநுபல்லவி

அங்கவர்களெவர்களுங் கொண்டாடவும் புனிதவதி பரமதத்தன்
கூடவும் (மங்களம்)

சரணங்கள்.

1. வாழைகமுகுதோரணங்களையுங்காட்டி—மிகுமழகு
ஜ்வலித்திட
வண்மை பொருந்தும் நற்கூந்தல்களுமாட்டி—மேற்கட்டி
களுங்கட்டித்
தாழ்வுயர்திரு மணையமைத்துவாத்—தங்கும் ரஸக்குண்டு
தொங்கிடவும் சரத்
தாழுமதியொளியெனவும் ப்ரபைபெற அழகுறும் பந்தரைச்
சமைக்க மகிழ்வுற (மங்களம்)

2. கின்னர் தும்புரு நாரதரும்நாணச்—செய்துயர்ந்து
முழங்கிடும்
நன்னயமங்கல வாத்தியமுந் தோணச்—செய்திடவுமதிர்ந்திட
மின்னு மங்கையர் சோபனங்கள் பாட விளங்கிடுமுயர்
சங்கீதங்களுங்கூடப்
பன்னுமரம்பையெனவும் நடனமாடப் பார்ப்பவருக்கெல்லா
மேற்குங்கலியோட (மங்களம்)

3. வேதியர்களோமம் வளர்த்து மிகஜ்வலிக்க—மஞ்சளுமமையு
நூலாற்
கோதிற்கங்கணந் தரித்து மந்திரமொலிக்க—மங்கிலிய
தாரணம்
கோதையர் கழுத்திற் குணமுடனே பூட்டக்
கூறும் தட்சிணைகள் கொடுத்திட யதேஷ்ட
மாதர்கள் பாலிகை தெளித்திடவும் வாட்ட மன்னியெவரு
மன்பொடு கண்களும் நாட்ட (மங்களம்)

விருத்தம்.

திருக்கல்யாணஞ்செய்து சிறந்தபின்பெம்மைக்குச் சீதனங்கள்
பெருக்கவளித்திடமகளைப் பிரியமனம்வருந்தியவர்ப்பிரிபாதகத்தே
இருக்கவொரு மாடமாளிகையொன்றைத் தனதத்த நிலங்கச்
செய்யத்

திருக்குலவு நாகைக்கு நிதிபதியெல் லோருமொன்ருய்ச் சார்ந்தார் தாமே.

தோடையம்.

1. புனிதவதியாரன்பூண-அவர் புருடருக்கான செய்து தோண இனியவடியவரைக் கண்டு—அவர்க் கேற்கச் செய்தனர் மிகுந்தொண்டு

2. தொண்டரை யீசரென்று நாடி—அவரைத் தொழுதிருந்தன ரன்புகூடி—அன்பு கொண்டவர்க்கமுதையளித்தார்—யின்பங் குலவிட மனதெக் களித்தார்

வெண்பா.

சந்ததமுந் தொண்டுசெயித் தையல்கணவர்கையிற்
சந்தவிரு மாங்கனியோர் சற்புருடர்—தந்திருக்க
வம்மை புனிதவதி யாரிடத்திலே கொடுக்கத்
தம்மகத்துள் வைத்துமகிழ்ந் தார்.

ஆரியா.

1. புனிதவதியன்பு தெரியப்-புனையார் செஞ்சடையினர் மகிழ்வு விரியப் பனகமணிந்தவர் நேரே-பகரோ ரதிதி வடிவாய் வருவர்சீரே

2. அடியவரடியெமை வீழ்ந்தார்—அறநினை மறமது செயவகை மினிதாழ்ந்தார் கடிமலர் கொடுமடி பெய்தார்-கடுமாவினைகளினையே பெரிது கொய்தார்.

பதம். இராகம்—ரீதிகௌளை. தாளம்—சாப்பு.

பல்லவி.

அமுதூட்டினரே யெங்களம்மை நேரே

அநுபல்லவி.

இமையாசல குமாரிக் கினியவருக்குப்பூரித் (தமுதூட்டினரே)

சரணங்கள்.

1. ஆனந்தக்கண்ணீராட்டி யடிகள் விளக்கிக்கூட்டி
மோனமாயெய்பிராட்டி முக்திவழியைநாட்டி (அமுதூட்டி)

2. கண்டவர்கட்குக்கூடுங் கடிய வினைகளோடும்
அண்டர்நாதவென நாடும் அரியபக்தியினோடும் (அமு)

3. கறிசமைக்கவுமந்தக் கணமுடியாதிருந்த
நெறியாற் கணவன்தந்த நிமலமாங்க னிபொருந்த (அமு)

4. மாங்கனியிரண்டிலொன்று மல்குபோன்பினொடன்று
பாங்குடன் கொணர்ந்தேனின்று பண்புடன் புசிப்பீரென்று
(மமுதூட்டி)

விருத்தம்.

அறுசுவைகளொடுமமுதை யருந்தியீச னன்புறுபு னிதவதியாரில் விட்டேகப்
பெறுமையுறு பாமதத்தன் வெளிச்சென்றில்லிற் போந்திடப்பு னிதவதியாருபசரித்துச்
சிறுமை துறந்த முதளித்துக் கனிமற்றொன்றைத் தேரவுண்ணுச் மெனவளிக்க வவருமுண்ண
செறியருசி மிகுத்ததினல் மற்றொன்றீயச் செல்லெனவுள்ளே யம்மைசெப்புவாரே.

பதம். இராகம்-நாட்டைக்குறிஞ்சி. தாளம்-சாப்பு

பல்லவி.

ஒருமாங்கனி தருவா யுய்யவருவாய் (ஒரு)

அநுபல்லவி.

பெருமாதவஞ் செய்யுங் குருமாதவர்க்குந்தன்
பெருகும் கருணைகாட்டி வருமன்பனே சீராட்டி (ஒரு)

சரணங்கள்.

1. ஸா ரஸதளநயனஸுக ஜிதமதனபாஸ தாஹாஸ பரமதாஸ
ஹ்ருதயவாஸ ஹாஸஸுகுணஸ தயவாஸ கலமுநிஸா
தகஹித— ஸாதர
மொடுனை யேதுணையென்றெண்ணி யேதழுவுமெனை
யாதரித்து—மதித்து (வொருமாங்கனி)

2. நம்புமடியவர்க் கின்பமுதவியுன் றன்பதமுதவும் நண்பனே
அவர்ப் பம்புமிருவினைத் துன்புமகன்றிட வன்புமிகுந்தரு
ளும்பரனே சம்போ (ஒரு மாங்கனி)

3. காதல் புகட்டுமென் னுதர்கணவரு மேதகுகனிதாதாவென
வோதிட நலது வேதருவனென வோதுமொழிபொய்யா
காதபடி யென்றன்னுத நீத (வொருமாங்கனி)

மத்தகோகிலம்.

1. என்று மம்மைமவ ருந்திடக்கையி லீசரோர்கனியிந்திட
வன்றெடுத்ததை நன்றுநன்கண வன்றனுக்கிந்து தாழ்ந்திட

2. அந்தமாங்கனி முந்தியீந்ததினுங்கிதிப்பினையார்ந்ததே
எந்தவாறிது வந்ததேந்திழை யேயுரைப்பை நீசார்ந்ததே

3. என்றுதன்கண வன்பகிர்ந்திட வேந்திழையுரை செய்யுமே
நன்றுநம்பெரு மான்கருணையி னுல்வந்ததாற்றின் றுய்யுமே

4. என்னவோதிட வன்னவன் பொய்யென் றெண்ணி நீநிசம்
விள்ளுவாய்
அன்னமே சொன்ன வார்த்தையும்நிச மாகில்மற்றொன்று
கொள்ளுவாய்.

விருத்தம்.

மனக்கணவ னுரைக்கவம்மை யினிதாய்மற் றொன் றீவீரென்றானை
நினைத்திடவுங் கையில்
வனப்புடனோர் கனிவரவுங் கணவர்கையில் வாங்கவது காணுமற்
சென்றதாலே
தனத்துயரும் பரமதத்தனிதனைக் கண்டித் தையலரும் தெய்வ
மென்று தானுட்கொண்டு
கனத்ததிர வியந்தேடக் கப்பலேறிக் காரைக்காலமையை
விட்டுக் கடந்தார்தாமே.

கலித்துறை.

இந்தவிதஞ்செல வமையார்கண வரிலேயதினாற்
சந்த தமுமடி யாரிடத்தன்பு தரித்து நின்றும்
எந்தைபி ரானடி தாழ்ந்துவணங்கி யிலங்கிடவே
பந்தமுறுபவம் நீங்கக் கருத்திற் பதித்தனளே.

அபங்கு.

1. இந்தவிதமிங்கிருந்திடவே-அங் கேகும்வணிகர் துலங்கிடவே
சிந்துயர் பணங்களும்தேடிப் பாண்டி—தேசத்தி லோரூர்நாடி

2. பரமதத்தன் வேறோர்மணமே—செய்து பாங்குடனிருக்கவுங்
குணமே—பொருந்தித்
தாமுயர் பெண்குழவிபெத்தான்—புனி—தவதியா ரெனும்
நாமம் வைத்தான்

3. இவ்வணமிங்கிருக்குஞ்சேதி-தன தத்த னிடமும் பந்துவிடமு
மோதி—நிற்கச்
செவ்விபெறும்புனிதவதியா-ரினைப்பாண்டி தேசப்பதியிலவர்
பதியார்ந்—திட

4. வெண்ணியம்மையினைச்சிவிகை-யினி லேற்றிவரவு முத்துக்
கவிகை—யுடன்

வண்ணமுறுமப்பதிவந்தார்—அம்மைகண வருக்குச்
சொல்லிடவுவந்தார்

விருத்தம்.

பாமதத்த னிந்தமொழி கேட்கவுமப்பதியே
பகர்மணஞ்செய் பத்தினியு மதன்குழவியொடுமா
விரையமையி டம்வந்து மவர்விரைந்து வணங்க
விந்தையீ தெனவுறவோர் வினவிடமுன்னிகழ்ந்த
தாமுயர்சங்கதியையவர்க் குரைத்திடவித்தையல்
தகைம்பூதச் சாட்சியாய்ச் சரியாந்தெய்வமெனப்
பாவிடச்சுற் றத்தவரும் பயந்துமதி சயிக்கப்
பார்புகழ்பு னிதவதியார் பறந்திதுபகர்வரே.

வெண்பா

தன்கணவன் றன்னைத் தலைவணங்கத் தான்விதியோ
வென்குறையோ யென்செயலோ யென்செய்வேன்—புன்கணமா
மிச்சென்ம போக்கியென்றற் கீசாநற்பேய்வடிவம்
நச்சரவா தாவெனச் சொன்னார்.

பதம். இராகம்-கௌளிபந்து. தாளம்-ஆதி.

பல்லவி.

பேய்வடிவந்தாருமென்றார் பவப்பிணியைத் தீர்க்கத் தீர்க்கப் (பேய்)

அநுபல்லவி.

தாய்முலைப்பாலயின்று தரணியெலாஞ் சுழன்று
நாயேன் றிரிந்தென்றென் றும் நடித்ததுபோதுமின்று (பேய்)

சரணங்கள்.

1. கணவன் வணங்கப்பெறும் கடுந்துயர் நீங்கச்சுரும்
பணவுயர் கொன்றையுறு மானேசேவித்தேன் வெறும் (பே)

2. சடுத்தங்கள் பலபேசிச் சகத்துளோரெனையேசி
விடுக்காமலே யான்யாசித் தடுக்கும் புதியவாசிப் (பேய்)

3. காலன்றனையடர்த்த சீலவுனையடுத்தங்
கேலவெனைவிடுத்த தாலேவுயர்கடுத்த (பேய்)

4. ஹரனே திரிபுரசங் கரனே மனோபவ
ஹரனேயெனையாளுந்தற் பரனேசங்கரனே வரனே (பேய்)

பத்தியம்.

புனிதவதியாரினிது வேண்டுமப்பேய்வடிவு
புரமெறித்தவ ரருளி னலமரமே
மனிதாருகுளவருக் கீததிசயமென மனம்
மன்னியும்மயங்கியும் விலகிவரவே
வனிதையர்க் குறவுதாய் தந்தையர்கள் கண்டுபய
மருவியே மனம்விட்டு நீங்கியுறவே
பனகமணியீசருள் பரிவுடன் பெற்றுமவர்
பணிவிடை யிடத்ததாய மைபகரவே
முனிவார்கள் தபஸியர்கள் முதலோர்புகழ
முப்புர மெறித்தவரி னகமுமகிழக்
கனிவுடன் சுரர்மலர் பொழிந்து திகழக்
கமலேசிகர் புனிதவதி வாழிதாமே.

விருத்தம்.

பிறந்தமொழி யென்றெடுத்துப் பின்னுரையாலெனவடுத்துப் பேசுகின்ற
சிறந்தவற்பு தத்திருவந் தாதியம்மை பேய்வடிவிற் றெரியச் சொல்லி
மறந்துதனையன்புற்றுக் கிளர்ந்தென்ற துறையுத்த மரென வோதும்
அறந்திகழ்வெண் பாவடங்கு மிரட்டைமணி மாலையுமே யறைந்தார் மன்னே.

### வெண்பா.

அம்மைத் திருவுருவின் கார்தானறிந்திடிலென்
றம்மையாற் குத்தெரிவித் தாற்போதும்—மெய்ம்மையிதென்
றங்கவுடம் புங்குலுங்க வங்கயிலை யங்கமர்ந்து
சங்கரி ணங்கநடந் தார்.

### பதம். இராகம்-கானடா. தாளம்-ஆதி.

### பல்லவி.

சென்றார் அம்மை கைலைமலையை நோக்கிச் (சென்றார்)

### அநுபல்லவி.

கன்றிமனதுருகிக் கருணைவிழிநீர் பெருகிப்
புன்றயாமுந்தறுகிப் போக்கிடவானருகிற் (சென்றார்)

### சரணங்கள்.

1. வடதிசைத் தேசமெல்லா மனத்ததிகவேகம் சொல்லத்
திடமுடனடந்து செல்லத் தீயபவந்தனைவெல்லச் (சென்றார்)

2. சங்கரர்தனையடுக்கத் தலையதினா லேநடக்கப்
பங்கவினையுங்கெடுக்கப் பரிவுடனின்பந்தொடுக்கச் (சென்)

3. சங்கரிபேயுருக்கண்டு சம்போயீதென்னென விண்டு
தங்கவரன் நம்பள் தொண்டு தனிசெய்யிவளெனப் பெண்டு
(சென்றார்)

### விருத்தம்.

கைலைமலைதனையடையக் கங்கைவேணிக் கர்த்தனம்மைவாவென்று
கழறக்கேட்க
வெயில்மூன்று மடர்த்தவப்பா யேழைவந்தேன் எனவம்மை
யுரைத்துநிற்க யெந்தையீசர்
குயில்மொழியைப் பார்த்துனக்குக் குறித்தயாவுங் கொள்கவெனக்
கேட்டுநிற்கக் குவியக்கைகள்

அயிலெடுத்தகந்தனுக்கு மப்பனேயென் றடிமலரைத் தொழு
தம்மையறைகுவாளே

கலித்துறை.

இறவாதவின்பவன் பெற்குத் தரவேண்டு மெப்பொழுதும்
பிறவாமைவேண்டு மடியாள் பிறந்திடிற் பேசுமுன்னை
மறவாமை வேண்டுநீ யாடுமோர் நர்த்தன மன்னிடப்பின்
உறவோடருகினிற் பார்த்திடவேண்டுமென் றோதினளே.

வெண்பா.

ஓதிட வும்மைமை யுமக்களித்து மேகளித்தோம்
மாதிருவா லங்காடுமன் னுமென்ற—நாதிசொலத்
தந்தையடி வீழ்ந் தமையுந் தன்றலையாலே நடந்து
தாங்குணிவோடப்பதி வந்—தாள்.

ஆர்யா.

அமையுமகிழ்ந்தங் கமர—வரனார் திருவடியின்மீதுமனமுமுற
இமையாசலமாதநேசன்—இனிதாய்நர்த்தன முமேசெய்
தனரீசன்

பதம். இராகம்-தோடி. தாளம்-சாப்பு.

பல்லவி.

நடனமாடினார் அயி நயவிதான நயமுறவான் (நடன)

அனுபல்லவி.

புடவியிலுயாலங்காட்டில் போற்றுமமைக்குத்தன்கோ
லங்காட்டித்
தா ததிமிதகிட தகஜணுததிம்தா தகததிமிதகிட தா (ததிமிதகிட
தகஜணுததிம்தா) தக ததிமி திமிதகிட ஜணுதக
தா தா திம்தா திமிகிட தாதிமிதக தாஜணுதக

தத்தளாங்கு தத்திமிதக தகதிகதக ததிங்கிணத்தோம்
தளாங்குதகததிங்கிணத்தோம் தகததிங்கிணத்தோம்
ததிங்கிணத்தோம் என்று (நட)

சரணங்கள்.

1. நந்திமத்தளமடிக்கத் தும்புரு நாரதரிசைபாட—அதின்
நயங்கண்டருகி லரியும்மதிப்பை நாடியுந் தாளம்போடக்
கந்துகநடையெனவுந் தாக்கிக் கடும்விரைவொடும் ஜதியுண்
டாகக்
சிந்துநயனத் தளியுந்தேக்கிச் சிலம்பொலிமிகும் பாதந்
தூக்கி (நட)

2. கொடுங்கைதிரங்கி நரம்பெழுந்தெனக் கூறும்பதிகத்தாலே
—அம்மை
குணமுடன் பாவியுமருகுறக் குஞ்சிதபாதமேலே—நிற்கச்
சங்கார்வெகு விநோதங்காட்டித் தாமரைமுகந் துலங்கநாட்டி
யங்குலவிடக் கதியும்நாட்டி யகமகிழ்ந் தருளும்பரமேட்டி
(நட)

3. எட்டியிலவ மீகை சூரை யெனும்பதிகமும்கூட—அம்மை
யியப்பியென்றைக்கு மருகினிலுற விலங்குமின்பமுநாட
மட்டில்லா முனிவரருங்கூடி மகிமையின் றுங் காணுமல்வாடிக்
கிட்டரும்பதம் தந்தோமென்றுபாடிக் கேளுறுமம்மைக்குச்
சொல்லிக்கொண்டாடி (நட)

பலசுருதி விருத்தம்.

நிருத்தனம் பார்த்துமென்றும் நேத்திரானந்தம் பொங்குந்
திருத்தமாங் காரைக்காலின் திகழ்வுறுமம்மையின் காதை
யருத்தியாய்க் கேழ்ப்போரத்தை யநிசமும் படிப்போர்க்
கெல்லாம்
பொருத்தமாய் நினைக்கும்பேறெப் போதுமே கிடைக்குமாதோ.

காரைக்காலம்மையார் சரித்திரம் முற்றிற்று.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| லாவணி | 1 | கண்ணிகள் | 1 | ஸவாய் | 1 | மத்தகோகிலம் | 1 |
| பதம் | 8 | பத | 1 | தெண்டி | 1 | கலித்துறை | 2 |
| வெண்பா | 5 | விருத்தம் | 9 | ஆர்யா | 2 | அபங்கு 1 பத்தியம் | 1 |

ஆக உருப்படிகள் 34.

ஆக சரித்திரங்கள 25-க்கு உருப்படிகள் 658.